# வாடாத இளமையழகு
# வாராதோ விரலசைந்தால்!

மேனி யெழிலைப் பராமரிப்பதே உங்களுக்கழகு! இளமை மாறாத மெருகுடன் மிளிர ஹிமாலயா புக்கே ஸ்நோ உபயோகியுங்கள். சோர்வுற்று வரண்ட சருமங்கூட துளிர்த்திடும் புதுமலர்ச்சியோடு தள தளப்புடன் விளங்கக் காண்பீர்கள். வெயில், புழுதிக் காற்று ஆகியவற்றிலிருந்து மேனி யெழிலைக் காப்பதோடு, முகப்பருக்களும், கருக்கல்களும் வராமல் தடுக்கிறது ஹிமாலயா புக்கே ஸ்நோ. உங்கள் மேனி யெழிலுக்குத் தக்க பராமரிப்பு அளியுங்கள். இளமை மாறாத அழகைக் கொஞ்சியழைப்பது....




## ஹிமாலயா புக்கே ஸ்நோ






HBS. 22-30 TM

## கோலினாஸ்
## சூப்பர் ஒயிட்
## டெண்டல் க்ரீம்
## இந்தியாவின்



# புன்னகை ராணியின்

## பற்பசை!

ஆம், அவள் தைரியமாகச் சிரிக்க முடியும். அவளுடைய பற்கள் பளபளக்கும் வெண்மையானவை. அவள் மூச்சில் மணம் கமழ்கின்றது. அவள் இந்தியாவின் புன்னகை ராணி—பல்லாயிரக் கணக்கான போட்டியிட்டவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவள். அவளுடைய புன்சிரிப்பின் அழகைக் கெடுக்கக்கூடிய சொத்தைப் பற்கள் அவளிடமில்லை. ஏனென்றால், மூன்று சுத்திகாரிகளையுடைய, சிறந்து அரைத்து, பல்லிடுக்குகளிலிருந்துகொண்டு பற்சிதைவை ஏற்படுத்துவதற்குக் காரணமான கிருமிகளை விளைவிக்கும் ஆகாரத் துணுக்குகளை அறவே அகற்றக்கூடிய கோலினாஸ் சூப்பர் ஒயிட் பற்பசையை அவள் உபயோகிக்கிறாள்.

கோலினாஸ் சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீமை உபயோகியுங்கள் — இந்தியாவின் புன்னகை ராணியின் பற்பசை இதுவே! பற்சிதைவை அறவே ஒழிக்கவும், உங்கள் மூச்சில் நறுமணங்கமழவும், உங்களுக்கு வெண்மையான, பளபளக்கும் பற்களை அளிக்கும் பற்பசை இதுதான்.

உங்கள் பல் டாக்டர் கூறுவார்—வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிகத் திருப்தியை அளிக்காது.



# உங்கள் வீட்டில் இருக்கின்றதா?




ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்
குழந்தைகளின்
எல்லா வயிற்று
உபாதைகளுக்கும்.




ஸி. ஏ. க்யூ
சீதளம், ஜலதோஷம், வலிகள்
மற்றும் ஜுரங்களுக்கு.



எக்ஸ்-மா
படை, வண்ணாரப்புண் மற்றும்
எல்லா சரும கோளாறுகளுக்கும்.

## ஸ்பென்ஸர் & கம்பெனி லிட்.

ரசாயண மருந்து தயாரிப்பாளர்கள்

1/153 மவுண்டு ரோடு, சென்னை-2. இந்தியா

SC-28-3A

பிலவ, புரட்டாசி 8




செப்டம்பர் 24, 1961

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.



மலர் 21 | இதழ் 8

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# நடுநிலைமையின் அவல நிலை

உலக முழுவதிலும் விஷத்தைப் பரப்புவதில் ருஷியாவுக்கு உள்ள ‘பேராற்றலை’ அமெரிக்கா ஒப்புக்கொண்டு விட்டது; எனவே இனி ருஷியாவையும் மிஞ்சக்கூடிய முறையில் அணு ஆயுதங்களைச் செய்து தன் பலத்தை நிலைநாட்டிக் கொள்ள வேண்டுமென அமெரிக்கா கருதுகிறது.

அணு ஆயுதப் போட்டியினால் உலகுக்குப் பேராபத்து விளைவிக்காதபடி இந்த வல்லரசுகளைத் தடுத்து நிறுத்த வேண்டியதே இன்றைய பிரச்னை. பனிப்போரில் நேரடியாக ஈடுபடாத நடுநிலைமை நாடுகள் தாம் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்.

நடுநிலைமை நாடுகளின் பிரதிநிதியாகவே நேரு அவர்கள் மாஸ்கோ சென்றார். ஆனால் அவர் அணு ஆயுதப் பிரச்னைக்குப் பரிகாரம் எதுவும் காண முயலவில்லை. ருஷியாவின் மகத்தான சாதனைகளைக் கண்டு மலைத்துப்போனார்; மலைச்சிகரம் ஒன்றுக்குத் தம் பெயரைத் தந்தார்; தாம் குருஷேவுடன் சமாதானம் பற்றிப் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருக்கும்போதே, ருஷியா மேலும் அணுக்குண்டுச் சோதனை நடத்தும் அதிசயத்தைக் கண்டார்; வெறும் கையோடு இந்தியாவுக்குத் திரும்பினார்.

உலக சமாதானத்தை நிலைநாட்டுவதில் நேரு அவர்களால் எதுவும் தற்போது சாதிக்கமுடியாது என்பது நிச்சயமாகி விட்டது. ஒரே சமயத்தில் அமெரிக்கா, ருஷியா இரு வல்லரசுகளின் தயவையும் நாடிவரும் இந்திய சர்க்கார் தனது கருத்துக்களை அந்நாடுகளிடம் எப்படி நிர்ப்பயமாக எடுத்துச்சொல்ல முடியும்? தன்னுடைய ஆன்ம பலம் இழந்த நிலையில் வல்லரசுகளை எப்படித் திருத்த முடியும்?

உலகமெல்லாம் அழிந்து விடக்கூடும் என்ற அபாய நிலை ஏற்பட்டிருக்கும்போது நேரு அவர்கள் இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தையும், அதற்காகத் தாம் வகுத்துள்ள திட்டங்களின் நிறைவையும் குறித்தே தீவிரமாக இருக்கிறார். எனவே, இந்தத் திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்காக, கிடைக்குமிடங்களிலிருந்தெல்லாம் கடன் பெறுவதில் முனைந்திருக்கிறார். அமெரிக்க டாலரைப் போலவே ருஷியாவின் ரூபிள் நாணயத்தையும் இரண்டு கைகளாலும் வாங்கிக் கொள்ளத் துடிப்பாக இருக்கிறார். டாலர் மூட்டை, ரூபிள் மூட்டை இரண்டையும் பக்கத்துக்கு ஒன்றாகச் சுமந்தபடி நடுநிலைமை என்னும் கயிற்றில் கழைக்கூத்தாடுவது சிரமமான காரியம்தானே?

கஷ்டப்பட்டு நடுநிலைமை வகித்தாலும் அதற்கு மேல் ஒன்றும் செய்ய முடியாது. நடுநிலைமை என்பது எந்த ஒரு கட்சியுடனும் சேராமலிருப்பது மட்டுமல்ல; தவறு செய்யும் கட்சிக்கு அதனை எடுத்துக் காட்டி, திருத்திக் கொள்ளுமாறு வற்புறுத்துவதும் நடுநிலைமைதான். இதனால் அக்கட்சியின் அதிருப்திக்கு ஆளானாலும் அதைப் பொருட்படுத்தாமலிருக்கும் தர்ம பலமும் வேண்டும். நேரு சர்க்காரோ எந்த வல்லரசையும் பகைத்துக் கொள்ளாமலே நடுநிலைமை விருதை வகிக்க ஆசைப்படுவதால் உண்மையை உள்ளபடி எடுத்துச் சொல்லித் திருத்த வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தைக் காற்றில் பறக்க விட்டு விட்டது.

இதற்காகவே கடன் அளிக்கும் நாடுகளிடமெல்லாம் இச்சகம் பாடுகிறோம். காந்தி அடிகள் வற்புறுத்தி வந்த அந்தரங்க சுத்தத்தைக் கைவிட்டு விட்டு, நாடகம் நடிக்கிறோம். ருஷியா சென்ற பிரதமர், சோவியத் சாதனைகளில் புளகாங்கிதம் அடைந்த அதே சமயத்தில் அமெரிக்கா சென்ற ரிஸர்வ் பாங்கு கவர்னர் ‘எங்கள் நாடு சோஷலிஸ நாடல்ல; எங்கள் நாட்டில் தேசிய மயமாக்கப்பட்ட தொழில்கள் மிகவும் சொற்பமே’

என்றெல்லாம் அமெரிக்காவுக்கு உவப்பாகப் பேசி யிருக்கிறார்.

காந்தியடிகள் இன்று உயிரோடிருந்தால் இந்தக் கபட வேஷங்களையும், போலித்தனத்தையும், கொள்கைக் குளறுபடிகளையும் அனுமதிப்பாரா? உலக ஆரோக்கியத்தை எல்லாம் கெடுத்து வரும் குற்றவாளிகளுடன் இந்திய சர்க்கார் இழைந்து உறவாடுவதைப்பொறுப்பாரா? இந்தத் தேசம் அதன் பண்புக்கு முரணான முறையில் ஏதோ முன்னேற்றம் அடைந்து விடப் போகிறது என்ற எண்ணத்துக்காக, தவறு செய்யும் நாடுகளை நம் நாடு அண்டி வாழ்வதை அவர் ஒப்புக் கொள்ளுவாரா? அண்டிப் பிழைக்கும் நிலையை அடைந்ததால் தர்மத்தை அழுத்திச் சொல்ல முடியாத அவல நிலையை இந்தப் புனித நாடு அடைவதைத்தான் அவர் சகித்துக் கொள்ளுவாரா? இன்று காந்திஜி இருந்தால் தர்மத்தின் பெயரால் வல்லரசுகளுக்குக் கட்டளையே யிட்டிருப்பார்.

நமது நேரு சர்க்கார் சமாதானத்தைப் பற்றிச் சொன்னால், வல்லரசுகளுக்குள் போர் மூண்டால் நமக்குக் கடன் கிடைக்காது என்ற சுயநலத்துக்காகவே நாம் சமாதானத்தை விரும்புகிறோம் என்றல்லவோ உலகம் நினைக்கும்? இலட்சியம் சமாதானமே எனினும், நமது நோக்கத்தில் நேர்மையும் நாணயமும் இல்லாதபோது அதை எப்படி நிறைவேற்ற முடியும்? அறத்தின் அடிப்படையில் வேரூன்றிக் கட்டளை இடும் நிலையில் இன்றைய இந்தியா இல்லை. கடன் பெறும் யாசகர்களைப் போல் பலமிழந்து வேண்டுகோள் விடுக்கத்தான் நம்மால் முடியும். ஆனால் அரக்க பலம் தர்மத்தின் பலத்துக்குத்தான் கீழ்ப்படியும். "நாங்கள் எங்கள் வாழ்வுக்கே போராடிக் கொண்டிருக்கிறோம். நீங்கள் உங்கள் அபிவிருத்தித் திட்டங்களையே பெரிதாக எண்ணிச் சமாதான உபதேசம் செய்கிறீர்களே!" என்று மேல்நாட்டு வல்லரசுகள் நம்மைக் கேட்கக் கூடுமல்லவா?

உண்மையில் இன்னொரு போர் மூண்டால் அதனால் வல்லரசுகளின் வாழ்க்கை மட்டுமின்றி நமது வாழ்க்கையும் நாசமாகிவிட வேண்டியதுதான். தூக்குத் தண்டனை பெறச் செல்பவன் தித்திப்புப் பலகாரம் கேட்பது போலத்தான் இருக்கிறது நமது யாசகமும்.

# என்ன சேதி?

## பெதிக் லாரன்ஸ்

இந்தியா ஒரு நல்ல நண்பரை இழந்துவிட்டது. லார்டு பெதிக் லாரன்ஸ் காலமானார் என்ற செய்தியைக் கேட்டு இந்திய சுதந்திர சரித்திரத்தை அறிந்தவர்கள் வருந்தாமல் இருக்க மாட்டார்கள். 1947-ல் இந்தியாவுக்குச் சுதந்திரமளிக்க வந்த பிரிட்டிஷ் தூது கோஷ்டிக்குத் தலைமை வகித்து, இந்திய சுதந்திரத்தைக் காரிய சாத்தியமாக்கியவர் பெதிக் லாரென்ஸ். 1945-ல் நடைபெற்ற தொழிற் கட்சி மகா நாட்டுக்கு வந்த இந்திய தொழிற் சங்கப் பிரதிநிதிகளை, "இந்தியா சுதந்திரம் பெறுதவரையில் உலக சுதந்தரம் என்பது பற்றிப் பேசுவதில் பொருள் இல்லை" என்று உணர்ச்சியோடு கூறி வரவேற்றார்.



பெதிக் லாரென்ஸ், கொள்கைக்காக எதையும் தியாகம் செய்யும் நெஞ்சுறுதி படைத்தவர். நேர்மையும் சீலமும் கொண்டவர்.

ஒரு சமயம் அவர் ஆசிரியப் பொறுப்பை ஏற்று நடத்தி வந்த ஒரு பத்திரிகை கடன்பட்டு, மூடும் நிலைமை அடைந்து விட்டது. பத்திரிகை மூடப்பட்டாலும், கடன்காரர்களுக்குத் தமது சொந்தப் பணத்திலிருந்து கொடுத்துக் கடனைத் தீர்த்தாராம் பெதிக் லாரன்ஸ்! இப்படிப்பட்ட உத்தமருக்கு நமது அஞ்சலிகளைச் செலுத்துகிறோம்.

## ஆதாரக் கல்வி

அந்நாட்களில் காந்தி மகானின் ஆதாரக் கல்வித் திட்டத்தை ஊக்கமாக இருந்து வகுத்துக் கொடுப்பதில் பெரும் பங்கு எடுத்துக்கொண்ட டாக்டர் ஜாகிர் ஹுசைன், இப்போது ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார். "ஆதாரக் கல்வி என்ற பெயரில் நாட்டில் பெரும் மோசடி நடக்கிறது" என்கிறார். ஜாகிர் ஹுசைன் கல்வி யுலகில் பெரு மதிப்பைப் பெற்றவர். அவர் மேற்கண்டவாறு பேச வேண்டுமானால் ஆதாரக் கல்வி என்ற பெயரில்




எவ்வளவு ஊழல்கள் நடைபெறுகின்றன என்பதை யாரும் ஊகித்து அறிந்து கொள்ளலாம்.

ஆதாரக் கல்வித் திட்டத்தில் உண்மையான பற்றும், தன்னலமற்ற சேவையுணர்ச்சியுமுள்ளவர்களால்தான் அதனை வெற்றிகரமாக நடத்த முடியும். ஆனால் காந்தியக் கொள்கைகளில் பற்றுக்களை முற்றும் துறந்துவிட்ட இன்றையக் காங்கிரஸ் ஆட்சியாளர், தாங்கள் காந்தி வகுத்த வழியிலேயேதான் இன்னும் செல்வதாகக் காட்டிக் கொள்வதற்காகச் சர்க்கார் கல்வி இலாக்காவின் மூலம் ஆதாரக் கல்வித் திட்டத்தை நடத்தி வருகிறார்கள். சர்க்கார் இலாக்காவைக் கொண்டு நிறைவேற்றப்படும் திட்டம் எந்த லட்சணத்தில் இயங்கும் என்று சொல்லத் தேவையில்லை. காந்திஜியிடமோ, திட்டத்தினிடமோ பற்றுதலே இல்லாதவர்கள் ஆசிரியர்களாக எடுத்துக் கொள்ளப்படுகிறார்கள். அதனால் இத்திட்டம் எதிர்பார்த்த பலனைக் கொடுக்கவில்லை. சில பழைய காங்கிரஸ்காரர்கள் உண்மையான பற்றுக் கொண்டு, சர்க்கார் உதவியும் பெற்று ஆதாரக் கல்வி புகட்டி வந்தார்கள். இவர்களும் அரசியலிலேயே ஈடுபட்டுள்ள மற்றக் காங்கிரஸ்காரர்கள் பணம் திரட்டி விட்டதைப் பார்த்து இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தைக் கொண்டு பணம் சம்பாதிக்கத் தொடங்கி விட்டார்கள்.

## வலிய அழைத்த வம்பு

நமது அயல்நாட்டுக் கொள்கையிலுள்ள பலவீனத்தைப் பிற நாடுகள் உணர்ந்துள்ளன. அதனால்தான் சீன எல்லைப்புறத்தில் 12,000 சதுர மைலைக் கபளீகரம் செய்ய முடிந்தது. இந்தத் தைரியத்தில்தான் இப்போது போர்ச்சுகலும் கோவாவில் யுத்த தளவாடங்களைப் பெருமளவில் இறக்கத் திட்டமிட்டிருக்கிறது.

கோவாவின் ஆயுதக் குவிப்பை ஒட்டி பாகிஸ்தானிலிருந்தும் அதே போன்ற செய்திகள் கிடைத்துள்ளன. முன்பே காஷ்மீர எல்லையிலும், மேற்கு வங்காள ஓரங்களிலும் துருப்புக்களைத் திரட்டி வைத்திருந்த பாகிஸ்தான் தற்போது காங்கிரஸ் சர்க்கார் சிருஷ்டி செய்து வரும் பஞ்சாப் கிளர்ச்சியை முற்றிலும் பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பதாகத் தெரிகிறது. மொழிவாரி மாகாண

அமைப்பை ஒப்புக் கொண்ட அதே நேரு சர்க்கார் சீக்கியர்களின் நியாயமான கோரிக்கைக்கு மட்டும் இணங்காதது வீரத்துக்குப் பெயர்போன சீக்கியப் பெருமக்களிடையே பெரும் கொதிப்பை உண்டாக்கியுள்ளது. இதையே தனக்குச் சாதகமாகச் செய்து கொள்ள முடியுமா என்று பார்க்கிறது பாகிஸ்தான். சீக்கியர்கள் பாரத நாட்டிடம் கொண்டுள்ள அன்பு மற்ற எந்த இந்தியனுடைய தேச பக்திக்கும் குறைந்ததல்ல என்பதைப் பாகிஸ்தான் விரைவிலேயே உணரக் கூடும். எனினும் இதுபோன்ற சந்தர்ப்பங்களுக்குத் தானாகவே இடம் ஏற்படுத்திக் கொடுத்து, நெருப்புடன் விளையாடி வரும் இந்திய சர்க்காரின் போக்குக்கு வருந்தத்தான் வேண்டும்.

## முஸ்லிம் தோழர்களுக்கு

சென்னை மேல் சபை அங்கத்தினர் திரு ரஸாகான் முஸ்லிம் தோழர்களுக்குப் பாரத நாட்டு அரசியல் கட்சிகளில் சேர்ந்து, நாட்டின் நடப்பில் பங்கு கொள்ளுமாறு நல்ல யோசனையைத் தெரிவித்திருக்கிறார். முஸ்லிம் லீக் கட்சி, முஸ்லிம் மக்களின் நலனைப் பாதுகாக்கும் பணியில்தான் ஈடுபடமுடியும். முஸ்லிம் மக்கள் அத்துடன் நின்றுவிடக் கூடாது. நாட்டுப் பொருளாதார வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் உரிய பங்கு எடுத்துக் கொண்டு செயலாற்ற வேண்டும். அதற்கு ஒரே வழி நாட்டிலுள்ள அகில இந்திய கட்சிகளில் ஏதேனுமொன்றில் சேர்ந்து கொள்ளுவதுதான். அப்படி அவர்கள் பெரும் தொகையில் சேர்ந்தால்தான், அரசியல் கட்சிகளுக்கும் முஸ்லிம் மக்களின் நினைவு சதா இருந்து கொண்டிருக்கும். ஆகவே, தங்கள் நலனைக் கருதினாலும் முஸ்லிம் பெருமக்கள் பெரிய அரசியல் கட்சிகளில் ஏதேனுமொன்றில் சேர்ந்து பணியாற்ற வேண்டியது அவசியம். இந்த நல்ல யோசனையைத் தெரிவித்த ஜனாப் ரஸாகான் அவர்கள் பாராட்டுக்குரியவராகிறார்.

## விலைவாசி விநோதம்

'மூன்றாம் திட்ட காலத்தில் விலைவாசிகள் குறையவே குறையாது. விலைகளைச் சர்க்காரே நிர்ணயித்துக் கண்ட்ரோல் முறையைக் கொண்டு வந்தால் பண்டங்கள் பதுங்கிக் கறுப்பு மார்க்கெட் வளர்ந்து விடும். இதனால் விலைகள் மிக மிக உயரும்' என்றெல்லாம் திட்டம் வகுத்த கமிட்டியே ஒப்புக் கொள்ளுகிறது. எனினும், அதே மூச்சில், ''நாங்கள் விலைகளை எப்படியாவது கட்டுப்படுத்தி வைப்போம்'' என்று ஏமாற்றுப் பேச்சுப் பேசுகிறார்கள் அரசாங்கத்தினர். ஒரு செயல் புரிந்தால் அதற்கு இன்னின்ன எதிர் விளைவுகள் நேரிடும் என்பது மாற்ற முடியாத இயற்கை நியதி. இயற்கையை அறிய முடியாமல் நவீன விஞ்ஞானிகளும்கூடத் திணறும் போது நம் காங்கிரஸ் சர்க்கார் மட்டும் 'இயற்கையையே எங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிய வைப்போம்; அதன் காரியக்கிரமத்தை மாற்றி அமைப்போம்' என்று முழங்கும் விந்தையை என்னென்பது?

"எதிர்பாராமல் வரும் விருந்தாளிகளுக்கு
என்றல்லவா இந்த பாட்டில்

# கிஸான் ஸ்க்வாஷ்

வைத்திருந்தேன்!"




முன்யோசனை மிகுந்த மனைவிமார்கள் எப்பொழுதும் எதிர்பாராமல் வரும் விருந்தினருக்காக தனியாக ஒரு பாட்டில் கிஸான் ஸ்க்வாஷை வைத்திருப்பார்கள். கனிந்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட இப்பானங்கள் விட்டமின் சத்துக்கள் கொண்டவை. வருஷம் முழுவதும் அருந்துவதற்கு ஏற்றவை. வீட்டில் எப்பொழுதும் கிஸான் ஸ்க்வாஷ் வைத்திருங்கள். ஆரெஞ்சு, லெமன் மற்றும் இதர ஆறு வகைகளில் கிஸான் ஸ்க்வாஷ் கிடைக்கின்றன.

கிஸான் புராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்

# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்



## அத்தியாயம் இருபத்தைந்து

இரவுத் தபால் விமானத்தில், கூண்டின் பின்கோடியில் ஜன்னலோரமாக உட்கார்ந்திருந்த ருக்மிணி சென்னை முழுதும் நீல விளக்குக் கோலமாகக் காட்சி தந்த அழகைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். விமானத்தில் ஏற்றிவிடச் சந்திராவோடு வந்த கப்புசாமி, "பின்னங் கோடியிலே உட்காரு, ருக்கு. இறக்கைக்கு நேராக உட்கார்ந்து விடாதே. ஒன்றையும் பார்க்க முடியாது" என்று குழந்தைக்குச் சொல்வது போலச் சொல்லி அவளுடைய முதல் விமானப் பயணத்தை ரசிக்க வேண்டிய முறைகளையெல்லாம் விளக்கியிருந்தார். அந்த விமானத்தில் போகிறவர்களில் பாதிப்பேருக்கு மேல் அவருக்குத் தெரிந்திருந்தது. ஒவ்வொருவரிடமும், "என் அத்தை பெண் போகிறாள். ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். கான்றாட் பிளேனிலே இறங்கினவுடனே ஒரு டாக்ஸி பிடித்து அவளை ஏற்றிவிட்டு, நீ அப்புறம் எங்கு வேண்டுமானாலும் போய்க் கொள்" என்று அத்தனை பேரிடமும் சொல்லி விட்டுப் போயிருந்தார் அவர். "ஜாக்கிரதையாகப் போங்கள், மாமா!" என்று அவரிடமிருந்து அவள் விடை பெற்றுக் கொள்ளும்பொழுது "அதை நானல்லவா சொல்லணும். நாங்கள் காரில்தானே போகிறோம். வீட்டுக்கு" என்று சிரித்துக் கொண்டே நின்றார் அவர். விமானம் நகரும் வரையில் அந்த இடத்தை விட்டு நகரவில்லை அவர்கள். நகரும் பொழுது, ஏதோ ஒரு ஜன்னலைப் பார்த்துக் கையை உயர்த்தி அசைத்துக் கொண்டே இருந்தார்கள். நாளைக்கு அவசரமாக மதுரை போகிறாராம் கப்புசாமி. இல்லாவிட்டால், "வாருங்கள்" என்று சொல்லியிருந்தால் அவரும்கூட வருகிறவர்தான்.

காதைக் 'குப்குப்'பென்று சற்றைக்கொரு முறை அடைத்துக் கொண்டேயிருந்தது. எச்சிலை விழுங்கி விழுங்கிச் சரிப்படுத்திக் கொண்டேயிருந்தாள் அவள்.

சந்திராவை நினைக்கும் பொழுது... வரட்டுமா என்று விடைபெறுகையில் சந்திரா ஒன்றும் பேசமுடியாமல் தலையை மட்டும் அசைத்தாள். ருக்குவுக்குக் கூட அவளை விட்டுப் பிரிவது அவ்வளவு கலபமாக இல்லை.

"ஹல்லோ!" என்ற குரல் கேட்டு ஜன்னலிலிருந்து முகத்தைத் திருப்பினாள். கலியாணத் தாம்பூலம் போல் தட்டில் ஏலக்காய், கிராம்பு, பாக்கு, சாக்க...ட்டுகளை நீட்டிக் கொண்டு விமானத்து உக்ராணக்காரன் புன்னகை பூத்தான். இலைத்தில் ஒன்றாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள்.

பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் காலையில் நடக்கவிருக்கும் ஏதோ வைதீக மகாநாட்டுக்காகப் போகிறாராம். உட்காரும் பொழுதே மெத்தைக் குட்டைகளைத் தலைக்கும் கைக்கும் அண்டக் கொடுத்து உட்கார்ந்து நாற்காலியின் முதுகைப் பின் பக்கம் தட்டிச் சாய்த்து உறங்கி விட்டார். அடுத்து உட்கார்ந்திருந்தவர் ஏதோ சர்க்கரை மகாநாட்டுக்குப் போகிறாராம். அவரும் உறங்கி விட்டார். இரண்டு பேரும் கப்புசாமிக்குத் தெரிந்தவர்கள் தாம். அவர்களைப் போலவே விமானத்தில் முக்கால்வாசிப் பேர்கள் மகாநாடுகளுக்கும் உரையரங்குகளுக்கும் போகிறவர்கள் தாம். தேயிலை மகாநாடு, வர்ணங்கள் தயாரிப்போர் கூட்டம், கார் செய்கிறவர்கள் மகாநாடு—இப்படி. எல்லாருமே தூங்க ஆரம்பித்து விட்டார்கள். இந்த விமானச் சத்தம் தாலாட்டாகப் பழகி விட்டவர்கள் போலிருக்கிறது. எல்லோருமே துயிலில் ஆரம்பமும் அர்த்தஜாமமும் இரண்டாம் ஜாமமுமாக, பல கட்டங்களில் ஆழ்ந்து விட்டார்கள். இவ்வளவு பேர் இவ்வளவு மகாநாடுகளுக்குப் போயும் ஒரு பண்டமும் விலை இறங்காமல் ஏறிக் கொண்டேயிருப்பதை நினைத்துச் சிரித்தாள் ருக்கு. இந்த விமானக் காசெல்லாம் சேர்ந்துதான் விலையை இப்படி விஷமாக ஏற்றிக் கொண்டிருக்கிறதா? இவர்களை விமானத்தில் ஏற்றி அனுப்பும் தெம்பு நம் ஜனங்களுக்கு வந்து விட்டதா? ..புரியவில்லை அவளுக்கு.

அனந்தசாமி சென்னை வெய்யிலில் வேர்வையும் மருந்துப் பையும் பழஞ் செருப்புமாக நடப்பது அவள் கண்முன் வந்தது. சிணுங்கல், கருக்கமில்லாத புன்சிரிப்பையே நிரந்தரமாகச் செதுக்கி



அவன் மனமும் நிறைந்து பூரிப்பில் மிதந்தது.

திரும்பி வந்து, சென்னையிலேயே வேலைக்கமர்ந்து... அந்த எண்ணத்தை முழுக்கவே முடியவில்லை. சென்னையைக் கடந்து வெகு தூரம் வந்து விட்ட விமானம் இப்பொழுது இருளில் பாய்ந்து கொண்டிருந்தது. தூரத்தில் எங்கேயோ மங்கிய விளக்கு ஒன்று தெரிந்தது. ஒன்றையும் விளக்காத, புள்ளி போன்ற ஏதோ கிராம விளக்கு. அதே மாதிரி



விட்டாற் போல மலர்ச்சியில் தேங்கி விட்ட, அந்த முகம் நினைவுக்கு வந்தது. இந்த மகாநாட்டு யாத்திரிகர்கள் செய்வதை விட இன்னும் முக்கியமான, அவசியமான காரியத்தைத் தானே அவர் செய்து கொண்டிருக்கிறார் — விமானமும் கோட்டும் இல்லாமல்.

அவரை நினைக்க நினைக்கத் திகைப்புத் தான் ஓங்கிக் கொண்டு வந்தது அவனுக்கு. விடுமுறை என்று சென்னைக்குப் புறப்படும்பொழுது, வேலையை விடுவதற்காக இப்படி அவசரம் அவசரமாகக் காற்றில் பறக்கப் போகிறோம் என்று அவன் கனவுகூடக் காணவில்லை. இப்படியும் நடக்குமா, நடக்குமா என்று உள்ளே குரல் கேட்டுக் கொண்டே இருந்தது. நடக்கிறது. நடக்கிறது. நனவுதான் என்று நாற்காலியின் பிடியையும், வட்டச் சாளரத்தின் கண்ணாடியையும் தொட்டு உறுதிப்படுத்திக் கொண்டான் அவன். நனவுதான். நனவுதான். அவனுக்கு மனம் நிரம்பிப் பொங்கியது. நெஞ்சு முழுதும் கதகதவென்று நிறைந்தது. அவன் காற்றில் மிதப்பது போல தான் இந்த எண்ணமும் அவனுக்குள்ளே மினுங்கிற்று. வந்து என்ன செய்யப் போகிறோம், எங்கே எப்படி இருக்கப் போகிறோம் வசிக்கப் போகிறோம்... என்று விடையில்லாத கேள்விகளைக் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

தூக்கம் வரவில்லை. மற்ற எல்லோரும் தூங்கினார்கள்- தூங்குகிறாற் போல் பாவனை செய்தார்களோ! பிரயாணம் நல்லபடியாக முடிய வேண்டும் என்று கடவுளின் பெயரை முணுமுணுத்துக் கொண்டிருந்தார்களோ, அவனைப்போல?

அவனுக்கு இத்தனை எண்ணங்களுக்கும் நடுவில் கடவுளின் நினைவு வந்து கொண்டிருந்தது. பழைய குற்றவாளி போலீஸ் ஸ்டேஷனில் ஆஜர் கொடுப்பது போல் தன் எண்ணங்களை விட்டு ஓடி ஓடிக் கடவுளிடம் சென்று கொண்டிருந்தது மனசு. கடவுள் இல்லாமை இல்லாமையானவர். நெருக்கினவர் என்று இப்படி வயிற்றில் புளியைக் கரைத்தால் ஒழிய எப்படித் தெரியப் போகிறது? அவனுக்கே சிரிப்பாக வந்தது.

திடீரென்று பெரும் அதிர்ச்சியுடன் விமானம் கீழே இறங்கியது. அரண்டு போய் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். 'பெல்ட்டைப் போட்டுக் கொள்' என்ற விளக்கு எச்சரித்தது. விமானம் மறுபடியும் ஏறிற்று. மறுபடியும் பயம் இறங்கியது. கீழே தள்ளாடியது. ஒரு தடவை, இரண்டு தடவை இல்லை. விட்டு விட்டு இந்த அதிர்ச்சி பதறச் செய்தது.

“அனந்தசாமியைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும் என்றுதான் நான் நினைத்தேன். தவறாக ஒன்றும் எண்ணவில்லை. நான் திரும்பி வந்து சென்னையில் வேலை ஏற்றுக் கொண்டாலும் இந்த எண்ணம் மாறாது. மாசற்ற மரியாதையாகத்தான் இருக்க வேண்டும்” என்று என்னவோ பயமுறுத்துகிற ஏதோ ஒரு தேவனுக்குக் காணிக்கை தருவது போல் மனத்தைக் கையில் பிடித்து அதன் காலடியில் வைத்தான் அவன்.

தூங்க முடியவில்லை. தூக்கமும் வரவில்லை.

எப்பொழுது இந்தப் பயணம் முடியும்? திமர் என்று விளக்கு எரிந்தது. உக்ராணக்காரன் ஏதோ சீட்டுக் கொடுத்துக் கொண்டே வந்தான்.

“என்ன இது?”

“நாகப்பூரில் சாப்பாட்டுக்கு” என்றார் பக்கத்திலிருந்த கன்னடக்காரர். மகாநாட்டு யாத்திரீகர். அவர் விசாரித்துக் கொண்டு விட்டார் என்று தெரிந்தது.

சில விளக்குகள் மீண்டும் கோலம் போட்டன. தட்டென்று தட்டிக் கொண்டு விமானம் இறங்கியது.

விமானம் நின்றவுடன் ருக்மிணிக்கு உயிர் வந்தது போலிருந்தது.

கன்னடக்காரர் விமான நிலைய ஹோட்டலில் அவளுக்கு உபசாரம் எல்லாம் செய்தார். எதிரிலேயே உட்கார்ந்து கொண்டார் அவர். பக்கவாட்டு நாற்காலியில் சர்க்கரை மகாநாட்டுக்காரர் உட்கார்ந்து கொண்டார்.

“எனக்குக் காப்பி போதும்” என்று சொல்லி விட்டாள்.

கன்னடக்காரர் தூங்கி எழுந்ததாலோ என்னவோ அவர் வயிறு குமைந்திருக்க வேண்டும். ஏழெட்டு வறுத்த ரொட்டிகளில் வெண்ணெயைத் தடவித் தடவி மத்தியானச் சாப்பாடு மாதிரியே சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

“ஹல்லோ..மிஸ் ருக்மணி!” என்று குரல் கேட்டது. நம்மை யார் கூப்பிடப் போகிறார்கள் என்று சந்தேகத்துடனேயே நிமிர்ந்தாள் அவள்.

“ஹல்லோ..என்ன ஆச்சரியம் இது!” என்று சொல்லிக் கொண்டே ஓர் உருவம் மூன்றாவது மேஜையிலிருந்து கத்திற்று.

அனில் ஜோஷி!

இந்தப் பழிகாரன் எங்கே வந்து சேர்ந்தான் இங்கே!

அனில் ஜோஷியேதான்.

“ஹலோ!” என்று கூறிக்கொண்டே எழுந்து இடது கையில் ஸாஸரையும் வலது கையில் மக் கிண்ணத்தின் காதையும் பிடித்தவாறு காலியாயிருந்த நாற்காலியில் வந்து அமர்ந்தான்.

“என்ன ஆச்சரியம்!” என்றான் ஆங்கிலத்தில். அவனுக்குத் தமிழ் தெரியாது. ஆறாத்தி ஆங்கிலத்தில்தான் பேசிக் கொண்டிருந்தான். “எங்கே போகிறாய்? எங்கிருந்து வருகிறாய்?” என்று கேட்டுக் கொண்டே பக்கவாட்டில் உட்கார்ந்திருந்த இரண்டு மகாநாட்டுக்காரர்களையும் பார்த்தான்.

“இவர் அனில் ஜோஷி. டில்லியில் வியாபாரம் செய்கிறார் . . . மிஸ்டர் ஜோஷி, இவர் மிஸ்டர் புட்டப்பா, சர்க்கரை மகாநாட்டுக்கு டில்லிக்குப் போகிறார். இவர் ....”

“ரொம்ப சந்தோஷம்” என்று ஜோஷி இரண்டாவது பேரை அவள் அறிமுகப் படுத்தியதைக்கூட முழுதும் கேட்கவில்லை. அவளைத்தான் பார்த்துக் கொண்டிருந்தான் - நாய் பிஸ்கட்டைப் பார்க்கிறமாதிரி. பிறகு மற்ற இருவரும் இருப்பதையே அவன் மனத்தில் போட்டுக் கொள்ளவில்லை.

“எங்கிருந்து வருகிறாய்?”

“மெட்ராஸிலிருந்து.”

“டில்லிக்குத்தானே?”

“ஆமாம்.”

“காலேஜ் திறந்தாச்சா?”

“அது இன்னும் இரண்டு மூன்று வாரமிருக்கு!”

“டில்லி வெய்யில் பாழாகப் போகிறதே என்று முன்னாலேயே போகிறாயா? மதராஸில் யார் இருக்கிறார்கள்?”

“எல்லாரும்தான்.”

“எல்லாரும் என்றால்?”

“மதராஸியைப் பார்த்து மதராஸில் உனக்கு யார் மனிதர்கள் இருக்கிறார்கள் என்றால்! உறவுக்காரர்கள், நண்பர்கள், உறவில்லாதவர்கள்.....நீங்கள் எங்கே போகிறீர்கள்....?”

# பிளாஸ்டிக்கின் இந்த அழகிய வீட்டிற்கான சாமான்களை உபயோகித்து



## நாகரீகமாகவும் உல்லாசமாகவும் இருங்கள்

சௌகர்யத்திற்கும், நீண்ட கால் உழைப்பு தரும்-பிரைட் பிளாஸ்டிக் சாமான்களைப் போல வேறொன்றும் இல்லை. இவை நவீன இல்லங்களில் எல்லோராலும் உபயோகிக்கப்படும் சிறந்த சாமான்கள். வர்ண மயமான, நீண்ட நாள் உழைக்கக்கூடிய மற்றும் சௌகர்யமான இந்த சாமான்களை நீங்கள் ஒரு முறை உபயோகிக்கத் தொடங்கினால், இவைகளை நீங்கள் எப்பொழுதுமே உபயோகிக்க விரும்புவீர்கள். அழகான வர்ணங்கள், கெட்டியான தயாரிப்பு மற்றும் சிறந்த தன்மை முதலானவைகளுக்கு பிரைட் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள்-பிரைட் தான் வேண்டுமென்று கேளுங்கள்.




**பிரைட் பிளாஸ்டிக்ஸ்**

பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்., 156-A, தார்தேவ் ரோட், பம்பாய்-7.

"பம்பாய்க்குப் போகிறேன். பிஸினஸ்தான் - அவசரம்."

"டில்லியில் முக்கியமான மகாநாடுகள் என்று எல்லோரும் டில்லிக்குப் போகிற போதா?"

"ஆமாம். டில்லியில் பொழுது விடிந்தால் மகாநாடுதான். உரையரங்குதான். இவர்கள் டில்லியிலே நடத்துகிற ஒரு வருஷ மகாநாட்டுச் செலவுகளை என்னிடம் கொடுக்கட்டும். ஐந்நூறு தொழிற்சாலைகள் கட்டி ஐம்பதினாயிரம் பேருக்கு வேலை கொடுக்கிறேனா இல்லையா பாரு. சார், நீங்கள் இரண்டு பேரும் மன்னித்துக் கொள்ள வேண்டும். நான் உங்களை வென்று சொல்லவில்லை. பொதுவாகச் சொல்கிறேன்...."

"எனக்கும் அதே எண்ணம்தான். இருந்தாலும் ஒரு துறையிலே இருக்கிறவர்கள் அடிக்கடி கூடிப் பார்த்துப் பழகினால்தானே நல்லது. கடிதத்தில் எழுத முடியாததை இங்கே சாதித்துவிட முடியாது. இருந்தாலும் ஏதோ நாலு பேரைப் பார்த்தாற் போலிருக்கும். ஒரு கலியாணம் என்று விசேஷம் வந்தால் தானே உறவினர்களை, சிநேகிதர்களையெல்லாம் பார்க்க முடிகிறது" என்றார் கன்னடக்காரர்.

"போஷ். நல்ல கலியாணம்தான். இந்தக் கலியாணச் செலவெல்லாம் கடைசியில் சர்க்கரை தின்னுகிறவன் மட குடிக்கிறவன் தலையிலல்லவா விழுகிறது? சரி. இது என்னத்துக்கு இப்ப? ஏதோ சிநேகிதர்களோடு நாலு நல்ல விஷயமாகப் பேசி விட்டுப் போவோம். ம்..எங்கெங்கெல்லாம் லீவுக்குப் போய் இருந்தாய்?"

"மதராஸில்தான் இருந்தேன்."

"கோடைக்கானல் ஊட்டியெல்லாம் போய் வரக் கூடாதா?"

என்னமோ, ரொம்ப நெருங்கிப் பழகினவன் போல், வெகு நாளைய குடும்பச் சிநேகிதன் போல் அவன் பேசுவதைக் கண்டு ருக்மிணி உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள்.

இதே மாதிரிதான் அவன் யாரிடமும் பழகுகிற வழக்கம். நூறு ரூபாய் சம்பளக்காரர்கள் தொண்ணூறு ரூபாய் சம்பளக்காரர்களிடமும் மூவாயிரம் ரூபாய் சம்பளக்காரர்கள் இரண்டாயிரத்தைந் நூறு ரூபாய் சம்பளக்காரர்களிடமும் சமமாகப் பழகுவது அகௌரவமாக இருக்கிற டில்லியில் அனில் ஜோஷிக்கு மட்டும் விலக்கு உண்டு. எல்லோரும் அவனிடம் சமமாகத்தான் பழகினார்கள் - மந்திரி முதல் இஸ்திரி வண்டி தள்ளுகிறவன் உட்பட. அவர்கள் பழகினார்கள் என்று சொல்வதைவிட அவன் அப்படிப் பழகினான் என்று சொல்ல வேண்டும். காரியதரிசி வீடாகட்டும், குமாஸ்தா வீடாகட்டும் - டிராயிங் அறை மட்டும் இன்றிச் சமையலறை வரையில் அவனுக்குப் பிரவேசம் உண்டு. பெண்மணிகளைச் சிரிக்க வைக்க என்ன பேசலாம் என்று அத்துபடி அவனுக்கு. ஆளும் வாட்ட சாட்டமாக, வெள்ளை வெளேரென்றிருப்பான். உடம்பில் ஆரோக்கியமான ஊட்டத்தின் பளபளப்பு மின்னும். நீளக் காது - நீள மூக்கு - அகன்ற கண் - இயற்கையிலேயே சிவந்த உதடு - தலையில் அடர்ந்த மயிர் - இன்னும் ஒன்றுகூட நரைக்கவில்லை - இப்பொழுது கூட நாற்பத்தைந்து வயது என்று சொல்ல முடியாது. முப்பத்தேழு முப்பத்தெட்டு வயது மதித்தால் அதிகம். கலகலவென்று சத்தம் போட்டுத்தான் பேசுவான்; வருவான். போவான். இயந்திரங்கள், மருந்துகள், காகிதம் உடைகள் - இப்படிப் பல வியாபாரங்கள். ஆறு மனைவிகள் அவனுக்கு. ஒவ்வொரு கலியாணமும் சாதாரணமாக நடக்கவில்லை. 'இவரைத்தான் பண்ணிக் கொள்வேன். இல்லாவிட்டால் உயிரை மாய்த்துக் கொள்ளுவேன்' என்று பெற்றோரைப் பயமுறுத்தித்தான் அந்தப் பெண்கள் அவனைக் கொண்டார்கள். ஆனால் என்ன காரணமோ, யாரும் நாலு மாசம்கூடச் சேர்ந்தாற் போல் இருக்கவில்லை. விவாகம் ரத்தாகிவிடும். இப்பொழுது யாரோ மகாராஷ்டிரப் பெண்ணுடன் வாழ்ந்து வருகிறானாம். கலியாணமாகச் செய்து கொள்ளவில்லை. கலியாணமாகி விட்டால் விவாகரத்தும் அதே கவட்டில் வந்து விடுகிறதே என்று பயந்து விட்டானோ என்னவோ! அவனை எந்தப் பாஷைக்காரன் என்றுகூடச் சொல்ல முடியாது. நாலைந்து பாஷைகள் மடமடவென்று பேசுவான். தெற்கத்திப் பாஷைகள்தான் வராது. 'வாங்க உட்காருங்க' என்று அதிலும் ஓரிரண்டு

மனித சமுதாயத்துக்கு அரசாங்கம் என்பது அவசியம்தான். ஆனால் வரம்புக்கு மேல் அதிகாரங்களை அரசாங்கம் பெற்று ஆள்வது மக்களுக்கு நன்மை தராது. மக்கள் சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் வாழ வேண்டுமெனில் அரசாங்கத்தின் அதிகாரங்கள் ஒரு கட்டுக்குள் அடங்கியிருக்க வேண்டும். தனி மனிதன் சுதந்திரத்தை அனுபவிப்பதிலே தான் மக்களின் சுகவாழ்வு அமைகிறது; பணத்தால் அடைந்த வாழ்க்கைத்தரம் உயர்வதில் அல்ல! அந்த வாழ்க்கைத் தர உயர்வை அடிமை வாழ்விலும் கூடப் பெறலாம்.

ராஜாஜி

வார்த்தைகள் பேசக் கற்றிருந்தான். எந்தத் தேசத்துக்காரன் என்று கூடச் சில சமயம் சந்தேகம் வந்துவிடும். 'அவன் லண்டன் தேசத்தவனோ?' என்று பைத்தியம் மாதிரி அவனைப் பார்த்துக் கொண்டே ஒருநாள் கங்கூலி சொன்ன ஞாபகம் வந்தது ருக்மிணிக்கு.

பத்து வருஷங்களுக்கு முன்னால் யாரோ உறவுக்காரப் பெண் என்று சொல்லிக் கொண்டு கல்லூரியில் ஒரு பெண்ணைச் சேர்க்க வந்தான். ருக்மிணியிடம் சிபாரிசுக்கு வந்தான். சேர்த்த பிறகும் வருவது நிற்கவில்லை. வீட்டுக்கு வர ஆரம்பித்தான். ஒரு விருந்துக்குக் கூப்பிட்டான். அவன் வீட்டில் டின்னர் இராத நாள் இராது. அவன் நாட்டு வியாபாரக் கோஷ்டிகள், வியாபாரிகள் என்று யாரையாவது அழைத்துக் கொண்டே இருக்க வேண்டும்.

ஒரு மாதம் கழித்துச் சித்தப்பா ருக்மிணியை ஜாக்கிரதைப் படுத்தினார். தஞ்சாவூர் ஜில்லா அகராதியில் இந்த மாதிரி ஆட்களுக்கே உள்ள சில வார்த்தைகளைப் பொறுக்கி அவனை வர்ணித்தார். "அவன் இருவாமுத்தானடி ருக்கு-ஜாக்கிரதையா யிரு" என்றார். "சர்க்கரையாகப் பேசுவான். சர்க்கரையாக் கரைஞ்சு நம்ம உடம்பிலே புகுந்து விடுவான்" என்றார் "நாலிங்கராயன்று அவன்" என்பார். ருக்மிணியையும் அவன் அழகும் பேச்சும் ஓர் இரண்டு மூன்று நாட்கள் தாக்கத்தான் செய்தன. நல்ல சமயம் பார்த்துச் சித்தப்பா எச்சரித்தார். "சிம்லாவுக்கு ஒரு 'பிக்னிக்' போகலாம் என்று பார்க்கிறோம். என் மனைவி வருகிறாள். மிஸஸ் ஐயர் வருகிறாள்... கங்கூலி வருகிறாள்" என்று அவளையும் அழைத்துக் கொண்டிருந்தான் ஒரு கடவை அவன். பிரயாணத்தன்று 'அந்த எல்லோரும் ஏதேதோ அவசர வேலையாக நின்று விட்டார்கள்' என்றான். சித்தப்பாவிடம் அவள் அதைச் சொன்னபோது, "சாயங்காலம் வருவான். வயிற்று வலி தாங்கவில்லை என்று படுத்துக் கொண்டிரு" என்றார் சித்தப்பா. சொன்னாற் போலவே அவன் வந்தான். "வயிற்று வலி துடிக்கிறாள்" என்று அவர் சொன்னதைக் கேட்டு உள்ளே வந்து பார்த்தான். ஏமாற்றம் முகத்தில் வழிந்தது. பத்து நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்தான். கடைசியில் சித்தப்பா எழுந்து காப்பி கொண்டு வருவதற்காக உள்ளேபோன சமயம் பார்த்து "ஹூம்; நான் கொடுத்து வைக்கவில்லை" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே சொன்னான். அதைக் கேட்டபொழுது தான் அவளுக்குச் சுருக்கென்றது. காப்பி வந்ததும் சாப்பிட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தான். அப்புறம் இரண்டு மூன்று தடவை வந்தானாம். "நீ இல்லை என்று போகச் சொல்லி விட்டேன்" என்றார் சித்தப்பா. "ருக்கு! துளி இடம் கொடுத்தால் போதும். பட்சணம் பண்ணி விடுவான். நாமெல்லாம் பெரிய மனிதர்கள் இல்லை, அவமானம் வந்தால் தாங்கிக் கொள்வதற்கு. பணமோ பதவியோ நமக்கு இல்லை" என்று அழுத்தமாகச் சொல்லி வைத்தார் அவர். அவளை என்ன நினைத்துக் கொண்டானோ - அப்புறம் வருவதை நிறுத்தி விட்டான். நிறுத்தி விட்டானே தவிர எப்பொழுதாவது சந்திக்கும் போதெல்லாம் அவன் கிடந்து ஆடுகிற ஆட்டம் - நெஞ்சில் அந்தக் கண்ணில் காணும் வெறி...! ஒன்றும் நிற்கவில்லை.

இப்பொழுதும் எதிர் நாற்காலியில் அதே வெறிதான் அங்கு மின்னியது. அந்தப் புன்னகைக்கும் நட்புக்கும் பின்னால் அவள் உடல் குன்றிக் கூசிற்று.

எங்கிருந்தோ குதிக்கிறாற் போல, மருந்துப் பையும், குழந்தைச் சிரிப்புமாக அனந்தராமனின் வடிவும் முகமும் அவள் முன்னால் நின்றன.

முகத்தைத் திருப்பி எங்கோ பார்த்துக் கொண்டும் இயந்திரம் போல் 'ம்' போட்டுக் கொண்டிருந்தாள்.

"உடம்பு சரியில்லையா என்ன உனக்கு?" என்றான் அவன்.

"உடம்புக்கொன்றுமில்லையே!"

"இல்லை நான் பேசிக் கொண்டிருக்கிறேன், நீ எங்கேயோ பார்த்துக் கொண்டிருக்கிறாயே?"

"அதெல்லாம் இல்லை. தூக்கம் இல்லை. பிரயாணம் ரொம்பத் தொல்லை. சத்தம் ஜாஸ்தி."

"ஏன் - பம்ப் அதிகமா யிருந்ததா ?"

"ஆமாம்."

"தெரிகிறது. உன்னுடைய முகத்தில் தெரிகிறது."

மேலும் என்னென்னவோ பேசினான் அவன். "பம்பாய் விமானம் கிளம்பப் போகிறது. பம்பாய்ப் பிரயாணிகள் விமானத்துக்குப் போகலாம்" என்று ஒலிபெருக்கி அழுத்தமாகப் பொழிந்தது. அனில் ஜோஷியையும் நாற்காலியை விட்டுப் பெயர்த்துக் கொண்டு போயிற்று. கெட்ட கனவு கண்டு விழித்துக் கொண்ட மாதிரி யிருந்தது அவளுக்கு.

"காப்பியைச் சாப்பிடவே இல்லையே நீங்கள் அப்படியே இருக்கிறதே" என்றார் கன்னடக்காரர்.

அந்தக் காப்பி குளிர்ந்து போய்க் கிடந்தது. எழுந்து போய் அவரே சூடாகக் காப்பியை வாங்கிக் கொண்டு வந்து வைத்தார். (தொடரும்)




# ஸ்நானத்திற்கு

ஏற்றதும்

சிறந்ததும்



**ARUNAGIRI VILAS**

***SOAP NUT POWDER***

**KARAIKUDI**

BS



பாங்க் தொழில்

நாட்டின் செல்வத்தைப்

பெருக்குகிறது



பஞ்சாப் நேஷனல் பாங்க்

நாட்டின் தொழிலுக்கும்,

விவசாயத்திற்கும்,

வாணிபத்திற்கும் பணி

யாற்றுகிறது



எல்லாவித பாங்க்

பணிகளும் அளிக்கிறது.



## தி
## பஞ்சாப் நேஷனல்
## பாங்க் லிட்.

ஸ்தாபிதம் 1895

தலைமைக் காரியாலயம்: புது டில்லி.

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசுவைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

**எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!**

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD TRADE MARK




இரைப்பையில் மிதமிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




ஏக விநியோகஸ்தர்கள் :

**டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்**



# அன்பு எனும் பணி

கோமதி ஸ்வாமிநாதன்

பங்களூர் மெயில் திருவள்ளூரைத் தாண்டி விட்டது. நேரம் ஆக ஆக எதிரேயிருந்த ஆசனத்தில் அமர்ந்திருந்த தம்பதிகள் எதைப் பற்றியோ உற்சாகமாக ஒரே வேகத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். 'தங்களுடன் கூட ஒரு முதியவர் பிரயாணம் செய்கிறாரே! இரவு மணி ஒன்பதரைக்கு மேலாகியும் பிறர் சௌகர்யத்தையும் தூக்கத்தையும் பொருட்படுத்தாமல் இப்படிச் சளசள வென்று பேசிக் கொண்டிருக்கிறோமே' என்ற எண்ணம் அந்த நாகரிகத்தம்பதிகளுக்கு எழுந்ததாகவேதெரிய வில்லை! அந்த முதல் வகுப்புப் பெட்டியில் எங்கள் மூன்று பேர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. எனக்கோ சென்ட்ரல் ஸ்டேஷனில் ஏறி எனக்காக ஒதுக்கப்பட்டிருந்த மேல் பர்த்தில் படுத்தது முதலே தூக்கம் கண்களைச் சுழற்றியது. அவர்கள் சம்பாஷணைச் சத்தமோ எனக்கும் தூக்கத்துக்கும் இடையே குறுக்குச் சுவராக நின்றது. அதைப் பற்றி அவர்களிடம் சுட்டிக் காட்டவும் எனக்குப் போதிய துணி வில்லை. வயதும் அனுபவமும், கடு சொல்லாக அமையக் கூடிய ஏதாவது பதிலை வாங்கிக் கட்டிக் கொள்வதைத் தடை செய்ய முயன்றன.

அந்த ஆசாமிக்கு நாற்பது வயதிருக்கும். தூய வெள்ளை வேட்டியும் ஜிப்பாவும் அணிந்திருந்தான். ஓரளவு வழுக்கைத் தலையாக இருந்தாலும் எஞ்சியிருந்த கேசத்தை அழகாகப் படிய வாரி விட்டிருந்தான். கனத்த கருத்த மூக்குக் கண்ணாடி ப்ரேம் பெரிய மனிதக் களையைக் கம்பீரமாகவே காட்டிக்கொண்டிருந்தது. அதற்கேற்ப அவன் பேச்சிலும் ஆயிரம் பதினாயிரம் என்ற வார்த்தைகள் அடிபட்டன. அவன் கூட வந்திருந்த பெண்ணுக்கு முப்பத்தைந்து வயதிருக்கும். எளிமையான ஆனால் பொருத்தமான ஆடைகள் அணிந்திருந்தாள். படாடோபம் இல்லை.

ஜிப்பாக்காரன் பெட்டியைத் திறந்தான். ஏதோ கடிதங்கள், நோட்டுக்களையெல்லாம் பிரித்துப் பார்த்தான். பங்களூரிலுள்ள பல பெரிய பிரமுகர்கள் பெயர்களெல்லாம் அடி பட்டன அவர்கள் பேச்சில். 'சேஷன் நிச்சயம் இரண்டாயிரம் கொடுப்பார்' என்றான் அவன். 'அவரிடம் மூவாயிரம் வாங்குகிறேன்' என்றாள் அவள்.

'எந்த விதமான புது மோசடிக் கும்பலைச் சேர்ந்தவர்களோ? இப்போதெல்லாம்தான் ஊரை ஏமாற்றுபவர்களே அதிகமாகத் தங்கள் வேஷங்களைக் காப்பாற்றிக் கொள்ள மேல் வகுப்புக்களில் பிரயாணம் செய்கிறார்கள்' என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. தூக்கம் வராத நிலையில் காதை நன்றாகத் தீட்டிக் கொண்டேன்.

'அநாதை ஆசிரமம்' 'தொழில் பயிற்சி' 'இளம் குற்றவாளிகள்' 'நிதி நிலைமை' என்ற வார்த்தைகள் காதில் விழுந்தபோது, அவர்கள் ஏதோ அநாதை ஆசிரம நிர்வாகிகள் என்று ஊகித்துக் கொண்டேன். என் சுவாரசியம் குறைந்து விட்டது. சமீபத்தில்தான் ஏதோ ஓர் அநாதை ஆசிரம நிர்வாகி, ஆசிரமப் பணத்தைக் கையாடிவிட்டு வழக்கில் மாட்டிக் கொண்ட சம்பவம் நினைவுக்கு வந்தது. சர்க்கார் வக்கீல் என்ற முறையில் குற்றச் சாட்டை நிரூபித்துத் தண்டனையும் வாங்கிக் கொடுத்திருந்தேன்.

கீழே உள்ள இரண்டு 'பர்த்'துகளையும் அவர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அரக்கோணம் சந்திப்பைத் தாண்டிய பிறகு அவர்கள் சம்பாஷணைகூட ஓய்ந்து விட்டது. ஆனால் எனக்குத்தான் தூக்கம் போய் விட்டிருந்தது. ஏதாவது புத்தகம் படிக்க ஆரம்பித்தால் தூக்கம் வந்துவிடும். ஆனால் அவர்கள் விளக்கை அணைத்த பிறகு, என் தலைமாட்டி

ஜுன்ன சிறு விளக்கைப் போடுவதைக்கூட நான் நாளுக்கான காரியம் என்று நினைக்கவில்லை.

கண்களை மூடிக் கொண்டு ஏதாவது சிந்தனையில் சித்தத்தை லயிக்க விடுவதின் மூலம் தூக்கத்தைப் பிடிக்க முடியுமா என்று முயற்சி செய்ய ஆரம்பித்தேன். நினைவு என்னவோ, 'அநாதை ஆசிரமம்' 'இளம் குற்றவாளி' என்ற பதங்களையே சுற்றி வந்தது. அந்த வேகத்தில் என்னை இருபத்தைந்து வருடங்களுக்குப் பின்னால் இழுத்துக் கொண்டு போய் நிறுத்தியது.

நான் அப்போது சர்க்கார் வக்கீல் இல்லை; சாதாரண வக்கீல். தொழிலை ஆரம்பித்து வரும்படியையும் வழக்குகளையும் காணச் சிரமப்பட்டுக்கொண்டிருந்த காலம். கோர்ட்டில் எனக்கு வழக்குகள் இல்லாத போதுங்கூட, சுவாரஸ்யமான வழக்குகள் விசாரிக்கப்படும் போது நான் உட்கார்ந்திருப்பேன். அப்போது தான் அந்த நிகழ்ச்சி நடந்தது.

ஓர் இளைஞன் குற்றவாளிக் கூண்டில் நின்று கொண்டிருந்தான். பதினெட்டு அல்லது இருபது வயதுதான் இருக்கும். மிகுந்த ஏழைமையான தோற்றம். அவன் கண்களிலே சோக உணர்ச்சி ததும்பி நின்றது. அவனைப் பார்த்த வுடன் என்னை அறியாமலேயே அவனிடம் இரக்கம் தோன்றியது. அனுதாபத்துடன் அந்த வழக்கைக் கவனிக்க ஆரம்பித்தேன்.

நகரத்தில் ஏதோ பலசரக்குக் கடையில் எடுபிடியாளாக ஐந்தாறு மாதங்களுக்கு முன் சேர்ந்திருந்தானாம். பத்தாம் கிளாஸ் வரை படித்துவிட்டு வேலை தேடி நாட்டுப் புறத்திலிருந்து நகருக்கு வந்தவனாம். யோக்கியமாகத்தான் வேலை பார்த்து வந்தானாம். ஆனால் திடீரென்று ஒருநாள் முதலாளிக்குத் தெரியாமல் அவர் கைப்பெட்டியிலிருந்து பத்து ரூபாய் திருடிவிட்டானாம். முதலாளி பையனை உடனடியாகப் போலீஸில் ஒப்படைத்து விட்டார்.

அந்த இளைஞன் நீதிபதியிடம் தன் நிலையை உருக்கமாகவே எடுத்துச் சொன்னான். ''ஐயா, நான் அநாதை; ஏதோ ஸர்க்காரங்க பண்ணின உதவியாலே பத்து வகுப்புவரை படித்து விட்டேன். எனக்கு வேறே தொழில் கல்வி பயில வாய்ப்பில்லை. பட்டணத்துக்குப் போய்க் குமாஸ்தா வேலை பார்க்கலாம்னு சொன்னாங்க, புறப்பட்டேன். ஆனால் பயன் இல்லை. பசி இருந்தது. வேறு தொழில் தெரியாத நிலையிலேயும் பள்ளிப் படிப்பு உடனடியாக உதவிக்கு வராத நிலையிலேயும் பசிக் கொடுமையாலேயும் பலசரக்குக் கடையிலே எடுபிடி ஆளாகச் சேர்ந்தேன். முதலாளி நல்லவரு. சம்பளம் குறைவாக இருந்தாலும் பசியில்லாமல் இருக்க முடிந்தது.

''ஆனால் நாளடைவிலே மனத்திலே ஓர் ஏக்கம் தோண ஆரம்பிச்சிடுத்து. என்னைப் போன்ற வயசுக்காரங்களெல்லாம் வெள்ளைச் சட்டையும் வெள்ளை வேட்டியும் கட்டிக்கிட்டு உல்லாசமாக ஊரை வலம் வரபோது நம்ம நிலை இப்படி ஆயிப்போச்சே என்ற ஏக்கம் தான்! எல்லாவற்றுக்கும் பணம்தானே காரணம் என்றும் தோணிச்சு.

''அப்போதுதான் ஒரு புது ஆசாமி எனக்குப் பரிச்சயமானான். ஐந்தையும் பத்தையும் கட்டி நாலைந்து குதிரைகள் பேரை எழுதிக் கொடுத்தால் இருபது முப்பது ரூபாய் கிடைக்கும் என்று ஆசை காட்டினான். நான் மசியவில்லை. ஆனாலும் தொடர்ந்து என்னை நச்சரித்துக் கொண்டே வந்தான். எனக்கென்னவோ குதிரைப் பந்தயமின்னு பயம். ஏதோ ஒரு நல்ல வேலை, நல்ல சம்பளத்திலே கிடைக்கிற வரை கடையை விட்டுடக் கூடாதுன்னு நோக்கம்.

'ஆனால் போன வாரம் அந்தப் புது சிநேகிதன் ஒரு பெரிய வலை விரிச்சான். உடனடியாகப் பத்து ரூபாய் இருந்தால் மறு நாள் பந்தயத்தில் நூறு ரூபாய் நிச்சயம் புரட்டலாம் என்றும், அவனுக்குப் பத்து ரூபாய் கடனாகக் கொடுத்தால் மறுநாள் மாலை இருநூறு ரூபாய் கொண்டு வந்து கொடுத்து விடுவதாகவும் உறுதி சொன்னான். இருநூறு ரூபாய் கிடைத்து வந்தால் எவ்வளவு நல்ல துணிமணி வாங்கலாம் என்ற ஆசை என்னைப் பிடித்தது. ஆனால் என்னிடமோ ஒரு ரூபாய் சில்லறைக்கு மேலே இல்லை. ஆசையும் விடலே! முதலாளி பெட்டியிலிருந்து பத்து ரூபாய் எடுத்தால் அவருக்குத் தெரியாது, மறுநாள் போட்டுவிடலாம் என்ற தைரியத்தில் எடுத்துக் கொடுத்திட்டேன். ஆனால் மறுநாள் அந்தச் சிநேகிதன் வரவேயில்லை. நான்தான் முதலாளி கிட்டே அகப்பட்டுக் கொண்டேன்.

''நான் மனமறிந்து செய்த முதல் குற்றம் இதுதான். விவரம் புரியாத ஆசைக் கோளாறிலே செஞ்சுட்டேன். இனிமேல் என் ஜன்மத்திலே இந்த நினைவு வராது. இந்த முதலாளிகிட்டேயே நான் தொடர்ந்து வேலை செய்யறேன். மாசம் ஐந்து ரூபாய் வீதம் இரண்டு மாசத்திலே அந்தத் தொகையைப் பிடிச்சுக்கட்டும். அந்த இரண்டு மாசம் வரை எனக்கு வேறு எந்த வேலை வந்தாலும் நான் கடையை விட்டுப் போக மாட்டேன். துரையவர்கள் கருணை காட்ட வேண்டும். ஜெயிலுக்கு அனுப்பிச்சுட்டா என் வாழ்க்கையே தீர்ந்து போயிடும். திரும்புகிறபோது நான் பெரிய திருடனாக வருவேனே தவிர யோக்கியனாக வருவேன் என்பது நிச்சயமில்லை. நான் நல்லவனாகவே தொடர்ந்து இருக்க ஒரு சந்தர்ப்பத்தை நீங்கள்தான் அளிக்கவேண்டும்.''

அவனுடைய வேண்டுகோள் முடிவடையும் தருணத்தில் அவன் குரலில் அதிகமான நெகிழ்ச்சி இருந்தது. அவன் வார்த்தைகளில் அப்பட்டமான உண்மை இருப்பதாகவும் தோன்றியது. அவன் சமயத்துக்குத் தகுந்த நாடகம் நடிக்கவில்லை என்றும் உணர்ந்தேன்.

நீதிபதி நல்ல மனிதர். சட்டத்தைப் புரிந்து செயலாற்றுவது போல் மனித உணர்ச்சியையும் நன்கு புரிந்து கொள்ளக் கூடியவர். பொதுவாகத் தாம்பத்திய சச்சரவின் அடிப்படையில் எழும் ஜீவனாம்ச வழக்குகளில் கோர்ட்டுக்கு வெளியே சமரசம் செய்து கொள்ள யோசனை சொல்லும் முறையில், அவர் பலசரக்குக் கடை அதிபரைப் பார்த்து, ''குற்றவாளியின் வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளுகிறீரா?'' என்றுகூடக் கேட்டார். திருட்டு வழக்குகளிலெல்லாம் இப்படிக் கேட்பதில்லைதான்!

ஆனால் அந்தக் கடைக்காரர் திட்டவட்டமாக மறுத்துவிட்டார். ''கோர்ட்டார் அவர்களே! குற்றவாளி மறுபடியும் நல்லவனாக நடந்து கொள்வான் என்று நம்ப இடமில்லை. நான் அவனை வழக்கில் மாட்டி விட்டதற்காக என் மீது அவனுக்கு ஆத்திரம்தான் வரும். நாளையே அவன் பெரிய தொகையாகத் திருடிக் கொண்டு ஓடலாம். அவனை நான் மீண்டும் வேலையில் வைத்துக் கொள்ளத் தயாரில்லை'' என்றும் சொல்லி விட்டார். அதன் மூலம் சந்தர்ப்பவசத்தால் தெரியாமல் திருடனை அவனுக்குச் சமூகத்தில் நல்ல பெயர் எடுக்கும் வாய்ப்பை அளிக்க மறுத்து விட்டார். நீதிபதிக்குச் சட்டத்தின் பின்னால் புகுந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போயிற்று.

''இருபத்தைந்து ரூபாய் அபராதம், அல்லது மூன்று மாத கால சிறைவாசம். குற்றவாளி இளைஞனாக இருப்பதாலும் இது அவனுடைய முதல் குற்றமாக இருப்பதாலும் அவனுக்கு அளிக்கப்படும் தண்டனை குறைவு தான்'' என்று நீதிபதி தீர்ப்புக் கூறி விட்டார். கூண்டிலிருந்து குற்றவாளியைப் போலீஸ் காவலர் பெஞ்சுகளோரச் சமீபத்தில் அழைத்து வந்துவிட்டார்.

இந்த விசாரணையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த என் மனத்தில் விவரிக்க முடியாத வேதனை எழுந்தது. 'அந்தப் பையன் ஓர் அநாதை. அபராதப் பணம் கட்ட முடியாத நிலையில் அவன் ஜெயில் வாசத்தை மேற்கொள்ளப் போகிறான். அவன் பிறவித் திருடன் இல்லை. அவனுடைய சூழ்நிலை அவப் பெயரைக் கொடுத்து விட்டது. ஆனால் அதைப் போக்கிக் கொள்ளும் வாய்ப்பை அவனுக்குச் சமூகம் கொடுக்க மறுக்கிறது. இந்த இளைஞன் மாதிரி சமூகத்தில் எத்தனை பேர்கள் இருக்கிறார்களோ தெரியாது. நாம் ஏன் இந்தப் பையன் மீண்டும் நல்ல பெயர் எடுக்க ஒரு வாய்ப்புக் கொடுக்கக் கூடாது?' என்ற ஆவேச எண்ணத்தில் நான் நீதிபதியின் ஆசனத்தை நோக்கி நகர்ந்தேன்.

''யுவர் ஆனர்! இந்தக் குற்றவாளியிடம் அபராதம் கட்டப் பணமிருப்பதாகத் தெரியவில்லை. அவன் சார்பில் அந்தத் தொகையை நானே கட்டி விடுகிறேன். அவனுக்கு ஒரு நல்ல வேலையும் வாங்கித் தர முடியும் என்று நம்புகிறேன். அவன் அனுதாபத்துக்கு உரியவன் என்ற எண்ணமே எனக்கு எழுகிறது'' என்றேன். அவர் புன்சிரிப்புடன் அதை ஆமோதித்தார்.

அந்த இளைஞன் பெயர் என்னவோ சொன்னான். நாராயணசாமியோ, ராமசாமியோ என்று சொன்னான். என் வீட்டுக்கு அழைத்து வந்ததுடன் அவன் உணர்ச்சிவசப்பட்டுக் கீழே விழுந்து என் கால்களைப் பிடித்துக் கொண்டான். ''சார்! என்னை மனிதனாக வாழ ஒரு சந்தர்ப்பம் அளித்த உங்களுக்கு எப்படி நன்றி தெரிவிப்பதென்றே தெரியவில்லை. நீங்கள் என் மீது காட்டியிருக்கும் அன்பும், இரக்கமும், அனுதாபமும் ஒரு நாளும் வீண் போகாமல் அதே உணர்ச்சியை நான் மற்றவர்களிடம் நல்ல முறையில் காண்பிக்கப் பாடுபடுவேன் சார்!'' என்று அழுதே விட்டான்.

''தம்பி! பாங்கியில் பணம் போட்டு வைத்தால் அதற்கு வட்டி சேரும். ஆனால் அது பணத்தின் சொந்தக்காரனுக்கு மட்டும்தான் பயன்படும். ஆனால் அன்பு, இரக்கம் என்பதைப் பிறர் மனத்தில் போட்டு வைத்தால் அதுவும் பன்மடங்காக வளருகிறது. அதனால் சமூகத்துக்கே பெரிய லாபம். உன்னை எனக்குத் தெரிந்த பிரமுகர் ஒருவரிடம் வேலைக்கு வைக்க ஏற்பாடு செய்கிறேன். நான் உன்னிடம் இந்த இருபத்தைந்து ரூபாயையோ அல்லது வேறு எந்தப் பிரதிப் பிரயோசனத்தையோ எதிர்பார்க்கவில்லை. அதற்குப் பதிலாக, நீ, உன் போன்ற நிலையில் மாட்டிக் கொண்ட பிறருக்குத் தயங்காமல் உதவி செய்யும் பணியை மாத்திரம் செய்'' என்று வேண்டிக் கொண்டேன்.

அப்புறம் அந்தப் பையனைப் பார்க்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிட்டவில்லை. அவனை ஏற்றுக் கொண்ட என் ஆந்திர நண்பர் சில நாட்களில் ஹைதராபாத்துக்குப் போய்விட்டாராம். அந்தப் பையனும் போய் விட்டான். நானும் கேரள ராஜ்யத்துக்கு வக்கீல் தொழில் செய்யப் போய்விட்டேன். வருடங்கள் ஓடிவிட்டன. எப்போதாவது அந்த இளைஞனின் நினைவு வரும். அவன் நான் எதிர்பார்த்தபடி நல்லவனாக மாறி வாழ்க்கை நடத்துகிறானா, அல்லது குதிரைப் பந்தய மைதானத்துக்குள் அலைகிறானா என்று தெரியாமல் போய்விட்டது.

இன்று என்னவோ அந்தச் சகபிரயாணிகளின் பேச்சில் அடிபட்ட வார்த்தைகள் அவன் நினைவை எழுப்பின. ஜோலார்ப்பேட்டைச் சந்திப்பைத் தாண்டிய பிறகுதான் எனக்குத் தூக்கம் வந்தது.

காலையில் எனக்கு விழிப்பு வந்தபோது பங்களூர் மெயில் பங்காரபேட் சந்திப்பில் தான் நின்று கொண்டிருந்தது. எங்கோ தாமதம் ஏற்பட்டு அந்த மெயில் ஏறத்தாழ ஒன்றரை மணி நேரம் தாமதமாக ஓடிக் கொண்டிருந்தது என்று தெரிந்தது. பர்த்திலிருந்து கீழே இறங்கிக் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு திரும்பியபோது அந்தத் தம்பதிகள் ஏற்கனவே எழுந்து உட்கார்ந்து அவர்கள் பேச்சைத் தொடர்ந்து ஆரம்பித்திருந்தார்கள். மீண்டும், ஆயிரம் இரண்டாயிரம் என்ற வார்த்தைகள் அடிபட்டன.

மோசடிக்காரர்களாக இருந்தாலும் சுறுசுறுப்பாகத்தான் இருக்கிறார்கள் என்று இப்படி வியந்துகொண்டேன். எனக்கென்னவோ நிதி வசூலிப்பவர்களைக் கண்டால் ஒருவித சந்தேகம்; பொதுப் பணம் நல்ல முறையில் செலவாகிறதா என்ற அவநம்பிக்கை.

கீழே ஒரு பக்கமாக உட்கார்ந்தேன். அவர்கள் எந்த ஸ்தாபனத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வதில் ஒருவித ஆவலும் எழுந்தது.

அந்த ஜிப்பாக்காரன் என்னுடைய பார்வையைப் புரிந்துகொண்டுவிட்டான்போலும். பெட்டியைத் திறந்து அச்சடிக்கப்பட்ட ஒரு துண்டுப் பிரசுரத்தை எடுத்துக் கொடுத்தான். நான் கண்ணாடியை மாட்டிக் கொண்டு அதில் கவனத்தைச் செலுத்தினேன்.

அந்தத் துண்டுப் பிரசுரத்தில் காணப்பட்ட ஸ்தாபனம் ஓர் அநாதை ஆசிரமமாகவோ வெறும் சோற்றுக்கூடமாகவோ தோன்றவில்லை. ஒரு நல்ல தொழில் பட்டறையாகத்தான் தோன்றியது. பலவிதக் கைத்தொழில்கள் அதில் போதிக்கப்படுவதாகத் தோன்றியது. அது மாத்திரமல்ல. அதில் பயிற்சி பெற்றவர்கள் அத்தனை பேருக்கும் அந்த ஸ்தாபனமே, அவர்கள் பயிற்சிக்குத் தகுந்தபடி வேலை தேடி வாழ்வளிக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருந்தது. கடந்த ஆண்டில் பயிற்சி பெற்ற அறுபது வாலிபர்களும் இப்போது எங்கெங்கு என்ன ஊதியத்தில் பணியாற்றுகிறார்கள் என்ற குறிப்பும் கண்டிருந்தது.

அந்தத் துண்டுப் பிரசுரம் என்னிடம் வியப்புணர்ச்சியைத் தோற்றுவிக்கத் தவறவில்லை. அது ஒரு தர்ம ஸ்தாபனம். இலவசமாக உணவு உடை கொடுத்துப் பயிற்சியும் அளிக்கிறது. தன் கடமை அத்துடன் தீர்ந்ததாக நினைக்கவில்லை. பயிற்சியினைச் சமூகத்துக்குப் பயனடையவும் செய்கிறது.

''நல்ல முயற்சி'' என்று சொல்லிக் கொண்டே அந்தத் துண்டுப் பிரசுரத்தை அந்த ஆசாமியிடம் திருப்பிக் கொடுத்தேன். அவர்களைப் பற்றிய அபிப்பிராயங்கூட மாறியிருந்தது.

''நன்றி சார்! எனக்கு ஒரு குருநாதன் இருந்தார் சார்! அவர் கிருபையாகத்தான் நான் இந்தப் பணியில் இறங்கினேன். ஸ்வாமி என்னும் பெயர் என்னுடையதுதான். என் பணியில் துணை செய்யவும், என் வாழ்க்கையில் துணை வரவும் இந்த அம்மாள் சேர்ந்து கொண்டார்கள்'' என்றான் அவன்.

கூட இருந்த பெண் நாணத்துடன் அவன் வார்த்தைகளை ஆமோதித்தாள்.

''ஜாதிமத வேறுபாடு இல்லாமல் வாழ வசதியில்லாமல் துடிக்கும் இளைஞர்களுக்கு உதவி நல்ல வழிகாட்டி அவர்கள் உழைப்பைச் சமூகத்துக்குப் பயன்படுத்தும் பணிதான் சார் இது. சர்க்கார் உதவி இதற்குக் கிடைக்காது என்று தெரியும். எனக்கு நல்வாழ்வு அளித்த பெரியார் ஒருவர் என்னை நம்பிக் கொஞ்சம் மூலதனம் கொடுத்தார். என் கண்களில் அகப்படும் அநாதைப் பையன்கள் இளம் குற்றவாளிகளாக மாறும் அபாயம் உள்ளவர்கள் எல்லாரையுமே நான் நாட்டுக்குப் பயனுள்ளவர்களாகச் செய்கிறேன். பொதுப் பணியில் பல அவதூறுகள் சொல்லுகிறார்கள். ஆனால் எங்கள் ஸ்தாபனத்தைப் பொறுத்த வரை காலணா செலவழிப்பதாக இருந்தாலும் நாலு தடவைகள் யோசனை செய்து விட்டுத் தான் எடுக்கிறேன். இந்த வருடம் ஓவிய வகுப்புத் தொடங்க எண்ணம். பங்களூரிலுள்ள சில பிரமுகர்கள் பண உதவி செய்வதாக வாக்களித்திருக்கிறார்கள். அதற்காகத் தான் போய்க் கொண்டிருக்கிறோம். எப்போதும் மூன்றாம் வகுப்புப் பிரயாணம்தான் செய்வோம். ஆனால் இந்தத் தடவை, பங்களூரில் இப்போது நல்ல நிலைமையில் இருக்கும் எங்கள் ஸ்தாபனத்தின் பழைய மாணவன் தன் விவாகத்துக்கு நாங்கள் வரவேண்டுமென்ற ஆசையில் முதல் வகுப்பு டிக்கெட்டுகளை வாங்கிக் கொடுத்து விட்டான்'' என்று கண்ணாடிக்காரர் முடித்தார்.

அவர்கள் பணியைக் கேட்டு என் மனம் நெகிழ்ந்தது. முதல் நாள் இரவு நினைவில் தோன்றிய மளிகைக் கடைப் பையனுக்கு இப்படி ஒரு ஸ்தாபனம் இருந்து உதவியிருந்தால் அவனும் முன்னுக்கு வந்திருப்பான் என்று தோன்றியது. அவன் இப்போது எங்கு என்ன செய்து கொண்டிருக்கிறானோ?

"என் சார்! என் போன்றவர்கள் கொடுக்கும் சிறு தொகைகளையும் ஏற்றுக் கொள்வீர்களா? உங்கள் பணியில் நானும் ஏதாவது சிறு பங்குகொள்ள வேண்டுமென்று ஆசை" என்றேன் தயங்கியவாறே.

அந்த ஆசாமி உணர்ச்சி வசமானான். "சார்! தொகையைப் பற்றிக் கவலையில்லை சார். அதைக் கொடுக்க வரும் மனது நிலை இருக்கிறதே. அதுதான் சார் முக்கியம். நான் ஈடுபட்டிருப்பது அன்புப் பணியில். நீங்கள் அதற்கு உதவுவது நீங்கள் என் பணியில் வைத்திருக்கும் நம்பிக்கையைத்தான் சார் குறிக்கிறது. பணம் பெரிதல்ல. அந்த நம்பிக்கைக்குப் பணத்தைவிட மகத்தான சக்தி உண்டு சார்!" என்றான்.

மணிபர்ஸைத் திறந்து பார்த்தேன். நான் நினைத்த பணம் இல்லை. 'செக்' புத்தகத்தை எடுத்து நூற்றி ஒரு ரூபாய்க்கு எழுதினேன். கையெழுத்திட்டு அந்த ஆசாமியிடம் கொடுத்தேன்.

செக்கைக் கவனித்த அந்த ஆசாமியின் முகத்தில் பல மாறுதல்கள் சடசட வென்று தோன்றி மறைந்தன. நான் கொடுத்த தொகை குறைவா?

தடாலென்று அவன் என் காலில் விழுந்து நமஸ்கரித்து எழுந்தான். "சார்! என்னை நினைவில்லையா சார்?" என்று அலறினான். ரயில் ஓடும் சத்தத்தையும் மீறி அவன் சத்தம் எழுந்தது.

நான் திகைத்தேன். புரியவில்லை.

"நான்தான் சார், நாராயணசாமி! உங்களுக்கு நினைவில்லையா? எனக்காகக் கோர்ட்டில் இருபத்தைந்து ரூபாய் அபராதம் கட்டி வாழ வழிகாட்டினீர்களே சார்! மளிகைக் கடைத் திருடன் நாராயணசாமி சார்! உங்கள் கட்டளைப்படி நான் பணி செய்து கொண்டிருக்கிறேன் சார். செக்கில் இருந்த உங்கள் கையெழுத்து என் மனக் குகையைத் திறந்து விட்டது. அன்று நீங்கள் அந்த ஆந்திரக்காரருக்குக் கொடுத்த அபராதக் கடிதத்தில் போட்ட கையெழுத்தை இன்று மீண்டும் இந்தச் செக்கில் கண்டேன் சார்! உங்களை எங்கெல்லாமோ தேடினேன் இருபது வருடங்களாக. இன்று நீங்களே என் முன்னால் நிற்கிறீர்கள். என் வாழ்வே உங்கள் ஆசியின் விளைவுதான் சார்."

பக்கத்திலிருந்த பெண், கணவன் சொல்லாமலே என்னை நமஸ்கரித்து எழுந்தாள். "அவர் எல்லாம் என்னிடம் சொல்லியிருக்கிறார்" என்றாள்.

என் கண்களில் நீர் திரையிட்டது. அதைச் சமாளித்துக் கொண்டு "நாராயணசாமி! நீ உருவத்தில் மிகவும் மாறி விட்டிருக்கிறாய்!" என்றேன்.

"நீங்களும் தான் சார்!" என்று புன்சிரிப்புடன் சொன்ன அவன் தொடர்ந்து "உள்ளம் என்னவோ அன்று மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் கண்டமாதிரியே இருக்கிறது" என்றான்.

பங்களூர் கண்டோன்மெண்ட் ஸ்டேஷனில் வண்டி நின்றது. நான் என் தற்போதைய விலாசத்தைச் சொல்லி விட்டு இறங்கினேன்.

நான் நாராயணசாமியிடம் அன்று காட்டிய அன்பும் பரிவும் இன்று பன்மடங்காகப் பெருகி அவன் மூலம் பலருக்கு உதவுவது கண்டு நான் பெருமிதப்படாமல் வேறு என்ன செய்ய முடியும்?

## ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காதேவி கோடி அர்ச்சனை

1962ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 3ந் தேதியிலிருந்து 5ந் தேதி வரை ஏற்பட இருக்கும் கிரக நிலை மாற்றங்களால் உலகத்துக்குப் பல தீங்குகள் விளையக்கூடும் என்று அறிஞர்களும் பெரியோர்களும் அறிவுறுத்தி வருகிறார்கள். மனித சக்திக்கும் அப்பாற்பட்ட இந்நிலையிலிருந்து மக்கள் தப்பவேண்டுமென்றால், ஆண்டவனது திருவருள்தான் உடன் நின்று உதவ வேண்டும். இதை உணர்ந்தே பல இடங்களிலும் மக்கள் தெய்வ வழிபாடு நடத்தி வருகிறார்கள்.

இப்போது மாயூரத்தை அடுத்துள்ள தருமபுரத்தில், அங்கு கோயில் கொண்டிருக்கும் அன்னை பராசக்தி ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்கா தேவிக்கு இரண்டாம் முறையாகக் கோடி அர்ச்சனை நடைபெறுகிறது.

உலகிலுள்ள ஜீவராசிகளின் துன்பந் துடைத்து எடுத்த காரியம் யாவிலும் வெற்றி நல்கும் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்கா தேவிக்கு 'நவசக்தி அர்ச்சனை' முறையில் நடத்தப்படும் இந்தக் கோடி அர்ச்சனை இதுவரை அறுபத்தோரு லட்சம் நடந்திருக்கிறது. ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. 2.50ம் நவசக்தி அர்ச்சனைக்கு ரூ. 18.00ம் லட்சார்ச்சனைக்கு ரூ. 150.00ம் செலவாகும். பொது மக்கள் அனைவரும் இப்புனித கைங்கரியத்தில் பங்கெடுத்துக் கொண்டு அன்னை மகாலட்சுமி துர்க்கா தேவியின் அருளுக்குப் பாத்திரர்களாகுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். அர்ச்சனைக்குப் பணம் அனுப்ப விரும்புவோர், ஸ்ரீ வி. இராமநாத அய்யர் 162, மகாதானத் தெரு, மாயூரம், தஞ்சை மாவட்டம் என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.



புதுடில்லி நீதி இலாகா டெபுடி காரியதரிசி திரு ஆர். நடராஜனின் புதல்வி சௌ. சுந்தரிக்கும் திரு வித்தார்த்தாவுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தது.



துர்க்காபூர் ஹிந்துஸ்தான் ஸ்டீல் கம்பெனியைச் சேர்ந்த திரு எச். ராமமூர்த்தி அவர்களுக்கும் சௌபாக்கியவதி நளினிக்கும் திருமணம் நடந்தேறியது.



பம்பாய் 'ப்ரீப்ரஸ் ஜெர்னல்' பத்திரிகையில் பணியாற்றும் திரு கணேசனுக்கும் சௌ. லலிதாவுக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.



சௌத் இந்தியா விஸ்கோஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு ராமானுஜத்துக்கும் சௌ. பூமாதேவிக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.



பம்பாய் திரு ஜி. ஆர். வேங்கடாசலம் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி ருக்மிணி திரு பாலு அவர்களின் புதல்வர் திரு நாராயணனை மணந்து கொண்டார்.



சென்னை திரு ஜி. எஸ். ராகவனின் புதல்வி சௌ. மைதிலிக்கும் திரு குப்புசாமி அய்யங்கார் குமாரர் திரு ராமஸ்வாமிக்கும் இலுப்பாக்கத்தில் விவாகம் நடந்தது.

# வாழ்க மணமக்கள்

கோடிக்கரை கல்கி ஏஜெண்ட் திரு இ. எம். இருளப்பனுக்கும், சௌபாக்யவதி சுப்புலக்ஷ்மிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

நாமக்கல் கவிஞர் திரு வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களின் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும், சென்னை திரு பொன்னுரங்க முதலியார் புதல்வர் திரு ரங்கநாதனுக்கும் திருமணம் நடந்தது.

பம்பாய் பர்மாஷெல் ரிபைனரீஸ் கம்பெனியைச் சேர்ந்த திரு கோபால கிருஷ்ணனுக்கும், சௌ. ராஜலக்ஷ்மிக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.

மெட்ராஸ் அட்வர்டைசிங் கம்பெனியின் பங்களூர் மானேஜர் திரு சுப்பன் அவர்களின் புதல்வி சௌ. கோமதிக்கும், திரு வி. சீனிவாசனுக்கும் திருமணம் நடந்தது.

கும்பகோணம் வேததர்ம சாஸ்திர பரிபாலன சபை ஆர்கனைசர் திரு சீதாராமய்யரின் குமாரர் திரு பாலகிருஷ்ணனுக்கும் சௌ. பவானிக்கும் திருமணம் நடந்தது.

பம்பாய் எம்பயர் டிரேடிங் கம்பெனியைச் சேர்ந்த திரு அமிர்தராஜனுக்கும், சௌ. மதலைராவுக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடைபெற்றது.

# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

24

ஆன்மாவைப் பிணித்துள்ள மும்மலம் என்கிற திரிபுரத்தை எரித்து நம்மை ஆட்கொள்ளுகிறான் இறைவன். அத்தகைய தெய்வத் திருவருள் நமக்கு எளிதில் கிடைக்குமா என்று சந்தேகப்படுகிற மக்களுக்கு உறுதி கூறுகிறார் முனிவர்.

**திரிகின்ற முப்புரம்**
**செற்ற பிரானை**
**அரியன்என்று எண்ணி**
**அயர்வுற வேண்டா**

[திரிகின்ற—இந்த மூன்று அசுரக் கோட்டைகள் ஒரு நிலையில் இல்லை. ஓர் உருவத்தில் இல்லை. பல்வேறு உருவங்கள் எடுத்து, பல்வேறு நிலைகளில் ஆன்மாவைச் சிறை செய்து நிற்பவை. அதனால் "திரிகின்ற முப்புரம்" என்றார்.]

**திரிகின்ற முப்புரம்**
**செற்ற பிரானை**

[செற்ற பிரானை — அழித்த இறைவனை.]

'என் அருளை நாடுங்கள், கோட்டையை நான் தகர்த்து விட்டு, ஆன்மாவுக்கு விடுதலை தருவேன்' என்று உறுதிவாக்குத் தந்துவிட்டபடியால், 'செற்ற' என்று இறந்த காலத்தில் பாடுகிறார்.

**அரியன்என்று எண்ணி**
**அயர்வுற வேண்டா**

[அரியன் என்று—நம்மால் அடைவதற்கு அரியன், அதாவது நம்மால் அணுக முடியாத நிலையிலுள்ளவன் என்று. அயர்வுற வேண்டா—மனத் தளர்ச்சி அடைய வேண்டாம்.]

**புரிவுடை யாளர்க்குப்**
**பொய்யலன் ஈசன்**

[புரிவு—மெய்யன்பு. புரிவுடையாளர்க்கு—மெய்யான அன்பு கொண்டுள்ள பக்தர்களுக்கு. பொய்யலன் ஈசன்!—ஈசன் பொய்க்காது அருள் செய்பவன்.]

**பரிவொடு நின்று**
**பரிசுஅறி வானே**

[பரிவொடு நின்று — கருணையோடு அருள்வதற்கு என்றே காத்திருந்து. பரிசு அறிவானே — அவரவர் தன்மையை அறிந்து அருள் செய்வான். பரிசு அறிவான்—தன்மைக்குத் தக்கபடி அருளத் தெரிந்தவனாகிய இறைவன்.]

**திரிகின்ற முப்புரம்**
**செற்ற பிரானை**
**அரியன்என் றெண்ணி**
**அயர்வுற வேண்டா**
**புரிவுடை யாளர்க்குப்**
**பொய்யலன் ஈசன்**
**பரிவொடு நின்று**
**பரிசறி வானே!**

• • •

உலகங்களையும் உயிர்களையும் படைப்பது, காப்பது, அழிப்பது ஆகிய மூன்று தொழில்களை முறையே மூன்று மூர்த்திகள் செய்கின்றனர் என்பது நமது சாஸ்திரம். உலகங்கள் ஏழு என்றும் ஒரு கணக்கு கூறப்படுகிறது, நம்முடைய பழைய நூல்களில்.

ஏழு உலகங்களைப் படைப்பவன் பிரமன் என்றும், இவற்றைக் காப்பவன் திருமால் என்றும், அழிப்பவன் ருத்திரன் என்றும் தெய்வ சக்தியை மூன்றாக வகுத்துக் கூறுவார்கள். இந்த உருவகத்தினால் தெய்வங்கள் பல என்று எண்ணி, அவற்றிற்குள் பேதம் கற்பிப்பது பாரத நாட்டு வழக்கமாக இருக்கிறது. இதைத் தெளிவுபடுத்துகிறார் திருமூலர்.

**ஒருவனு மேஉலகு**
**ஏழும் படைத்தான்**
**ஒருவனு மேஉலகு**
**ஏழும் அளித்தான்**

[அளந்தான்—தன் அடியால் உலகத்தை அளந்த திருமாலும் அந்த ஒருவனே.]

ஒருவனு மேஉலகு
ஏழும் கடந்தான்

[கடந்தான்—இந்த ஏழு உலகங்களையும் கடந்து நிற்கும் ஈசுவரனும் அந்த ஒருவனே.]

ஒருவனு மேஉட
லோடுஉயிர் தானே

[உடலோடு உயிர்தானே—உடலும் அவனே, உயிரும் அவனே.]

உடலும் உயிருமாக நிற்கிறதும் அந்த இறைவன் தான்.

ஒருவனு மேஉல
கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல
கேழும் அளந்தான்
ஒருவனு மேஉல
கேழும் கடந்தான்
ஒருவனு மேஉட
லோடுயிர் தானே

பழைய உரைகாரர்கள், 'அளந்தான்' என்பதைக் காப்புத் தொழிலாகவும், 'கடந்தான்' என்பதை அழித்தற் தொழிலாகவும் வைத்துப் பொருள் கூறியிருக்கிறார்கள்.

மூன்று தொழில்களுக்கு உரிய மூன்று மூர்த்திகளும் அவனே. ஒரு தெய்வ சக்திதான் இந்த உலகங்களையெல்லாம் திரும்பத் திரும்பப் படைத்து, காத்து, அழிக்கவும் செய்கிறது. அதே சக்திதான் உடலோடு உயிரைக் கூட்டுகிறது, காப்பாற்றுகிறது, பிறகு நீக்குகிறது. இந்தத் தெய்வ சக்தியை ஆர்வம் பொங்கிப் பாடுகிறார் முனிவர்.

உடலாய் உயிராய்
உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில்
நீர்பொழி வானாய்

[கார்முகில்—நீர் கொண்டு கருத்த மேகம். நீர் பொழிவானாய்—அந்தக் கார்மேகங்கள் சூழ்ந்து நின்று, மழையைப் பொழிகிற வானமாய்.]

உடலாகவும், உயிராகவும், உலகமாகவும், கடலாகவும், மேகம் சூழ்ந்து மழை பொழிகிற வானமாகவும் நிற்கின்ற அந்தத் தெய்வம்,

இடையாய் உலப்பிலி
எங்குந்தான் ஆகி

[இடையாய்—காட்சி தருகிற தோற்றமாக இருப்பதோடு அல்லாமல், இவற்றின் உள்ளேயும், இடை வெளியில் உள்ள ஆகாசமாகவும். உலப்பு—தேய்வு. உலப்பிலி—தேய்வு இல்லாத பொருளான. எங்குந்தான் ஆகி—நீக்கமின்றி எங்குமாகி.]

அடையார் பெருவிழி
அண்ணல்நின் றானே

[அடை—அன்பு, அடையார்—அன்பு ஆர்ந்த, நிரம்பிய. அடையார் பெருவிழி—அன்பு நிரம்பிய பெரிய கண்களை உடைய. நம்மை அன்பினால் இழுக்கும் விசாலமான கண்களை உடைய. அண்ணல் நின்றானே—எம் பெருமான் நின்றான்.]

உடலாய் உயிராய்
உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில்
நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி
எங்குந்தா னாகி
அடையார் பெருவிழி
அண்ணல்நின் றானே!

# சிரிக்காதே



''பரீட்சை முடிவுகள் வெளியாகும் பேப்பரில் உங்கள் பெயர் வரவில்லையே என்று வருந்தாதீர்கள். எங்கள் பேப்பரை வாங்கிப் பெயர் வந்ததே என்று மகிழுங்கள். பெயில் ஆனவர்கள் பெயர்களை மட்டும்தான் எங்கள் பேப்பரிலே போடுகிறோம்!''

★

''அந்தப் பசு ஒரு வேளைக்கு என்ன கொடுக்கிறது?''

''ஒரு படி பாலும், இரண்டு உதையும்!''

★



ஒரு டாக்டர் தன் சிஷ்யனுக்கு எடுத்துரைத்தது: ''நோயாளியைச் சோதனை செய்வதற்கு முன்னால் அவன் பர்ஸை முதலில் நீ பரிசோதனை செய்.''

★

நகரத்துப் பையன் (கிராமத்தில் மாடு கறப்பதைப் பார்த்ததும்): இப்படியா பால் கறக்கக் கஷ்டப்படுவாங்க? எங்க ஊரிலே பால் பைப்லே பஸ்லே எல்லோருக்கும் பால் கொடுத்திடும்!

★



ஒருவர்: சார் எனக்குக் கண் சரியாக இல்லை. எதைப் பார்த்தாலும் ரொம்பச் சின்னதாகத் தெரிகிறது.

கண் வைத்தியர்: உங்க சம்பளத்தைப் பார்த்து விட்டு அப்படிச் சொல்லுகிறீரோ?

★

''என்ன டாக்டர் சார், நீங்க படங்கள் எழுதப் பழகிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். எப்படிப் பழக்கமாச்சு?''

''முதலில் காயங்களுக்கு 'டிஞ்சர்' பூச ஆரம்பித்தேன். அடிக்கடி தொண்டைப் புண் உள்ளவர்களுக்குக் குச்சியில் பஞ்சு வைத்து மருந்து தடவ ஆரம்பித்தேன். அப்படியே படம் எழுதத் தொடங்கி விட்டேன்...!''



''அடை மழை பெய்தாலும் கடும் புயல் வீசினாலும் எங்கள் குடை வளையாது, உடையாது என்று விளம்பரம் செய்கிறார்களே, அந்தக் குடையைத் தயவுசெய்து யாரும் வாங்காதீர்கள். ஏனென்றால் ஒரு தரம் காற்றடித்தபோது என் குடை உடையாமல் உறுதியாக இருந்ததால் பத்து மீட்டர் உயரம் குடையுடன் வானத்தில் பறக்கும்படி ஆகி விட்டது!''

—ஊருக்கு நல்லான்

★

''உன் நாட்டுப்பெண் கதை எழுதறாளாமே?''

''அதை ஏன் கேட்கிறே? நாட்டுப் பெண்ணுச்சென்று அதட்டி ஒரு வார்த்தை சொல்ல முடியலே. அதையும் கதையில் எழுதிடறா!''

★



'' 'இவ்வளவு நன்றாக நீங்கள் பாடியதற்கு என் கையில் லக்ஷம் ரூபாய் இருந்தால் உடனே கொடுத்து விடுவேன்' என்றார் என் பக்கத்து வீட்டுக்காரர்.''

—ஒரு பாகவதர்

'' ஆமாம்! ஆமாம்! லக்ஷம் ரூபாய் என்ன சார் பெரிசு மனுஷனுக்கு நிம்மதிதானே வேண்டும்?''

—ஓர் அனுபவஸ்தர்

ரீடா கூந்தலைப் பாதுகாக்கும்





தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்குப் போஷாக்குத் தருவதால் உங்கள் கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும் பளபளப்பான கருமை நிறத்துடனும் காணப்படும். இதிலுள்ள மருந்துச்சத்துக்கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி, பொடுகைபபோக்கி, நரைக்காமல் பாதுகாக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத் தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது நல்லெண்ணெயில் கலந்து எப்போதும் உபயோகியுங்கள். காரிருள் போன்ற கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள் பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன் உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு செய்யுங்கள்.



# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

R.S TM

ரீடா கம்பெனி, சென்னை-1.



# பாலும் பழமும்

தலைப்பு இனிமையா யிருப்பது போலவே படமும் இனிமையா யிருக்கிறது; படத்தின் பாடல்களும் இனிமையா யிருக்கின்றன; நடிகர்களின் நடிப்பும் பார்க்கப் பெருமையா யிருக்கிறது.

கதையில் சிக்கல் எதுவும் இல்லை. புற்று நோய் சிகிச்சைக்கு மருந்து கண்டுபிடித்துப் பெயரும் புகழும் பெற ஆசைப்படும் இலட்சிய டாக்டர் ரவிக்கு நர்ஸ் சாந்தி வாழ்க்கைத் துணையாய் அமைகிறாள். சாந்தி டி. பி. நோயின் பிடியில் சிக்கித் தவிக்கிறாள். அவளைக் கவனிப்பதிலேயே பொழுதெல்லாம் செலவிடும் ரவியைக் கடமையில் கவனம் செலுத்தும்படி செய்வதற்காகச் சாந்தி தன் நோயையும் பொருட்படுத்தாமல் ஊரை விட்டே வெளியேறுகிறாள். அவளைக் காணாது தவித்த டாக்டர் ரவிக்கு ரயில் விபத்தில் சாந்தி மாண்டுபோன செய்தி தெரிய வருகிறது. தன்னை வளர்த்து ஆளாக்கிய பெரிய மனிதரின் மகள் நளினியைக் கடமைக்காக மணந்து கொண்ட பிறகு ரசாயன ஆராய்ச்சிச் சாலையில் ரவியின் கண் பார்வை பறி போய் விடுகிறது. ரயில் விபத்தில் உயிர் தப்பி, நோயும் தீர்ந்து குணமடைந்த சாந்தி கணவனைக் காண வந்து நடந்தவைகளையெல்லாம் அறிந்து வேதனைப்படுகிறாள்.

ஆஸ்பத்திரி நர்ஸாக வரும்போதே சரோஜா தேவி ரசிகர்களின் உள்ளங்களில் இடம் பிடித்துக் கொள்கிறார். காதல் காட்சிகளில் காணப்பட்ட மலர்ச்சியும் வனப்பும் கண்ணுக்கு இனிமையாக இருந்தாலும், நோயுற்ற பிறகு இருந்த வாட்டமும், வேதனையும் மனத்தில் நன்கு பதிந்து விடுகின்றன. அது தத்ரூபமான நடிப்பு. பார்வையிழந்த ரவியைப் பார்த்துக் கொள்ள நர்ஸ் நீலாவாக வந்து வேதனைப்பட்டு வெந்து போகும்போது நாமும் வேதனைப் படுகிறோம். சாந்தி மீண்டும் கணவனை அடைகிற வரையில் நம் மனமும் நிலையிழந்து தவிக்கிறது. சரோஜா தேவி தமக்குக் கிடைத்த வாய்ப்பை மிகவும் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

ரவியின் பாகம் சிவாஜி கணேசனுக்கு எல்லாவிதத்திலும் பொருத்தமானது. சாந்தி வீட்டை விட்டுப் போனதை அறிந்ததும் அவர் துடிக்கிற துடிப்புத்தான் உண்மையான நடிப்பு. அது படத்துக்கே ஒரு சிறப்பு. ''போனால் போகட்டும் போடா'' என்று பாடிக் கொண்டு ரவி போகும் போது வரும் சுற்றுப்புறக் காட்சிகள் டைரக்ஷனுக்கு ஒரு 'சபாஷ்' போட வைக்கின்றன. கண்ணை இழந்த ரவி, நர்ஸ் நீலாவிடம் தன் டைரியை எடுத்துப் பழைய பாட்டைப் பாடச் சொல்லும் காட்சி எல்லாரையும் உருக வைக்கிறது. அந்தக் கட்டத்தில் சரோஜாதேவியின் நடிப்பு அற்புதமானது.

எம். ஆர். ராதா நடிக்கும் படத்தில் ஹாஸ்ய நடிகனுக்கும் வேலையில்லை; வில்லனுக்கும் வேலையில்லை. அவரேதான் இரண்டு பாகங்களையும் ஏற்றுக் கொண்டு விடுகிறாரே! சில சமயங்களில் நன்றாக அமைந்து விடும் அவரது நடிப்புக்காக, அவர் கத்தும் கத்தல்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது!

எஸ். வி. சுப்பையா ரவியின் வளர்ப்புத் தந்தையாக வருகிறார். கால் ஊனமுற்ற அவர் நடக்க முடியாமல் நோயாளி வண்டியில் நகர்ந்தாலும், ரசிகர்களின் உள்ளங்களை நகரவொட்டாமற் செய்து விடுகிறார். தம் மகள் நளினியை விரும்பாமல் ரவி சாந்தியை மணக்க நிச்சயித்ததை அறிந்து பதற்றப் படாமல் பண்போடு சம்மதம் அளித்த கட்டம் ஒன்று போதும், அவரது நடிப்பின் உயர்வைக் காட்ட.

டி. எஸ். பாலையா இரைக்கதைக்குத் தேவைப்படுகிறார். ஆனால் நம்மால் அவர் தேவையை உணர முடியவில்லையே!

சௌகார் ஜானகியின் நடிப்புத் திறமையைக் காட்ட நளினியின் பாகம் ஏற்றதுதான்.

ரவியின் தம்பி படத்தில் அதிகத் தொடர்பு கொள்ளா விட்டாலும் ரவிக்குப் பார்வை திரும்புவதற்கு அவன் தேவைப்படுகிறான். கதையின் பிற்பகுதியில் அவனுக்கு மணம் முடிப்பதற்காகச் சாந்தியின் தங்கையைக் கொணர்ந்திருப்பது, ரவியின் மாறாட்டமான பேச்சு எல்லாம் என்னதான் திறமையாகப் புனையப்பட்டிருந்தாலும் வெறும் கதையாகப் போய் விடுகின்றனவே!

''நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும்'' என்ற பாட்டும், ''பாலும் பழமும் கைகளில் ஏந்தி'' என்ற பாட்டும் நன்றாயிருக்கின்றன.

தலைப்புக்கும் படத்துக்கும் சம்பந்தப் படுத்திப் பார்ப்பது மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட முயல்வது போலாகும். பார்க்க மிகவும் சுவாரசியமா யிருக்கிறது படம். அது போதாதா?—காந்தன்




நம் முன்னோர்கள் வாழ்ந்து மறைந்து போனதைப் பற்றிப் பேசும்பொழுது அது கதையாகிறது. இனி நாம் வருங்காலச் சந்ததிகளை நினைத்துப் பேசும்பொழுது கற்பனைக் கதையாகிறது. சரித்திர ஏடுகளில் தியாகம் புரிந்த அரசனைப் பற்றிப் பேசும்பொழுது அது சரித்திரக் கதையாகி விடுகிறது. தீப ஜோதியைச் சுற்றிலும் ஓர் ஒளி வட்டம் இருப்பதுபோல் ஒவ்வொரு மனிதரைச் சுற்றிலும் ஒரு கதை வளைந்து வருகிறது. ஆனால் சாதாரண மனித வாழ்க்கை அமர காவியமாகாது; சிறந்த இலக்கியப் படைப்பாகாது.

பின் சுவையுள்ள கதை எப்படிப் பிறக்கிறது?

துன்பத்தைக் காவியத்திலும் ஓவியத்திலும் ரசிக்கிறோம். ஆனால் வாழ்க்கையில் இல்லை. இன்பத்தை வாழ்க்கையிலும் ரசிக்கிறோம், காவியத்திலும் ரசிக்கிறோம். எழுத்தாளர் தமக்கென ஓர் உலகத்தில் வாழ ஆரம்பிக்கிறார். அவர்கள் சிருஷ்டிக்கும் ஓர் உலகத்தில் வீரம், காதல், தியாகம், அன்பு இப்படி மேலான உணர்வையுடைய பாத்திரங்களை உருவகப்படுத்துகிறார்கள். இவ்வுயர்வை மேலும் எடுத்துக்காட்டப் பகைமை, பொறாமை, கோபம் இப்படி நேர்மாறான குணங்களையுடைய பாத்திரங்களையும் அவர்கள் கதை உலகுக்கு அழைத்துக் கொள்கிறார்கள். பிறகு என்றோ கேட்ட சம்பவம், அறிந்த விஷயம், பார்த்த மனிதர்களுடைய குண சித்திரங்கள் இவையெல்லாம் அவர்கள் மூளையில் அடுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன. கிரௌஞ்ச பட்சியின் ஒரு சிறு தூண்டுதலால் ராமாயணம் என்ற மகாகாவியம் பிறந்தது போல் ஒரு சிறிய தூண்டுதலினால் எழுத்தாளர்களிடமிருந்து நாவல் பிறக்கிறது.

நான் சிறுமியாக இருக்கும்போது என் அன்னை அவர்கள் தம் பிறந்த வீட்டுக் குடும்பத்தில் நடந்த சம்பவங்களைப் பற்றிச் சுவையுடன் கதை, கதையாகச் சொல்லுவார். என் அன்னை கோவையாக உப கதைகளுடன் அழகாகச் சொல்வது அப்படியே காட்சிகளை நேரில் பார்ப்பது போல் தோன்றும். அந்தக் குடும்பக் கதையில் என் பாட்டி கதாநாயகி. அழகும் குணமும் நிறைந்த என் பாட்டிக்கு அதிர்ஷ்டத்தைப் பிரம்மன் எழுத மறந்து விட்டான். வாழ்க்கையில் தாங்க முடியாத கஷ்டத்தையும் துன்பத்தையும் தாங்கி நின்ற என் பாட்டி பொறுமையில் பூமாதேவியாக விளங்கினார். 'ஒரு கன்னத்தை அடித்தவனுக்கு இன்னொரு கன்னத்தையும் காட்டு' என்று ஏசு கிறிஸ்து சொன்னதை நடைமுறையில் கடைப்பிடித்தார். தன்னை அநாவசியமாக வசை மாரி பொழிந்தவர்களைக்கூடத் திரும்பிக் கோபிப்பதில் அர்த்தமில்லை என்று விவேகத்துடன் என் பாட்டி சொல்வது வழக்கம் என்று என் அன்னை சொல்லுவார்.

எனக்கு ஐந்து வயதாக இருக்கும் பொழுதே என் பாட்டி மறைந்துவிட்டார். ஆனால் அவருடைய அன்பு முகம் என் மனத்தில் மங்கிய சந்திரன் போல் பதிந்தது. முப்பது ஆண்டுகள் என் மனத்திலேயே பொறுமையாக என் பாட்டி அமைதியாக இருந்தார். நான் 'காப்டன் கல்யாணம்' எழுதும்போதுதான் அவர் என் மனத்தை விட்டு இறங்கிச் செல்லம்மாள் என்ற பெயருடன் தோன்றினார்.

என்னுடைய பதினாறும் வயதிலிருந்து இருபது வயது வரை மதுரை ராஜாங்கம் நூல் நிலையத்திலுள்ள நூற்றுக்கணக்கான தமிழ் நாவல்களைப் படிக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி அய்யங்கார், ஜே. ஆர். ரங்கராஜு, வை. மு. கோதை நாயகி அம்மாள் இவர்களுடைய நாவல்கள் மிகுந்திருந்த காலம் அது. அதே சமயம் கல்கியின் உயர்தரப் படைப்புகள் தோன்ற ஆரம்பித்தன. கல்கியின் கதையைப் படிக்கும்போதுதான் எனக்கும் எழுத வேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது. கானன் டாயில் எழுதின சிறுகதைகளையும், அமரர் கல்கி எழுதிய கட்டுரைகளையும் சிறுகதைகளையும் திரும்பத் திரும்பப் படித்தேன்.

எழுத்தாளர்களில் சிலர் எழுதி, எழுதிக் கிழிப்பதாகச் சொல்லிக் கேட்

டிருக்கிறேன். ஆனால் நான் எழுதிக் கிழித்ததில்லை. (உண்மைதான். நான் பிரமாதமாக எழுதிக் கிழித்து விட வில்லையல்லவா!) ஒரு தடவை எழுதி னதை என்னால் மறுமுறை மாற்றவும் முடிவதில்லை. எழுதுவதற்கு முன் விஷ யங்களைப் பிரித்துச் சிறு தலைப்புகள் கொடுத்துக் கொண்டு எழுதுவது என் வழக்கம். இதை அநேக எழுத்தாள அன்பர்களின் கேள்விக்குப் பதிலாக இச்சந்தர்ப்பத்தில் தெரிவிக்கிறேன்.

1938-ம் ஆண்டில் எழுத ஆரம் பித்தேன். என் முதல் கதை திரும்பி வராமல், 'திருமகள்' பத்திரிகையில் பிரசுரமாயிற்று. முதல் பதினெட்டு வருஷங்களில் நூற்றுக்கணக்கான கட்டுரைகளும், சிறுகதைகளும், விமர்சனங்களும், நடைச் சித்திரங்க ளும் எழுதினேன். ஆனால் ஒரு நாவல் எழுத நான் முயலவில்லை. கதை களில் பெரும்பாலானவை பேராசிரி யர் கல்கி அவர்களால் பாராட்டப் பட்டன. சங்கீதத்தில் பாணி என் கிறார்களே அது போல், கட்டுரைகள் எழுதுவதில் ஆசிரியர் கல்கியின் பாணி யைத்தான் பின்பற்றினேன். அதில் ஓரளவாவது வெற்றி அடைந்திருப் பேனா என்பதைத் தீர்மானிக்க வேண் டியதை வாசகர்களுக்கு விட்டு விடு கிறேன். என் சிநேகிதிகள் 'ஏன் நாவல் எழுதவில்லை?' என்று அநேகம் முறை ஆவலாகக் கேட்பார்கள். எனக்கு அவ காசம் கிடைக்கவில்லை.

ஆறு ஆண்டுகளுக்கு முன்பு "ராஜக்கா" என்ற என் குறுநாவல் ஆனந்த விகடனில் வெளிவந்தது. அதில் ராஜக்கா என்ற பாத்திரம் எங்கள் குடும்பத்தில் நெருங்கிய தொடர்பு கொண்ட ஒருவருடைய குண சித்திரம்தான். மிராசுதார் சுந்தரமய்யர் என் தந்தையுடன் அடிக்கடி வந்து பேசிப் பழகும் ஒரு நண்பர். என் மதிப்புக்குரிய சகோதரி ஸ்ரீமதி குகப்ரியை அவர்கள் "ராஜக்கா மிகச் சிறந்த கதை. உயர்ந்த கற்பனை. நம்முடன் வெகு நாட்கள் பழ கின பாத்திரம்தான் ராஜக்கா. ஆனால் கதையில் விஷயங்கள் நிறைய இருக்கின் றன. குறுநாவலுக்கு அதிகம். சில இடங்களில் தலையணைக்கு அதிகம் பஞ்சு அடைத்த மாதிரி இருக்கிறது. இதை விவரித்து நெடுங்கதையாக எழுதியிருக் கலாம்" எனத் தெரிவித்தார்.

"ராஜக்கா"வுக்குப் பிறகு எனக்கு நெடுங் கதை எழுதும் ஆவல் அதிக மாயிற்று. என் வீட்டுத் தோட்டக்கார னுடைய குண சித்திரம்தான் அனேக வருஷங்களுக்குப் பிறகு 'படகுக்காரப் பொன்னன்' என்ற குறுநாவலுக்கு ஆதாரமாயிற்று.

என்னோடு பழகியவர்கள், பேசிய வர்கள் எல்லோருடைய குண சித்திரங் களும் என் மனத்தில் கார்கால மேகம் போல், வெள்ளைப் பஞ்சு போல் தனித் தனியாகப் பறந்துகொண்டிருந்தன.

1947—48-ம் ஆண்டில் காஷ்மீர் யுத்தத்தில் சென்னை மாநகரைச் சேர்ந்த ஒரு வாலிபன் ராணுவப் படையில் வீர மரணம் அடைந்த செய்தி மனத்தில் ஆழமாகப் பதிந் திருந்தது. அந்த வீர வாலிபனுக்கு என் மனத்திலேயே வீரக் கல் நாட்டிக் கரம் குவித்து விட்டேன். எனவே என் நாவலுக்கு அந்த வாலிபனை கல்யாணராமன் என்ற பெயருடன் கதா நாயகனாக அமைத்து விட்டான். எங்கள் வீட்டுக்கு வரும் ஓர் எழுத்தாள நண்பர் 'பெண்கள் நாவல் எழுதினால் சமையல் கட்டு, கணவன் - மனைவி சண்டை, மாமி-மருமகள் போராமல் இப்படியாகத் தான் எழுதுவார்கள். அரசியல், யுத்தம், கோர்ட்டு விவகாரம் இவைகளை யெல் லாம் அறிந்து தெரிந்து பெண்களால் கதை எழுத முடியாது' என்று கேலி செய்வார். காஷ்மீர் யுத்தத்தைக் கருவூல மாக வைத்து ஒரு நல்ல நாவல் எழுதி அவருக்குக் காட்ட வேண்டும் என்று விரும்பினேன். முக்கி யமான கதா பாத்தி ரங்களை உருவகப்படுத் திக் கொண்டேன்.

எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. கதைக்கு நிலைக்களமாகக் காஷ் மீரைத் தேர்ந்தெடுத் தேன். உடனே காஷ் மீருடைய நிலை, இயற் கையின் அழகு, அந்த நகரத்தின் சரிதம் எல்லாவற்றையும் அறிந்துகொண்டேன். ஒரே இடத்தில் கதை



வளர முடியாது அல்லவா? எனவே அந்த யுத்தத்தில் வீர மரணமடைந்த வாலிபனைத் தஞ்சை ஜில்லா மிராசுதார் குடும்பத்தைச் சேர்ந்தவனாக அமைத்தேன். தஞ்சையும் கதைக்குக் களமாக இருந்தது. ராணுவ முகாம், பழக்க வழக்கங்கள், யுத்த சமயம் நடந்த நுட்பமான சம்பவங்கள், யுத்த தந்திரங்கள் இவைகளையெல்லாம் பாடுபட்டுச் சேகரித்தேன். அப்படியே எழுதி விட்டால் சரித்திர பாடம். அதை நாவலாக எழுத அநேக உப பாத்திரங்களையும் சிருஷ்டித்தேன். அப்படிப் பிறந்த பாத்திரங்களில் குப்புசாமியைப் போன்றவர்கள் எல்லா வாசகர்களும் அறிந்த நபர்தான். காமு அத்தை போன்ற காரியவாதி, மங்களத்தைப் போன்ற கபடற்ற பெண், வாஞ்சிநாத ஐயரைப் போன்ற தன்மையுள்ள மனிதர், ஹேமலதாவைப் போன்ற சலன புத்தியுள்ள நாகரிகப் பெண் முதலிய எல்லோரும் வாசகர்களுக்கு அறிமுகமானவர்களே.




வாழ்க்கையில் பிறர் கண்களுக்குத் தெரியாத இன்ப துன்பங்கள், சிக்கல்கள் அனைத்தையும் ஆராய்ந்து நல்லதொரு நாவலாகப் படைத்தேன். ஆனால் கடைசியில் கதாநாயகன் கல்யாணராமனை வீர மரணம் அடைய என் எழுத்தாள நண்பர்களும், வீட்டில் உள்ளவர்களும் சம்மதிக்கவில்லை. கல்யாணராமன் நண்பன் மாதுவையாவது வீர மரணமடையச் செய்ய வேண்டுமென்று விரும்பினேன். தமிழ் வருஷப் பிறப்பன்று முடியும் அந்த நாவலைத் தமிழ் நாட்டு மரபுக்கேற்ப மங்களகரமாக முடிக்க வேண்டுமென்று என் கையைக் கட்டி விட்டார்கள்.

தேனீக்கள் மதுவைச் சேகரித்துத் தேனாக மாற்றுவது போல் கற்பனா சக்தியால் நிகழ்ச்சிகளுக்குக் கலை கூட்டினால்தான் நாவல் பிறக்கும். நம் பிறப்பே ஒரு கதை. நாம் வாழும் வாழ்க்கை ஒரு கதை. ஆனால் நாம் மறைந்தாலும் நமது கதை வாழ வேண்டும். பிறரை வாழவும் வைக்கவேண்டும்.

# போலீஸ்காரன் மகள்

**காந்தன்**

ஆவலோடு எதிர்பார்க்கும் அதிசயக் காட்சிகளோ, பரபரப்பையூட்டும் படபட வெனப் பொழியும் வசனங்களோ இல்லாமல் ஒரு சாதாரணக் கதையை வைத்துக்கொண்டு பார்ப்பவர் உள்ளம் பரவசம் அடையும்வண்ணம் நாடகமாக நடிக்க முடியும் என்பதைப் "போலீஸ்காரன் மகள்" என்னும் நாடகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்.

கடமையில் கண்ணும் கருத்துமாக இருந்த ஒரு போலீஸ்காரர் மார்த்தாண்டம்; அவரது அருமை மகள் நீலா; நீலாவினிடம் உயிரையே வைத்திருக்கும் அவள் அண்ணன் சின்னையா; நீலாவைக் காதலித்த பணக்காரர் வீட்டுப் பிள்ளையான பார்த்தசாரதி; கணவனே கண்கண்ட தெய்வமென வாழ்ந்த மார்த்தாண்டத்தின் மனைவி. பார்த்தசாரதியின் அத்தை மகள் மல்லிகா. இந்தப் பாத்திரங்களை வைத்துக் கொண்டு உருவாக்கப் பட்ட இந் நாடகம் ஒரே உணர்ச்சி மயமாக விளங்குகிறது.

வீட்டில், பிள்ளையார் படத்துக்கு எதிரில் அண்ணனும் தங்கையும் தோப்புக்கரணம் போட்டு அன்பாகப் பழகும் முதல் கட்டமே களைகட்டி விடுகிறது.

நீலாவாக நடிக்கும் சாந்தினி இந் நாடகத்தில் முக்கியமான பாத்திரம். அரச மரத்துப் பிள்ளையாரைச் சாட்சியாக வைத்துப் பார்த்தசாரதியை மணந்து கொள்வதிலிருந்து, கணவனால் கைவிடப்பட்டது, தந்தையின் கோபத்துக்கு ஆளானது, தமையனை வேதனைக்குள்ளாக்கியது, கடைசியில், நீதி மன்றத்தில் தன்னைக் கைவிட்ட கணவனைக் கொலைக்குற்றத்தினின்றும் காப்பாற்றச் சாட்சி கூறியது ஆகிய எல்லாக் கட்டங்களிலும் சாந்தினியின் நடிப்பு பரவசமுறச் செய்கிறது. நாடக ஆரம்பத்தில் இருந்த சிரிப்பையும் களிப்பையும் மறந்து கடைசியில் அத்தனை உருக்கமாக எப்படித்தான் நடிக்க முடிகிறதோ?

மார்த்தாண்டம் இல்லை யென்றால இந்த நாடகமே இல்லை. அந்தப் பாத்திரத்தை ஏற்ற சகஸ்ரநாமம் இணையற்ற முறையில் நடித்திருக்கிறார். டி.எஸ்.பி. யின் விசாரணையின் போது மார்த்தாண்டம் தன் உணர்ச்சிகளை மரமாக்கிக் கொண்டு நிற்கும் காட்சியில் சகஸ்ரநாமத்தின் முக பாவங்கள் மௌனமாக அவரது நடிப்புத் திறமையை வெளிப்படுத்துகின்றன. மகனைச் சவுக்கால் அடித்து விட்டுக் கதறும் போதும், மகனை அடித்து நொறுக்கி விட ஓங்கின கையைத் தளரவிட்டு, "போடா, என் முன்னே நில்லாதே!" என்று அயர்வும், சோகமும் பொங்கும் குரலில் கூறச் சகஸ்ரநாமம் ஒருவரால்தான் முடியும்.

கோபாலகிருஷ்ணன் மார்த்தாண்டத்தின் மகன் சின்னையாவாக வந்து அதியற்புதமாக நடித்தார். நாடகம் பார்க்கிறோம் என்னும் நினைப்பே நழுவி விட்டது. மார்த்தாண்டத்தின் மனைவியின் பாகத்துக்குத் தத்ரூபம் கொடுத்து நடித்த லக்ஷ்மி, மல்லிகாவாக வந்து சாகஸமாகவும் சாதுர்யமாகவும் நடித்த சந்திரகாந்தா, பூக்காரனாக வந்து பூமணத்துடன் மேடையில் நகைச்சுவை மணமும் வீசும் வண்ணம் செய்து நாடகத்தையும் சரியான படி முடித்து வைத்த வீரப்பன் ஆகிய எல்லா நடிகர்களும் மிக நன்றாக நடித்தனர். பூக்காரியாக வந்த பெண்மணியின் நடிப்பும், நொடிப்பும் மனத்தில் பதிந்து விட்டன.

பார்த்தசாரதியின் பாத்திரம் நாடகத்துக்குத் திருப்பம் கொடுத்துச் சுவையூட்டும் பாத்திரம். அதை ஏற்ற முத்துராமன் நன்றாக நடித்தார்.

பார்த்தசாரதியின் தந்தை இதய நோயால் துடித்தபோது நாடகம் பார்த்தவர்களும் துடித்தனர். சிறந்த நடிப்பு.

ஒரு சாதாரணக் கதையை வைத்துக் கொண்டு இத்தனை உணர்ச்சியை எப்படிக் கொட்ட முடிந்தது என்று எண்ணிப் பார்த்த போது மேற்படி கதையில் ததும்பி நிற்கும் நாடக இயல்புதான் என் உள்ளத்திலும் ததும்பியது. மேடைக்கு ஏற்ற சம்பவங்களினால் மட்டும் நாடகத்தைத் திறம்பட நடத்திவிட முடியாது. நாடகத்தின் உயிர்நாடியாக விளங்கும் உணர்ச்சி மயமான கட்டங்களைப் படைப்பதுதான் நாடகத்துக்கு வெற்றியை அளிக்கிறது. நடிப்புக் கலையின் நாயகமாக விளங்கும் சகஸ்ரநாமம் அதைப் புரிந்து கொண்டிருப்பதில் வியப்பில்லை.

இந்நாடகத்தின் ஆசிரியர் பி.எஸ். ராமையா என்று கூறினாலே போதும். அதன் சிறப்பு நன்கு விளங்கி விடும்.

கலாசாகரம் ராஜகோபாலின் காட்சி அமைப்புகள் நாடக நிகழ்ச்சிகளுக்கு உண்மையான சூழ்நிலைகளை அளிக்கின்றன.





குளோரினேஷன் மூலம்

# தண்ணீர்

சுத்தமாவதற்கு

# ஸூர்க்ளோர்

SURECLOR (U. S. A.)

ஆட்டோமாடிக் குளோரினேட்டர்
உபயோகியுங்கள்
சுலபமானது. செலவு சிக்கனம்.

தானே இயங்குவது — டோஸேஜ் அளவை அட்ஜஸ்ட் செய்யக்கூடியது — ஆட்டோமாடிக் டோஸேஜ் காம்பவுண்ட் பில்ட்-இன்-பில்ட் குளோரின் டெஸ்ட் செட், ரெடி ஸ்டாக்.

இயங்கும் விதத்தைப் பார்வையிட எங்களுக்கு எழுதுங்கள்,

## ஈசன் இஞ்ஜினீரிங் கம்பெனி லிமிடெட்,

5.7, லெகண்ட் லேன் ரீச் — மதராஸ் - 1.



# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**



## பாஸ்கர் ராய் சவுத்திரி

அயல்நாடுகளுக்கு இங்கிருந்து பல கலைஞர்கள் செல்வதும் ஏதாவது ஒரு வகையில் அதிருப்திப்பட்டு முணுமுணுத்துக் கொண்டே திரும்புவதும் வழக்கமான கதையாகிவிட்டது. ''பத்தாயிரம் ரூபாய் நஷ்டம். அவர்களுக்கு ரசிகத்தன்மை போதாது; கௌரவமாக நடக்கத் தெரியவில்லை'' என்பது போன்ற குற்றச்சாட்டுகளைக் கேள்வியுறுகிறோம்.

ஆனால் அமெரிக்காவுக்குச் சென்ற ஒருவர் தாம் நாட்டியமாடியதுடன் நில்லாமல் பரதக் கலையில் அமெரிக்கப் பெண்கள் பலருக்குப் பயிற்சியும் அளித்திருக்கிறார். அதுமட்டுமா? தம்மிடம் ஆடல் பயின்ற பலரைக் கூட்டி நாட்டியக் குழு ஒன்றினை நிறுவிப் பணம் சம்பாதிக்கவும் செய்கிறார்! அவர்தான் ஸ்ரீ பாஸ்கர் ராய் சவுத்திரி. பிரபல ஓவியர் ஸ்ரீ ராய் சவுத்திரி அவர்களது புதல்வன்.

''ஒரு நாளைக்கு எட்டுமணி நேரம் என் குழுவினருக்கு நடனப் பயிற்சி அளிக்கிறேன்'' என்கிறார் ஸ்ரீ ராய் சவுத்திரி. தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பரத நாட்டியம் கற்கும் குழந்தைகள் கவனிக்க!

''பரதக் கலையை ரசிப்பதோடு மட்டுமல்ல; ஆடுபவர்களிடம் உள்ள குற்றங் குறைகளைச் சுட்டிக் காட்டி விமர்சனம் செய்யும் திறமையைப் பெறும் அளவுக்குப் பல அமெரிக்கர்கள் இதிலே ஆர்வம் காட்டுகிறார்கள்'' என்றும் கூறுகிறார் ஸ்ரீ ராய் சவுத்திரி.

ஆனால் அமெரிக்கப் பொது மக்களுக்கு நடன நிகழ்ச்சியை அளிக்கும்போது அவர்கள் மனப்பான்மைக்கு ஏற்ப நடைமுறையில் சிற்சில மாற்றங்களைச் செய்ய வேண்டியிருக்கிறதாம். எப்படியோ நமது நாட்டியக் கலையின் தூய்மை கெடாதிருந்தால் சரிதான், இல்லையா? 'கெடவில்லை' என்று உறுதியளிக்கிறார் ஸ்ரீ பாஸ்கர். பின்னென்ன? மகிழ்ச்சிதான் நமக்கு.

---

## சாணக்கிய சபதம்

'சாணக்கிய சபதம்' நாடகப் பிரதி கைக்கு வந்து சேர்ந்து பல வருஷங்களுக்குப் பிறகுதான் நாடகம் அரங்கேறியதாம். அதற்குக் காரணம், அதனை வெற்றிகரமாக நடத்திக் காட்டுவது என்று ஸ்ரீ மனோகர் உறுதி பூண்டதாகத்தான் இருக்க வேண்டும். கடினமான காரியத்தை மேற்கொண்ட போதிலும் சிறப்பாகச் செய்து காட்டுகிறேன் என்று சாணக்கிய சபதம் மேற்கொண்டார் போலும்! சபதம் நிறைவேறி விட்டது. பெரியதொரு வெற்றி தான் மனோகருக்கு. அவிழ்த்துவிட்ட குடுமியில் ஒன்றுக்கு இரண்டாகவே முடிச்சுப் போட்டுக்கொள்ளலாம், தாராளமாக!

இதற்குமேல் விமர்சனம் ஏதும் தேவையில்லை தான். என்றாலும் ஒரே ஒரு விஷயம் மனத்தை உறுத்துகிறது.

சந்திரகுப்தனை அழிக்க ஏவி விடப்படுகிறாள் விஷக்கன்னி மாலா. இந்தப் பாத்திரப் படைப்பு, சிறுகச் சிறுக விஷமருந்தி நாளடைவில் தன் உடல் முழுவதையுமே விஷமயமாக்கிக் கொண்ட நாகநந்தி அடிகளை நினைவூட்டுகிறது. 'கல்கி' அவர்களிடமிருந்து ஒரு கதாபாத்திரத்தைக் கையாடியது குற்றமே.



# வெள்ளிப் பனி மலை வீதியிலே

## 7. யாத்திரை நிறைவெய்தியது

**என்.வி.அனந்தராமன்**

தீர்த்தபுரி ஸட்லெஜ் நதியின் வலது கரையில் உள்ள திவ்ய க்ஷேத்திரமாகும். இங்குள்ள கோயில்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தது ஸக்ய முனிகோயில்.

சிவபெருமானிடம், 'யார் தலையில் நான் கை வைத்தாலும் அவர்கள் அழிய வேண்டும்' என்று வரம் பெற்று விட்டு அவர் தலையிலேயே கை வைக்க முயன்று அதன்பின் மோகினியால் அழிந்த பஸ்மாஸுரன் சாம்பலான இடம் இதுதான் என்கிறார்கள்.

தீர்த்தபுரியில் சிறியனவும் பெரியனவுமாகிய வெந்நீர் ஊற்றுக்கள் பல இருக்கின்றன. இந்த ஊற்றுக்களில் நீர் கொந்தளித்துக் கொண்டு பொங்கி வழிந்து பாய்கிறது. பக்கங்களிலும் நிற்க முடியாதபடி வெம்மைக் கதிர் பரப்புகின்றன இவ்வூற்றுக்கள். குளிர்ந்த பனி மலைச் சிகரங்களின் இடையே வெந்நீர் ஊற்றுக்களைக் கண்டபோது இயற்கையின் விந்தைகளை வியக்காமலிருக்க முடியவில்லை. வெந்நீர் ஊற்றுக்களை அடுத்தாற்போலக் கீழே ஐந்தடிப் பள்ளத்தில் ஸட்லெஜ் நதியில் கையை வைத்தால் 'ஐஸ்' மாதிரிக் குளிர் தாக்குகிறது. வெந்நீர் ஊற்றுக்களைச் சுற்றிலும் சாம்பல் போல் வெண்மையாகக் குவிந்துள்ள மண்ணைப் பிரசாதமென்று எல்லாரும் எடுத்துக்கொண்டு போகிறார்கள். எங்கே பார்த்தாலும் திபெத்திய பாஷையில் எழுதப்பட்ட மந்திரங்களோடு கூடிய பாறைகள் தென்படுகின்றன. மறு தினம் திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய திருநாள். இமயமலையில் எங்கோ ஒரு மூலையில் திபெத் மண்ணில் இருந்த போதும் நம்முடைய தமிழ்நாட்டுத் திருஞானசம்பந்தரை நாங்கள் மறந்துவிடவில்லை. அமோகமான உற்சாகத்துடன் வடை பொங்கலோடு அந்தத் திருவிழாவைக் கொண்டாடினோம். அன்று மாலை திபெத்திலுள்ள புத்தர்கோவில் வழிபாட்டு முறைகளை அறிந்து கொள்வதற்காகப் பௌத்தக் கோவில் ஒன்றைக் காணச் சென்றோம். பௌத்தர்கள் கோவிலிலே அர்ச்சகர்களை 'டாபாஸ்கள்' என்று அழைக்கிறார்கள். அவர்களும் கோவில்களிலேயே வசிக்கிறார்கள். இக் கோவில்களில் செய்யும் அர்ச்சனைக்கு மான்-இ-யா-சா-என்னும் அபிஷேகத்துக்கு "ஜூரும்" என்றும் பெயர். திபெத் நாட்டு வழக்கப்படி குடும்பத்திலே பிறக்கும் முதல் குழந்தை ஆணாயினும், பெண்ணாயினும் அதைக் கோவிலுக்குக் கொடுக்க வேண்டும். இப்படிக் கொடுக்கப் படுகிற குழந்தைகள் தாம் பின்னர் 'டாபாஸ்கள்' ஆகிறார்கள். 'டாபாஸ்'களுக்கும் உயர்ந்த படியில் உள்ளவர்கள் பின்னர் 'லாமாக்கள்' ஆகிறார்கள். ஆனால் லாமாக்கள் மிகவும் சிறு தொகையினரே. லாமாக்களுக்கு எல்லாம் தலைவர்தான் தலாய்லாமா. திபெத்தியர்கள் தலாய்லாமாவைக் கடவுளின் அவதாரம் என்றே கருதுகிறார்கள். தலாய் லாமாவின் புகைப்படத்தைச் சட்டைப்பையில் வைத்திராத திபெத்தியனைத் 'திபெத்' முழுதும் தேடிப் பார்த்தாலும் கூடக் கிடையாது என்று சொல்லலாம். திபெத்தியர் கோவிலுக்குக் 'கொம்பா' என்று பெயர். தரிசனத்துக்கு வருகிறவர்கள் கொடுக்கும் பணத்துக்கேற்ப டாபாஸ்கள் விளக்கு ஒன்றைக் கொடுக்கிறார்கள். நாம் அந்த விளக்கை ஏற்றிப் புத்த பகவானுக்கு முன் வைக்க வேண்டும். அவர்கள் பல நிறத் துணிகளைப் புத்த பெருமான் மீது அணிவித்திருப்பார்கள். அவற்றுள் ஒன்றை எடுத்துச் சிறு துண்டுகளாக்கி நம் கையில் கொடுப்பார்கள். அதுதான் 'மகா பிரசாதம்' என்ற பெயரில் அளிக்கப்படும் துணிப் பிரசாதம்.

அதற்கு அடுத்த இரண்டு நாட்களிலும் தீர்த்தபுரியிலே பெரிய மழை. கற்கண்டுகளைத் தூளினாற் போலப் பனிக்கட்டி மழை. புயலும் மழையுமாகச் சேர்ந்து நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து எங்கள் கூடாரத்தையே பெயர்த்துக் கொண்டுபோய்விட்டன. மழை பெய்த அந்த இரண்டு நாட்களும் இரண்டு யுகங்களாகவே கழிந்தன.

பனிக்கட்டி மழை மிகவும் பயங்கரமாகப் பெய்த இரண்டு நாட்களையும் இரண்டு யுகங்களாகக் கழித்தபின் கதிரவன் விழித்து எங்களைக் கடைக்கண் நோக்கினான். மழைபெய்து ஓய்ந்திருந்த பனிமலையின் வீதிகளில் பொன் வெயிலின் கதிர்கள் புறப்பட்டு ஒளி வீசின. காலை பதினொரு மணியளவில் தீர்த்தபுரியை விட்டுப் புறப்பட்டு இடையிலுள்ள 'கூடா' நதியை மிகவும் துன்பப்பட்டுக் கடந்தோம். இங்கிருந்து இன்னும் இரண்டு நாட்களில் கயிலாயக் காட்சியைக் காணலாம் என்று ஸ்வாமி வித்தியானந்த சரஸ்வதி கூறினார். இந்த நற்செய்தியைக் கேள்விப்பட்டதுமே எங்கள் மூச்சிலே புதிய சக்தி பிறந்தது.

மறு நாள் 'ஷெல்லா செக்' என்னும் இடத்தை அடைந்து அன்றிரவு அங்கேயே தங்கினோம். 'ஷெல்லா செக்'கிலிருந்து அடுத்த நாள் காலையில் புறப்பட்ட போது வழிகளின் துன்பங்கள் மிகுதியாயின. தொடர்ந்து மாலை வரை இதே நிலைமை நீடித்தது. மாலை நான்கு மணி இருக்கும். 'யாக் ஸவாரி' செய்து கொண்டிருந்த எங்களை யெல்லாம் திடீரென்று 'வழிகாட்டி' கீழே இறங்கி நடக்கத்தான் வேண்டுமென்று கண்டிப்பாக உத்தரவிட்டான். இவ்வளவு துன்பங்களும் போதாதென்று அவன் உண்டாக்கிய புதுத் துன்பத்தையும் ஏற்றுக் கொண்டு இறங்கி நடந்தோம். நடந்து போய்க் கொண்டிருக்கும் போதே எங்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தும் அந்தச் செய்தியை வழிகாட்டி எங்களுக்கு மீண்டும் சொன்னான்.

'இன்னும் சிறிது நேரத்தில் நமக்குக் கயிலாய தரிசனம் கிடைக்கப் போகிறது' என்று அவன் கூறியதும் எங்கள் உடம்பில் புல்லரிப்பு உண்டாயிற்று.

எங்களுடைய மனத்தில் 'கயிலை! கயிலை!' என்ற தியானத்தோடு ஒரு மைல் தொலைவு கூட நடந்திருக்க மாட்டோம். அதற்குள், 'அதோ பாருங்கள்' என்று மேலே கையை உயர்த்திச் சுட்டிக் காட்டினான் வழிகாட்டி. நிமிர்ந்து பார்த்தோம்.



மானஸசரோவரக் கரை

கயிலையைக் கண்டோம். பண்டு கண்டறியாதன கண்டோம். கண்கள் பெற்ற பயனைக் கண்டோம். களிகூர்ந்தோம். கீழே இருக்கிற மலைகளுக்கு எல்லாம் மேலே ஒப்பற்று ஓங்கிய வெண்பனிச் சிகரம் ஒன்று வானத்தையே விதானமாகக் கொண்டு ஒளிமயமாய் உயரத்தில் தெரிந்தது. 22,028 அடி உயரத்தில் எதிரே நிற்பவர்களை யெல்லாம் தன்னை வந்து வணங்குமாறு செய்விக்கவல்ல கம்பீரத்தோடு மேகங்களால் சிறிதும் மறைக்கப்படாமல் தெளிவாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது கயிலையங்கிரி.

கயிலை மால்வரையை அடிக்கடி மேகங்கள் மறைத்து விடுமாம். பனிமூட்டம் ஏற்படுமாம். கடுங்காற்று வந்தவண்ணமாகவே இருக்குமாம். இவை போன்ற காரணங்களால் யாத்திரிகர்கள் தரிசனம் செய்ய இயலாமல் போய் விடுவதும் உண்டாம். எங்கள் நல்வினைப் பயனும் எடுத்த எடுப்பிலேயே எங்களுக்குக் கயிலாய தரிசனம் கிடைத்து விட்டது.

கயிலாய சிகரத்தின் மேல் இளஞ்சூரியனின் செந்நிறக் கதிர்கள் படியும்போது வெள்ளி மயமான சிகரத்தின் மேலே பொன் விதானம் ஒன்று படிந்து பூலோகத்தை ஆளுவது போலக் காட்சி தருகிறது. எந்தப் பக்கத்திலிருந்து பார்த்தாலும் வியப்பில் ஆழ்த்தும் வண்ணக் களஞ்சியமென இம்மலை ஒளிர்கிறது. கயிலை மலை மனிதனால் கட்டப்படாமல் தானாகவே நேர்ந்து நேர்ந்தபடியே இருக்கும் சிவசாந்நித்தியத்தின் இயற்கைத் திருக் கோயில். கயிலாயத்தின் சுற்றளவு முப்பத்திரண்டு மைல்கள். பிராகாரம் போன்று மலைகள் சூழ நிற்கின்றன. இடையிலே அகன்ற மேடை போன்று தட்டை மலை ஒன்று தோன்ற அதன் மீது கோபுரங்கள் கட்டினாற்போல் கணக்கற்ற பனிமலைகள் திகழ்கின்றன. கயிலைக்கு மாலைகள் அணிந்தது போல் மேற்கு, கிழக்கு, வடக்கு மூன்று பகுதிகளிலும் நதிகள் சூழ்ந்து ஓடுகின்றன. எல்லா நதிகளும் பின்பு இராக்ஷஸ்தால் தடாகத்தை அடைகின்றன. கயிலை மலையின் மிக அருகே ஓடுகிற நதிக்குக் கயிலை நதி என்று பெயர். கயிலை மலையைச் சுற்றி ஐந்து புத்தர் கோவில்கள் இருக்கின்றன. திபெத்தியர்கள் இம்மலையின் பனி மகுடத்தைக் 'காங்ரின் போஷி' என்று கூறுகிறார்கள். இந்த மலையில் புத்த பகவான் எப்போதும் ஐந்நூறு போதி சத்துவர்களால் சூழப்பட்டு நித்திய வாசம் செய்கிறார் என்பது திபெத்தியர்களின் நம்பிக்கை.

கயிலை மலையின் வெளிச்சுற்றை வெளிப் பரிக்கிரமம் என்றும், உள்சுற்றை உள் பரிக்கிரமம் என்றும் அழைப்பர். பன்னிரண்டு முறை வெளிப் பரிக்கிரமத்தைச் சுற்றியவர்கள்தான் உள் பரிக்கிரமத்தைச் சுற்றுவதற்குத் தகுதியுடையவர்கள். உள் பரிக்கிரமத்தில் பனிச் சரிவும், குளிரும் அதிகமாதலால் சுற்றுவது மிகவும் கடினம். உள் பரிக்கிரமத்தைச் சுற்றுவது சிவலிங்கத்தை மிதிப்பதற்குச் சமமாகுமோ என்று அஞ்சிச் சுற்றாமல் விடுவோரும் உண்டு. தமிழ் நாட்டிலிருந்து சென்ற திரு முக்தானந்த சரஸ்வதி பல வருடங்களாக இமயத்திலேயே தங்கிக் காலை மூன்று மணிக்குத் தொடங்கிப் பகல் மூன்று மணிக்குள் முடிந்து விடுமாறு தினசரி இந்தப் பிரதட்சிணத்தைச் செய்து வருகிறார். கயிலை வட்டாரத்தில் இவரைத் தெய்விக முனிவராகவே மதிக்கிறார்கள்.

தருமை மகா சந்நிதானமவர்கள் கொண்டு வந்திருந்த சிவலிங்கத்தைக் கயிலை மால் வரையின் சரிவில் பிரதிட்டை செய்து கயிலைப் பதிகம் பாடியருளினார்கள். கயிலையின் வட மேற்கு மூலையில் ராவண சிகரம் காட்சியளிக்கிறது. வடக்குப் பிராகாரத்தில் 'திர்புக் கொம்பா' அருகே கயிலை நதியின் கரையில் கூடாரமடித்துத் தங்கிக் கயிலையின் வடக்கு முக தரிசனமும் பெற்றோம். கயிலை மலையின் வடக்கே விபூதி போல் வெண்ணிறமான மண் காணப்படுகிறது. இதையே யாத்திரிகர்கள் கயிலைப் பிரசாதமாக எடுத்துச் செல்கின்றனர். நாங்களும் இந்தப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டோம். கயிலையில் மற்றொரு விந்தை கண்டோம். இந்தப் பகுதிகளில் காணப்படும் 'தாமா' என்ற பச்சைச் செடியைத் தண்ணீரில் நனைத்து மேலும் ஈரமாக்கினாலும் காய்ந்த சவுக்குப்போல நன்றாக அடுப்பெரிக்கப் பயன்படுகிறது.

அடுத்து 6-8-59 அன்று 'கௌரி குண்டம்' என்னும் இடத்துக்குப் புறப்பட்டோம். 'டோல்மா' கணவாய் வழியாகச் சென்றோம். 18,600 அடி உயரத்தில் இருக்கும் அக்கணவாய் வழியாகச் செல்வது கடினமாயினும் துணிந்து சென்றோம். கௌரி குண்டத்தின் சீதோஷ்ண நிலை இருபத்தி நான்கு டிகிரிதான்.

பகல் பன்னிரண்டு மணியளவில் நாங்கள் கௌரிகுண்டத்தை அடைந்தோம். கௌரி குண்டம் கயிலை மலைச் சிகரத்தின் கிழக்கே உள்ள அழகிய சிறு தடாகம். முக்கால் மைல் நீளமும் அரை மைல் அகலமும் கொண்டது. கௌரி இறைவனின் இடப்பாகத்தே விளங்குவது போல் இது கயிலை மலையைத் தழுவியவாறு அதன் இடப்பாகத்தே விளங்குகிறது. குமார சம்பவத்தில் பார்வதி சிவனை அடையத் தவம் செய்த இடம் இது என்றே கூறப்படு

கிறது. கௌரியின் நிறத்தை நினைவுக்குக் கொணரும் அற்புதமான நீல நிறம் இந்தத் தடாகத்தைச் சுற்றிலும் இலங்குகிறது. தடாகத்தின் நடுவிலே பனி உறைந்த வெண்மை இறைவனின் நிறத்தை நினைவுக்குக் கொண்டு வருகிறது. கௌரிகுண்டத்தில் நீராடாவிட்டால் கயிலை யாத்திரை முழுமையடையாது என்கிறார்கள். நாங்களும் கௌரிகுண்டத்திலிருந்து திரும்பிக் கீழே இறங்கும்போது கயிலையின் கிழக்குமுகத் தரிசனம் முன்னிலும் மிக நன்றாக ஆயிற்று. அதன்பின் அன்று 'லோங்' நதிக் கரையில் கூடாரமடித்துத் தங்கினோம். மறு நாள் காலை 'மானஸசரோவரம்' என்னும் புகழ்பெற்ற ஏரிக்குப் புறப்பட்டோம்.

கயிலையின் தென் கிழக்கு மூலையில் 'லாங்-கு' என்னும் நதியைக் கடந்து அப்புறத்தில் மானஸசரோவரம் போக வழி பிரிகிறது.

மானஸசரோவரத்தைக் கண்டுபிடித்த மாந்தாதா சக்கரவர்த்தி இந்த மலைவடிவாரங்களில் தவம் புரிந்ததால்தான் அம்மலைத் தொடர்களுக்கு மாந்தாதா மலைத் தொடர் என்று பெயர் ஏற்பட்டதாகக் கூறுகிறார்கள். தவம் செய்யும்போதும் எப்போதும் கயிலாயம் தம் கண்ணில் தென்பட்டுக் கொண்டே இருக்க வேண்டுமென்பதற்காகத்தான் மாந்தாதா இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தாராம். மாந்தாதா மலையில் எந்தக்காலத்திலும் ஐந்நூறு தேவரிஷிகள் தவம் செய்து கொண்டிருப்பதாக ஐதீகம். இங்கிருந்து பார்த்தால் கயிலாயம் பரிபூரணமாகத் தெரிகிறது.

வெண் பனி போர்த்து வானுற வளர்ந்து நிற்கும் கயிலைமலைத்தொடருக்கும், மாந்தாதா மலைத் தொடருக்கும் இடையே பச்சை மரகதமணி போன்று காணப்படுகிறது மானஸசரோவர ஏரி. ஐம்பத்தி நான்கு மைல் சுற்றளவில் தூய பளிங்கு போன்ற நீர் நிரம்பிக் காட்சியளிக்கிறது. இதன் பரப்பளவு ஏறத்தாழ இருநூறு சதுர மைல்கள். கயிலாயமும், மானஸசரோவரமும் சேர்ந்து கௌரி சங்கரம் என்று அழைக்கப்படுகின்றன. புராணங்களின்படி இந்த ஏரிதான் நான்முகப் பிரம்மனின் எல்லாப் படைப்புக்களுக்கும் முதன்மையானதாகும். உலகிலுள்ள எல்லா ஏரிகளைக் காட்டிலும் அழகிலும், அமைப்பிலும் சிறந்த ஒன்றைப் படைக்க வேண்டுமென மனத்தில் நினைத்து, நினைத்தபடியே, பிரம்மா, படைத்ததனால்தான் இதற்கு மானஸசரோவரம் என்று பெயர் வந்ததென்கிறார்கள். இந்த ஏரியை முதலில் கண்டவர் மாந்தாதா. ஏரியின் நடுவில் நாவல் மரமொன்று இருப்பதாகவும் இந்த ஏரிக்குத் தெற்கேயுள்ள நமது நாட்டுக்கு 'ஜம்பூத்வீபம்' என்றும் நாவலந்தீவு என்றும் பெயர் ஏற்பட்டதற்கும் இதுவே காரணமென்றும் கூறுவர். இந்த ஏரியைச் சுற்றிலும் எல்லாவிதமான மூலிகைகளும் கிடைக்கின்றன. மானஸசரோவரத்தின் நான்கு பக்கங்களிலிருந்தும்தான் பாரத புண்ணிய பூமியை ஊட்டி வளர்க்கும் நான்கு ஜீவநதிகள் உற்பத்தியாகின்றன. தென்புறத்திலிருந்து கங்கையின் உபநதியும், மேற்கிலிருந்து ஸட்லஜும், வடக்கிலிருந்து சிந்துவும், கிழக்கிலிருந்து பிரமபுத்திராவும் தோன்றி இந்த ஏரியை ஏழு முறைகள் வலம் வந்த பின்னர் பல்வேறு திசைகளுக்கும் பிரிந்து செல்கின்றனவாம். இந்நதிகளின் மணல்களில் வெள்ளியும், பொன்னும் வண்ணம் காட்டுகின்றனவாம்.

இங்கே மானஸசரோவரத்தின் கரைகளில் இரத்தினக் குவியல்களோ என நினைக்கும்படியான கூழாங்கற்கள் பல நிறங்களில் குவிந்து கிடக்கின்றன. இவை பூஜைக்குரியவை என்று சொல்கிறார்கள். சுவாமி வித்தியானந்த சரஸ்வதியின் உதவியினால் பூஜைக்குரிய சில கற்களைக் கொண்டு வந்து காஞ்சிகாமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளுக்குச் சமர்ப்பிக்கும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது.

மானஸசரோவரத்திலிருந்து திரும்பியபின் ராக்ஷஸ்தால் ஏரியைக் கண்டோம். இந்த ஏரி சுமார் இருபது மைல் நீளமும், ஆறு முதல் எட்டு மைல்வரை அகலமும் கொண்டு விளங்குகிறது. இதன் நடுவே அங்கங்கே சில பாறைத் தீவுகள் காணப்படுகின்றன. நீர்ப் பரப்பில் பறவைகள் கவலையற்று நீந்திக் கொண்டிருக்கின்றன. இதன் கரையில் இராவணன் சிவபெருமானை நோக்கிக் கடுந் தவம் புரிந்ததாகச் சொல்கிறார்கள். தடாகத்தின் நடுவே இராவணன் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்த திட்டு இன்றும் இருப்பதாகச் சொல்கிறார்கள். சீனக்காரர்கள் அடிக்கடி அந்தப் பகுதிகளில் உலாவுவதாகச் சொன்னார்கள். நாங்கள் விரைவில் திரும்பி விடுவது நல்லது என்பதை அந்தச் செய்தியும் எங்களுக்கு வற்புறுத்தியது. திரும்பும்போது 'கௌரி உட்யார்' என்ற இடத்துக்கு வந்ததும் கயிலாயநாதனை மீண்டும் தரிசித்தோம். திரும்புகாலையில் கயிலாயநாதனைத் தரிசிக்க விரும்பினால் இவ்விடத்திலிருந்துதான் இறுதியாகத் தரிசிக்கலாம் என்று வழிகாட்டிகள் கூறினார்கள்.

திரும்புகாலையில் நாங்கள் 'ஷெல் ஜெம்' என்ற இடத்தில் தங்கிய நாளுக்கு மறு நாள் காலை ஆகஸ்டு 15-ந்தேதி. இந்திய சுதந்திர தினம். சுதந்திர தினத்தன்று பகல் பன்னிரண்டு மணிக்குக் காலாபானி என்ற இடத்தை அடைந்தோம். நேபாளத்தின் எல்லையும் திபெத்தின் எல்லையும் இங்கே கூடுகின்றன. இந்திய சர்க்காரின் எல்லைக் காவல் படையினரும் இங்கே இருக்கிறார்கள். 'செக் போஸ்ட்' அதிகாரிகளிடம்வழக்கமானசடங்குகளை முடித்துக் கொண்டு இந்திய எல்லைக்குள் வர மாலை மூன்று மணியாகி விட்டது.

நாங்கள் கயிலையிலிருந்து திரும்பி 'பித்தாரகோட்' என்ற இடத்தை அடைந்தபோது பத்திரிகைகளில் 'கயிலை யாத்திரையை முன்னிட்டு இந்தியர் இனி திபெத் செல்வதைச் சீன அரசாங்கம் விரும்பாததால் விருப்பமில்லாத அந்தக் காரியத்தை இந்தியர்கள் செய்ய மாட்டார்கள்' என்பதாகப் பாரதப் பிரதமரின் அறிக்கை கூறியது.

இப்படி ஓர் அறிக்கை வெளி வருவதற்கு முன்பே எங்களுடைய வெள்ளிப் பனி மலை யாத்திரை நலமாக முடிந்ததை எண்ணி நாங்கள் பெரிதும் மகிழ்ந்தோம். 29-8-59 அன்று பிற்பகல் சென்னையில் இறங்கியபோது என் வயதுமுதிர்ந்த தாயாரும் உறவினரும், நண்பர்களும் வரவேற்று மகிழ்ந்தனர். எந்தக் கயிலையைக் கண்களால் கண்டு வந்தேனோ, அதை மனக்கண்களால் இன்னும் கண்டுவணங்கிக்கொண்டே இருக்கிறேன். (முற்றும்)



# புது வெள்ளம்

அத்தியாயம் பதினைந்து

## பயந்த மனிதர்கள்

கிராமத்தின் அமைதியைக் குலைத்து விட்ட கூட்டமும் குழப்பமும் கூக்குரலும் நடுநிசிக்குப் பிறகு சிறிது சிறிதாக ஓய்ந்தன. கலவரத்தின் விவரம் யாருக்குமே சரியாகத் தெரியவில்லையென்றாலும் தெருவில் கேட்ட பேச்சுக் குரல்களிலிருந்து சில விஷயங்கள் வெளிப்பட்டன. போலீஸ் அவுட் ஸ்டேஷன் சின்னாபின்னமாக்கப்பட்டதாம். கணக்குப் பிள்ளை, மணியகாரர், பிராஞ்சு போஸ்ட் மாஸ்டர் முதலிய கிராம அதிகாரிகள் எங்கேயோ தலைமறைவாக ஓடி ஒளிந்தார்களாம். பஞ்சாயத்துக் கூடத்தின் காகிதக் கட்டுக்கள் தெருவுக்கு வந்து விட்டனவாம்.—கிராமத்து எல்லைகளில் குவிந்திருந்த வைக்கோல்போர்கள் எரிந்து சாம்பலாயினவாம்.

"அன்னிய ஆட்சியை ஒழித்துக் கட்டு!"

"அதைச் சுட்டுப் பொசுக்கு!"

"அதன் கையாட்களை யெல்லாம் ஊரைவிட்டு விரட்டு!"

வைக்கோல் போர்களைத்தான் அவர்களால் சுட்டுப் பொசுக்க முடிந்ததே தவிர, கிராமத்துக்குள் அச்சத்தைத் தவிர, வேறெந்த உணர்ச்சியையும் எழச் செய்ய முடியவில்லை. சற்று நேரத்தில் அங்கு பயங்கரமான அமைதி நிலவியது. தெருவில் நடமாட்டமே இல்லை.

முருகையனின் வீட்டுக்குள்ளிருந்து சன்னல் வழியாகச் சித்திரா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். முருகையனும் சிவப்பிரகாசமும் யோசனையில் ஆழ்ந்திருந்தார்கள். சித்திராவின் தாயாருக்கும் பட்டணத்துத் தாத்தாவுக்கும் ஒரே குலைநடுக்கம்.

"சினிமாவில் வரும் குழப்பக் காட்சிகளைப் போல் இது வேடிக்கையாக இருக்கிறது, அத்தான்!" என்று சிரித்துக் கொண்டே கூறினாள் சித்திரா. முருகையனுக்குச் சிரிப்பு வரவில்லை. 'ஊரின் ஒரு பகுதி பற்றி எரியும்போது இந்தப் பெண்ணுக்கு எப்படிச் சிரிப்பு வருகிறது?' என்று தனக்குள் நினைத்துக் கொண்டான்.

பட்டணத்துத் தாத்தா சித்திராவின் தாயாரிடம், "நாம் இந்தப் பட்டிக்காட்டுக்கு வந்ததே தப்பு!" என்று ஆரம்பித்தார். "தெரியாமல் வந்து அகப்பட்டுக் கொண்டோம். சீக்கிரம் கிளம்புகிற வழியைப் பார்க்க வேண்டியதுதான்."

"வந்ததும் தப்பு; இவ்வளவு நாட்கள் இங்கே இருந்ததும் தப்பு; நேற்றே புறப்படாமல் இருந்தது அதைவிடத் தப்பு!" என்று ஒத்துப் பாடினாள் பொன்னம்மாள். அவளுடைய தவிப்பும் புலம்பலும் அதிகமாகிக் கொண்டே வந்தன. நடந்த விஷயங்களுக்கும் சிவப்பிரகாசத்துக்கும் என்ன சம்பந்தம் என்று நினைத்துக் கூடப் பார்க்காமல், அவர் ஏதோ குற்றம் செய்து விட்டதைப்போல் சலித்துக் கொள்ளத் தொடங்கினாள்.

தாத்தாவும் பொன்னம்மாளும் சலித்துக் கொண்ட சலிப்பு அந்த வீட்டுப் பாட்டிக்கு எரிச்சலைத் தந்தது. "அழையாத விருந்தாய் வந்து விட்டு, அதிகாரம்பண்ணிச் சாப்பிட்டு விட்டு, அதையும் இதையும் கேட்டு வாங்கிக் கொண்டு இப்

அகிலன்



போது ஏன் இப்படிக் கிடந்து தவிக்கிறார்கள்? எங்களுக்கு வராத ஆபத்து இவர்களுக்கு மட்டும் எங்கேயிருந்து தனியாக வரப் போகிறதாம்? நல்ல ஜனங்கள் இந்தப் பட்டணத்து ஜனங்கள்! கொஞ்சங்கூட நன்றியில்லாத ஜென்மங்கள்!'' என்று தனக்குள் முணு முணுத்துக் கொண்டாள். ''நல்லது வந்தால் வாரிக் கட்டிக் கொள்ளுவார்கள்; கெட்டது வந்தால் பட்டுக் கொள்ளாமல் ஓடுவார்கள்!''

''அண்ணா! நாங்க பத்திரமாய் ஊர் போய்ச் சேர முடியுமா, அண்ணா?'' என்று சிவப்பிரகாசத்திடம் கேட்டாள் பொன்னம்மாள்.

அதற்கு முருகையன் பதிலளித்தான்: ''அத்தை! உங்களைப் பத்திரமாய்ப் பாது காத்து ஊருக்கு அனுப்ப வேண்டியது எங்கள் பொறுப்பு. அதற்காகத்தான் நான்கூட வெளியில் போகாமல் உங்களோடு தங்கியிருக்கிறேன். வீணாக ஏன் பயப்பட வேண்டும்? இது எங்கள் ஊர் அத்தை!''

''அப்படியானால் எங்களுக்குத் துணையாகப் பட்டணத்துக்கு வருவீர்களா?'' என்று ஆவலுடன் கேட்டாள் சித்திரா. இந்தச் சாக்கில் அவனையும் அழைத்துக் கொண்டு போக வேண்டுமென்பது அவளுடைய ஆசை.

''தேவையானால் வருகிறேன்.''

''திருச்சி வரைக்கும் நீ துணை வந்தால் போதும்!'' என்று குறுக்கிட்டார் தாத்தா. ''பிறகு நான் காரை விரட்டிக் கொண்டு போய் இவர்களைப் பட்டணத்தில் சேர்த்து விடுகிறேன்.''

இந்தச் சமயத்தில் கதவை யாரோ படபடவென்று தட்டவே, வீட்டுக்குள் பேச்சு பாதியில் நின்றது. ''யாரது?'' என்று அதட்டும் குரலில் கேட்டார் சிவப்பிரகாசம். முருகையன் எழுந்து கதவருகில் சென்றான். தாத்தாவுக்கும் பொன்னம்மாளுக்கும் மூச்சே நின்று போய் விட்டது.

''நான்தான் குமரவேல்! கதவைத் திற, தம்பி!''

முருகையன் திறந்துவிட்டான். முதலில் குமரவேலும் அவரைத் தொடர்ந்து தலையில் முண்டாசு கட்டிய மற்றொரு மனிதரும் நுழைந்தார்கள். அந்த மனிதரின் கையில் ஏதோ ஒன்று மூங்கில் தடிபோல் தெரிந்தது. உற்றுப் பார்த்தான் முருகையன். நீண்ட துப்பாக்கி!

''யாரது ஏட்டையாவா?'' என்று அந்தப் புது மனிதரை வரவேற்றார் சிவப்பிரகாசம். வந்தவர் அந்த ஊர்ப் போலீஸ் ஏட்டையா. சாதாரண உடையில் உருமாறி வந்திருந்தார். வந்தவர்கள் இருவரிடமுமே பரபரப்புத் தென்பட்டது.

''ஊர் இப்போது இருக்கும் நிலையில் எது எப்போது நடக்குமென்று சொல்ல முடியாது. இதற்கு ஒரு வழி செய்யாவிட்டால் நம் நிலைமை ஆபத்தாகி விடும். இது சம்பந்தமாகப் பட்டணத்துத் தங்கச்சியிடம் ஒரு உதவி கேட்க வந்திருக்கிறேன்'' என்றார் குமரவேல்.

அவர்கள் அவசரமாக ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்த் திருச்சிக்கும் குளித்தலைக்கும் பெரிய போலீஸ் அதிகாரிகளுக்கு 'போன்' செய்தி அனுப்பத்துடித்தார்கள். அதற்காகப் பொன்னம்மாளின் காரையும் தாத்தாவின் உதவியையும் கேட்டார்கள். ஒரு மணி நேரத்தில் திரும்பி வந்து காரையும் தாத்தாவையும் பத்திரமாக ஒப்படைத்து விடுவதாக வாக்களித்தார்கள்.

நடுங்கினார் பட்டணத்துத் தாத்தா. தயங்கினாள் பொன்னம்மாள். தாத்தாவுக்குத் தம் உயிர் பத்திரமாகத் திரும்பி விடுமா என்ற சந்தேகம். தங்கச்சிக்குக் கார் திரும்பி விடுமா என்ற சந்தேகம்.

''காலையில் புறப்பட வேண்டுமே, அண்ணா! சாமான்களோடு கார் ஊருக்குப் போகத் தயாராக நிற்கிறதே?'' என்றாள் பொன்னம்மாள்.

குமரவேலுக்கு அவளிடம் நயமாகக் கேட்டு உதவி பெற முடியாதென்று தோன்றவே, அவளிடம் பயத்தை ஊட்டி நடுங்கச் செய்தார்.

''இப்போது அந்தக் கொள்ளைக் கூட்டம் இங்கே வந்து உன் காரை உடைத்தால் நீ என்ன செய்வாய்? நம்மையெல்லாம் கொல்ல வந்தால் என்ன செய்வாய்? - பேசாமல் காரைக் கொடு, தங்கச்சி! ஏட்டையா குண்டு நிரப்பிய துப்பாக்கியோடு காருக்குக் காவல் வரும் போது எதற்குப் பயப்பட வேண்டும்?''

''பெரியப்பா! வீணாகக் கொள்ளை கொலையென்று சொல்லி எதற்காகப் பயமுறுத்துகிறீர்கள்? ஏதோ உணர்ச்சி வசப்பட்ட மனிதர்கள் அன்னிய ஆட்சியை அழிக்க முடியுமென்று நம்பிக் கலவரம் செய்கிறார்கள். அவர்களால் நமக்கெல்லாம் ஒரு தீமையும் ஏற்படாது'' என்றான் முருகையன்.

''நீ சிறுபிள்ளை! உனக்கு ஒன்றும் தெரியாது'' என்று குமரவேல் அவனை அடக்கி விட்டு, ''நீயும் எங்களுடன் காரில் கிளம்பி வா! இங்கிலீஷில் போன் பேசினால் காரியம் சீக்கிரம் நடக்கும்'' என்று கூறினார்.

வரமுடியாதென்று மறுத்து விட்டான் முருகையன். ஏட்டையா முருகையனைச் சந்தேகத்துடன் பார்த்து விட்டு, குமரவேலுடனும் தாத்தாவுடனும் அவசரமாகக் காரில் கிளம்பினார். ''பையன் பேசுவதைப் பார்த்தால் இவ

கொடுக்கும் கருவியாகவும் அவன் இருக்க விரும்பவில்லை.

விரைவிலேயே கார் திரும்பி வந்தது. போன காரியம் வெற்றி என்பதைச் சொல்லி விட்டு உடனடியாக இருவரும் திரும்பினார்கள். ''ஏன், பொழுது விடியு மட்டும் இங்கு தங்கி விட்டுப் போகலாமே!'' என்று அவர்களை உபசரித்தார் தாத்தா. அவர்கள் கேட்கவில்லை. அவர்களுடைய தலைகள் மறைந்தவுடன், ''ஏட்டையாவும் துப்பாக்கியுமிருந்தால் கொஞ்சம் தெம்பாக இருக்குமென்று தான் சொல்லி வைத்தேன்!'' என்று உபசாரத்தின் காரணத்தை அவர் விளக்கினார்.

அதற்குள் மூன்றும் சாமம் ஆகி விட்டதால், வெந்நீர் போட்டுக் குளித்து முழுகிவிட்டுப் பலகாரம் செய்ய முனைந்தனர் பொன்னம்மாளும் பாட்டியும். பொழுது நன்றாக விடிந்தவுடன் நல்ல வேளையில் மனையை விட்டுக் கிளம்பிவிட வேண்டுமென்பது அவர்கள் திட்டம். சித்திரா மட்டிலும் புறப்படுவதில் அவ்வளவு சுறுசுறுப்புக் காட்டவில்லை.

தயக்கத்துடன் முருகையனிடம் வந்து, ''எங்களோடு திருச்சி வரை வாருங்கள்; துணைக்குத் துணையாகவும் இருக்கும்; நீங்களும் உங்கள் கல்லூரியில் இறங்கிக் கொள்ளலாம்'' என்றாள் சித்திரா.

அருகிலிருந்த சிவப்பிரகாசமும், ''அதுதான் சரி, முருகையா! சித்திரா சொல்கிறபடியே நீயும் புறப்பட்டுப் போய்ப்

னுக்கும் இதில் ஒரு கை இருக்கும் போல் தெரிகிறது!'' என்று அவர் கூறியபோது காருக்குள் தாத்தாவின் கரங்கள் நடுநடுங்கின.

முருகையன் பெருமாள்சாமியின் செயல்களைப் பற்றியும் அதன் விளைவுகளைப் பற்றியும் நினைத்து வருத்தப்பட்டான். முருகையனின் நிலை இரண்டுங்கெட்டான் நிலை. செயல்களின் வழிமுறைகளை அவன் ஆதரிக்கவுமில்லை; அதே சமயம் செய்தவனைக் காட்டிக்





படிப்பைக் கவனித்துக் கொள். படித்து முன்னுக்கு வந்தால்தான் நாலுபேருக்கு மத்தியில் மதிப்பாயிருக்கலாம்'' என்றார்.

முருகையன் வேதனை அடைந்தான். இனிமேல் படித்து முன்னுக்கு வருவது எப்படி? எந்தக் கல்லூரியிலும் இடம் கொடுக்க மாட்டார்களே!

இந்தச் சமயத்தில் பெரியதொரு போலீஸ் கார் முருகையனின் வீட்டு வாசலில் வந்து நின்றது. பத்துப் பதினைந்து போலீஸ்காரர்கள் மளமளவென்று கீழே குதித்து இறங்கினார்கள். தெருவில் சிறிய கூட்டம் கூடிவிட்டது.

அந்த வட்டத்தின் போலீஸ் இன்ஸ்பெக்டரும், இரவு வந்திருந்த ஏட்டையாவும் நேரே முருகையனின் வீட்டுக்குள் வந்தார்கள். ஏட்டையா தமது முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு முருகையனைப் பார்த்தார்.

''முருகையனைக்கைதுசெய்ய 'வாரண்டு' இருக்கிறது. யார் அந்த முருகையன்?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''நான்தான்'' என்று அமைதியோடு பதிலளித்தான் முருகையன். திருச்சியில் நடந்த நிகழ்ச்சிகளுக்காக அவர்கள் தன்னைத் தேடி இங்கு வந்திருக்கிறார்களா. அல்லது இரவில் நடந்த கலவரத்தின் எதிரொலியா இது என்பது அவனுக்கு விளங்கவில்லை. சுற்றியிருந்தவர்கள் திகைத்துப் போய் நின்றார்கள்.

## அத்தியாயம் பதினாறு

# கண்ணீரில் கரைந்த மண்

முருகையனின் தகப்பனார் சிவப்பிரகாசத்துக்கு வழக்கமாகக் கோபம் வருவதில்லை. அப்படி எப்போதாவது வந்து விட்டால் அது கட்டுக்கடங்காத கோபமாகி விடும். பின் விளைவுகளைப் பற்றியே சிந்தித்துப் பார்க்க மாட்டார்.

இப்போது அவருடைய கோபம் ஏட்டையாவின் மீது திரும்பியது.

''ஏட்டையா! இதென்ன அக்கிரமம்? இதென்ன அநியாயம்? என் பிள்ளை ஊருக்கு வந்து இரண்டு நாட்கள் கூட ஆகவில்லை. வந்ததிலிருந்து என்னை விட்டுப் பிரியாமல் இருக்கிறான். நேற்றுக் கலவரம் நடந்த போது கூட அவன் வீட்டுக்குள்ளிருந்ததை நீங்கள் கண்ணால் கண்டு விட்டு, இப்போது அவனையே பிடித்துக் கொண்டு போக வந்திருக்கிறீர்களே! இங்கு வந்து காரை இரவல் வாங்கிக் கொண்டு போனது இதற்குத்தானா?''

''ஐயா! உங்கள் பிள்ளை கல்லூரியிலிருந்து நீக்கப்பட்டு, போலீசுக்குத் தப்பித் தலை மறைவாக இங்கே ஓடி வந்திருக்கிறானென்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர். ''திருச்சியில் மாணவர்களைத் தூண்டிவிடப் பார்த்தான். முடியவில்லை. இங்கே சொந்த ஊருக்கு வந்து தன் கைத்திறமையைக் காட்டிவிட்டான். அவன் கையாட்கள் ஊருக்குள் இருக்கும்போது அவன் எங்கே இருந்தால் என்ன?''

'' வீண் பழி ஐயா, வீண் பழி!'' என்று கதறினார் சிவப்பிரகாசம்.

''இதில் ஒரு பாதி உண்மை அப்பா! கல்லூரியிலிருந்து என்னை விலக்கி விட்டார்கள் என்பது உண்மைதான். ஆனால் இந்தக் கலவரத்துக்கும் எனக்கும் சம்பந்தமே யில்லை'' என்றான் முருகையன்.

''என்ன விலக்கி விட்டார்களா?'' சிவப்பிரகாசத்தின் அடித் தொண்டையிலிருந்து கூக்குரல் எழுந்தது.

இன்ஸ்பெக்டர் கேலியாகச் சிரித்து விட்டு, ''உங்கள் மகன் எப்படிப்பட்டவனென்று உங்களுக்குத் தெரியாது; எங்களுக்குத் தெரியும்'' என்றார். உடனே பின்புறம் திரும்பிச் சைகை காட்டவே, ஒரு போலீஸ்காரர் வந்து முருகையனின் கைகளில் விலங்கை மாட்டினார். அபாயகரமான குற்றவாளி அவன் என்பது இன்ஸ்பெக்டருடைய முடிவு.

அதற்கு ஏற்றாற் போல்தான் வெளியிலும் காரியங்கள் நடந்துவிட்டன. மளமளவென்று தடிக் குச்சிகளையும் கம்புகளையும் எடுத்துக் கொண்டு நாற்பது ஐம்பது பேர்கள் பெருமாள்சாமியின் தலைமையில் அங்கே ஓடி வந்தார்கள். அவர்களுக்கும் போலீஸ்காரர்களுக்கும் கை கலப்பு ஏற்பட்டு விடும் போலிருந்தது. முருகையனை விட்டு விட்டுப் போகும்படி அவர்கள் கத்தினார்கள். கற்களும் கம்புகளும் போலீஸ் மோட்டாரின் மேல் பறந்து வந்து விழுந்தன.

விலங்கு மாட்டப்பட்ட கைகளோடு வெளியில் வந்த முருகையன், ''பெருமாள்சாமி! நீ அவர்களை அழைத்துக் கொண்டு போய் விடு! போ, பெருமாள் சாமி!'' என்று கத்தினான். அவர்கள் போவதாக இல்லை.

''ஐயா! பார்த்தீர்களா உங்கள் மகனை! இப்போதாவது இவன் யார் என்று தெரிகிறதா?'' என்று பரிகாசமாகச் சிவப்பிரகாசத்திடம் கேட்டார் இன்ஸ்பெக்டர். தடுக்கும் கூட்டத்தை அடித்துக் கலைத்து விட்டு, அகப்பட்டவர்களைப் பிடித்துக் காருக்குள் தள்ளச் சொல்லி உத்தரவிட்டார்.

கூட்டத்தின் மீது பாய்ந்தார்கள் போலீஸ்காரர்கள். சரமாரியாகத் தடியடிப் பிரயோகம் நடந்தது. சிலர் கீழே விழுந்தார்கள். சிலர் விழுந்தடித்துக் கொண்டு ஓடினார்கள். பெருமாள்சாமியும் நாலைந்து பேர்களும் அடிபட்ட காயங்களுடன் அவர்களிடம் அகப்பட்டார்கள். முருகையனும் காருக்குள் ஏறிக் கொண்டு தன் தகப்பனாரையும் சித்திராவையும் திரும்பிப் பார்த்தான். சித்திரா சிலை போல் நின்று கொண்டிருந்தாள். சிவப்பிரகாசம் கன்றைப் பறி கொடுத்த தாய்ப் பசுபோல் காருக்குப் பின்னால் ஓடி வர முயன்று கீழே விழுந்தார்.—கார் நகர்ந்தது.

முருகையனால் தன் தந்தையின் தவிப்பைக் கண்ணால் காண முடியவில்லை. இரண்டு கைகளையும் உயர்த்தித் தன் விழிகளில் கசிந்த நீரைத் துடைத்துக் கொண்டான். அந்தக் கணத்தில் அவனிடம் 'தேசமா? பாசமா?' என்ற கேள்வி எழத்தான் செய்தது. 'இரண்டும் தான்' என்று தன்னைத்தானே தேற்றிக் கொள்ள முயன்றான்.

அடிபட்ட காயங்களுடன் அருகில் சாய்ந்து கொண்டு வந்தான் பெருமாள் சாமி. அவனுடைய துன்பமும் அவன் அகப்பட்டுக்கொண்ட விதமும் முருகையனின் ஆத்திரத்தைக் கிளறி விட்டன. ''நீ ஒரு முட்டாள்! எதற்காக நீ என்னைக் காப்பாற்ற ஓடிவந்தாய்? இப்போது என்ன நடந்தது பார்த்தாயா?''

ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி . . .






உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர்மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப் பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பசியும் ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் திடவளர்ச்சிபெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச்சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.

...தாய்ப் பாலுக்கு நிகரானது.

இலவசம்: 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலப் பிரதி)... ...விரிவுமிக்க, குழந்தை பராமரிப்பு நூல் ...தபால் செலவுக்காக 50 ந. பைசாத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: 'ஆஸ்டர்மில்க்', தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS. 8-X51-M. TM

''அடுத்தவன் காலை விட்டு ஆழம் பார்க்கும் அறிவாளியாக இருப்பதை விட, தீமையைப் பொறுக்காத முட்டாளாகவே நான் இருந்து விட்டுப் போகிறேன்!'' என்று கோபமாய்க் கூறினன் பெருமாள்சாமி. ''ரகளை செய்தவர்கள் நாங்கள் இருக்க இவர்கள் ஏன் உன்னைப் பிடிக்கிறார்கள்....?''

பெருமாள்சாமியின் உள்ளப்பண்பைக் கண்டு ஒரு கணம் தனக்குள் பெருமையோடு சிரித்துக் கொண்டான் முருகையன். ஆபத்து என்று தெரிந்தவுடன் தப்பி ஓட நினைத்த பட்டணத்து விருந்தாளிகளையும், தாமாக வந்து அகப்பட்டுக் கொண்ட கிராமத்து ஏழைகளையும் அவனால் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. பணம் இருந்தால் என்ன? படிப்பு இருந்தால் என்ன! குணம் வேண்டாமா?

நினைவிழந்து தெருவில் விழுந்த சிவப்பிரகாசத்தைத் தூக்கி வந்து சிலர் வீட்டுக்குள் போட்டார்கள். சித்திராவுக்கு அவரைத் தேற்றுவதற்குக் கூடத் தெம்பில்லை. பரிதாபமாக அவரைப் பார்த்துக் கொண்டு அருகில் உட்கார்ந்தாள். சிவப்பிரகாசம் கண்களைத் திறந்ததும் சிறு குழந்தைபோல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினர். ''முருகையா! நீ படித்து முன்னுக்கு வருவாய்' என்று நினைத்தேன்! நாலு பேரைப் போல் பெருமையோடு வாழவேண்டு மென்று ஆசைப்பட்டேனே! என் ஆசையில் மண்ணைப் போட்டு விட்டாயே!'' சிவப்பிரகாசம் என்னவெல்லாமோ சொல்லிச் சொல்லிப் புலம்பினர்.

குமரவேலுக்குச் சிவப்பிரகாசத்தின் வீட்டில் நடந்த நிகழ்ச்சி உடனே எட்டி விட்டது. ஆனால் அவர் எட்டிப் பார்க்கவில்லை. ''சாட்சி சம்பந்தம் என்று நம்மையும் போலீஸ்காரர்கள் மாட்டி வைத்து விடுவார்கள்; அவர்கள் நுழைந்து விட்டுப்போன இடத்தில் நாமும் உடனே நுழையக் கூடாது'' என்று தமக்குள் முணு முணுத்துக் கொண்டார்.

பட்டணத்துத் தங்கச்சியும் தாத்தாவும் சிவப்பிரகாசம் நினைவு தடுமாறிக் கிடக்கும் போது அவரிடம் விடை பெற்றுக் கொள்ள வந்தார்கள்.

''நாங்கள் போய் விட்டு வருகிறோம், அண்ணா! நடந்தது நடந்து விட்டது; கவலைப்படாதீர்கள்'' என்று சொல்லி விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் நழுவினாள் பொன்னம்மாள். சித்திராவையும் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தாள்.

''இது உனக்கே நன்றாயிருக்கிறதா அம்மா! மாமாவை நாம் இந்த நிலையில் விட்டு விட்டுப் போகலாமா?'' என்று கேட்டாள் சித்திரா.

''இப்போது போகாவிட்டால் நாமும் ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான்!''என்று குறுக்கிட்டார் தாத்தா. ''எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கும் என்று பார்க்காமல், நாம் பாம்புப் புற்றுக்குள்ளேயே வந்து தங்கி விட்டோம். முருகையன் இவ்வளவு பயங்கரமான பேர்வழி என்று தெரிந்தபிறகும் நாம் இங்கே தங்கலாமா? இனிமேல் இந்த ஊருக்கே ஒரு முழுக்குப் போட வேண்டியதுதான்.''

''அத்தான் ஒரு வீரர்!'' என்று சிறு பிள்ளைத்தனத்தின் கர்வத்தோடு கூறினள் சித்திரா. ''அவர் கண்டு விரலை அசைத்தால் இந்தக் கிராமமே ஆடுகிறது, பார்த்தீர்களா? அவர் எதையும் துணிச்சலோடு செய்யக் கூடியவர். அவர் ஒருவருக்காகச் சற்று முன் தெருவில் எவ்வளவு பெரிய போராட்டம் நடந்து விட்டது!''

பொன்னம்மாள் சித்திராவின் மீது சீறி விழுந்தாள். தாத்தா அவளிடம் தயவாகப் பேசிக் காருக்கு அழைத்துக் கொண்டு சென்றார். கார் கிளம்பிய போது சித்திராவைத் தவிர மற்ற இருவரும் அந்த வீட்டைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. இனித் திரும்பிப் பார்க்கவும் நினைக்கவில்லை.

இவையெல்லாம் நடந்து மூன்று ஆண்டுகளுக்கு மேலாகின்றன. முருகையனைத் தண்டனையில்லாமல் விடுவிப்பதற்குத் தம்மால் முடிந்ததைச் செய்து பார்த்து விட்டார் சிவப்பிரகாசம். முருகையன், தான் நாட்டுப் பற்றுக் கொண்டது தவறென்றும் அதற்காக மன்னிக்க வேண்டுமென்றும் நீதிமன்றத்தில் கேட்டிருந்தால், அப்போதே அவனுக்கு விடுதலை கிடைத்திருக்கும். அவன் அப்படிக் கேட்கவில்லை. ''நாட்டு விடுதலை பெரிதே தவிர, என் விடுதலை பெரிதல்ல'' என்று அவன் பிடிவாதமாக மறுத்து விட்டான்.

அந்தப் பிடிவாதத்தின் பலனைச் சிறைக்குள் அநுபவித்து விட்டு அவன் இப்போது பெரியபாளையத்துக்கு வருகிறன். தன் அன்புத் தந்தையைக் கண்டு களிக்கவும், தன் தோட்டத்துக் கிணற்றில் நீந்தித் திளைக்கவும், தன் மாடி வீட்டில் பாட்டியின் கையால் சோறு வாங்கிச் சாப்பிடவும் அவன் வந்து கொண்டிருந்தான். ரயிலை விட்டு இறங்கிக் கிராமத்துச் சாலையில் அவன் நடக்கத் தொடங்கியபோது, அவன் மனத்தில் புதிய உற்சாகம் குடி கொண்டிருந்தது. ஊக்கமும் துணிவும் தன்னம்பிக்

கையும் நிறைந்தவனாக அவன் தலை நிமிர்ந்து நடந்தான்.

கிராமத்தின் சீதளக் காற்றிலே அந்த மண்ணின் மணம் கலந்திருந்தது. பறவைகள் கூட்டங் கூட்டமாக விண்ணில் பறந்தன. நாலா பக்கங்களிலும் கண்கொள்ளாப் பசுமை அவனுக்கு நல்வரவு கூறியது. அவன் உடல் பெரிய பாளையத்துக்குள் நுழைவதற்கு முன்பே உள்ளம் சிறகடித்துக் கொண்டு அவனை முந்திக் கொண்டது.

சாலையிலிருந்து குறுக்கு வழிப் பாதையொன்று அவனுடைய தோட்டத்துக்குப் பிரிந்தது. வீட்டுக்குப் போவதற்கு முன்னால் தோட்டத்தைப் பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று அவனுக்கோர் ஆசை. அதனால் ஒற்றையடிப் பாதையில் திரும்பினான். பெரியபாளையம் கிராமத்தில் அவனுடைய தகப்பனுக்கு அடுத்தபடியாக அவன் பற்றுதல் வைத்திருந்தது அந்தத் தோட்டத்திடம்தான். உயிரும் உணர்ச்சியும் அன்பும் பரிவும் நிறைந்த ஒரு தோழமையை அவன் அந்தத் தோட்டத்திடம் கண்டவன். அவனைப் பொறுத்தமட்டில் அது வெறும் மண்ணல்ல; பொன்னுக்கு மேலானது; பெண் போன்றது; பெற்று வளர்த்த தாய்க்குச் சமமானது.

தோட்டத்தில் பல புதுமைகள் தென்பட்டன. சுற்றிலும் முட்செடிகள் வைத்து வேலி யடைத்திருந்தார்கள். உள்ளேயும் வியக்கத் தக்க முறையில் மாறுதல்கள் தெரிந்தன. முன்பு புஞ்சைப் பூமியாக இருந்தது இப்போது வாழையும் கரும்பும் விளையும் நஞ்சையாகச் செழித்திருந்தது. — தோட்டக் கிணற்றருகே தெரிந்தது என்ன? என்ஜினை 'மோட்டாரி'னால் தண்ணீர் இறைக்கும் பம்புக் குழாய் செட்!

'அப்பா மிகவும் முன்னேறிவிட்டார்! தீவிரமாக உழைத்து நான் இல்லாத சமயத்தில் இந்தத் தோட்டக் காட்டையே பொன் விளையும் பூமியாகச் செய்து விட்டார். இனிமேல் எனக்கு ஒரு கவலையும் இல்லை. நானும் அப்பாவும் சேர்ந்து இந்தக் கிராமத்தையே புதுமை குலுங்கும் பூஞ்சோலையாகச் செய்யப் போகிறோம்!' என்று பெருமையோடு நினைத்துக்கொண்டான்.

கிணற்றுக்குள்ளே குதிப்பதற்குஅவன் உடலில் வலிவில்லை யென்றாலும் உள்ளத்தில் உற்சாகமிருந்தது. ரயில் பிரயாணத்தின் களைப்பைப் போக்கவும்,உறக்க

மற்ற இரவின் அசதியை விரட்டவும் அவன் கிணற்று நீரே ஏற்ற மருந்தென்று நினைத்தான். ஆனால் உள்ளே எட்டிப் பார்த்தபோது தண்ணீர்ப் பரப்பில் எங்கும் பாசி படிந்து கிடந்தது. திட்டுத் திட்டாய் எண்ணெய் மிதந்தது. ஏற்றத்தால் உள்ள கிணற்றுச் சுத்தம் குமாய் வைத்து இறைப்பதில் கிடையாது போலும். மறு நாள் வந்து தானே கிணற்றைத் துப்புரவு செய்ய வேண்டுமென்று முடிவு செய்தான்.

ஏனோ அந்த இடத்துக்கு வந்தவுடன் அவனுக்குச் சித்திராவின் நினைவு வந்தது. விழுப்புரம் சந்திப்பில் கண்ட அவளை அந்தத் தோட்டத்தில் அந்த வேளையில் காண முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? மருக்கொழுந்துப் பாத்தியின் பக்கம் சென்றான். அங்கே பச்சை மிளகாய்ச் செடிகள் வளர்ந்திருந்தன. 'அப்பாவுக்கிருந்த அழகுணர்ச்சியே மறைந்து விட்டது!' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டான். வாசனைக் கொழுந்துக்குப் பதில் ஊசி மிளகாயை ஏன் இவர் பயிரிடுகிறார்?

கூரைத் தாழ்வாரமாக இருந்த பகுதி சுற்றுச் சுவர்களுள்ள அறையாக மாறி வெளியில் பூட்டப் பட்டிருந்தது. சன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். அருகில் ஓர் அரிவாள் தென்பட்டது. கையை விட்டு அதை எடுத்துக் கொண்டு செவ்விளநீர்த் தென்னையிடம் சென்றான்.

பறித்து வீட்டுக்குக் கொண்டு போனால், மெதுவாக அப்பாவுக்குச் சீவிக் கொடுக்கலாம். தானும் சாப்பிடலாம். சிறைச்சாலையில் தேங்காய் ஏது? இளநீர் ஏது? கல்லும் மண்ணும் நிறைந்த கீரைத் தண்டுக் குழம்பைத் தான் அடிக்கடி அரை வேக்காட்டில் கொதிக்க வைத்து ஊற்றினார்கள்.

சரசரவென்று மரத்தில் ஏறி அரிவாளால் ஓங்கி வெட்டினான் முருகையன். இளநீர்களைக் குலையோடு மெல்லக் கீழே நழுவ விட்டான். சத்தத்துடன் காய்கள் கீழே விழுந்து சிதறின. மரத்தின் மீதிருந்தவாறே தொலைவில் தெரிந்த தன்மாடி வீட்டைப் பார்த்து ரசித்தான்.

''யாரடா அவன் மரத்து மேலே?''

முருகையன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். முண்டாகத் தலையும் அரிவாளுமாக நின்றுகொண்டிருந்தான் ஒரு பண்ணையாள். அவனை முருகையன் அதற்கு முன்னால் பார்த்ததில்லை.

''நீ யாரப்பா?'' என்று கேட்டான் முருகையன்.

''என்னையா கேக்கிறே? முதலில் நீ கீழே இறங்கு! இளநீரைச் சீவுறப்பிலே உன் தலையைச் சீவி விட்டுப் பிறகு பதில் சொல்றேன்!''

முருகையனின் சிரிப்பு பண்ணையாளை மேலும் மரியாதைக் குறைவாகப் பேச வைத்தது. மரியாதை கெட்டவனை வேலைக்கு வைத்துக் கொண்ட தன் தந்தையை நொந்து கொண்டே முருகையன் கீழே இறங்கி வந்தான்.

''திருட்டுப் பயலே! இப்ப உன்னை மரத்தோட கட்டிவைச்சுத் தோலை உரிக்கிறேன், பார்!''

பாய்ந்து வந்த பண்ணையாளைத் தடுத்து நிறுத்தினான் முருகையன். அப்போது பரபரப்போடு அங்கு மற்றொரு கிழவன் ஓடி வந்தான். பழைய ஆள் அவன்.

''ஐயா நீங்களா! எப்ப வந்தீங்க?''

''இப்போதுதான் வருகிறேன், கண்ணுச்சாமி. இன்னும் வீட்டுக்குக் கூடப் போகவில்லை.''

''பாவம்!'' என்று வருத்தத்துடன் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு, ''அப்பமன்று உங்களுக்கு ஒண்ணுமே தெரியாது போலிருக்கு'' என்று மென்று விழுங்கினான் கண்ணுச்சாமி. பிறகு மற்றவனிடம் திரும்பி, ''ஏண்டா நீ பொறுமையில்லாமல் இப்படியா நடந்துக்கிறது?'' என்றான். ''இவர்தாண்டா நம்ப பழைய பண்ணைக்காரர் பிள்ளை; தோட்டந் துரவெல்லாம் கைமாறிப் போன சங்கதி இவருக்குத் தெரியாது.''

''கண்ணுச்சாமி! என்ன சொல்கிறாய் நீ?''

''சொல்றதுக்கு இனிமேல் ஒண்ணுமில்லிங்க. நீங்க ஜெயிலுக்குப் போனதுக்கப்புறம் எத்தனையோ காரியம் இந்த ஊரிலே நடந்திருக்கு. நம்பளோட வீடு வாசல், தோட்டம், காணியெல்லாம் ஒண்ணு விடாமல் குமரவேல் ஐயா கடனுக்கு எழுதிவாங்கிக்கிட்டாருங்க. இப்ப நானும் அவர்கிட்டதானுங்க வேலைசெய்கிறேன். இந்த ஆள் ஊருக்குப் புதுசு; தெரியாமல் செஞ்சிட்டான்; மன்னிச்சுக்குங்க'' என்றான் கண்ணுச்சாமி.

கண்ணுக்கு முன் விரிந்து கிடந்த பசுமையை வெறித்துப் பார்த்தான் முருகையன். தரையில் சிதறிக் கிடந்த இளநீர்களைப் போலவே அவனுடைய இருதயமும் வெடித்துச் சிதறியது. மரத்தில் சாய்ந்தபடியே தரையில் சரிந்து உட்கார்ந்தான். அவன் சாய்ந்து கொண்டிருந்த மரமும் அவனைத் தாங்கிக்கொண்டிருந்த மண்ணும் இனி அவனுக்குச் சொந்தமானவையல்ல. தரையில் ஊன்றிய கையை உதறிக் கண்ணீரைத் துடைத்தான். கையிலிருந்த மண் கண்ணீருடன் கலந்ததே தவிர, அதன் ஓட்டத்தை நிறுத்தவில்லை. (தொடரும்)

## பாரதநாட்டுப் பருத்திக்கே, ஏலேலோ...பேரமாம் கத்திமுனையில், ஐலஸா...

18—ம் நூற்றுண்டின் பாலகாண்டம்...சத்தடிமயமான கல்கத்தாவின் வண்ணத்துறைமுகம்... பொங்கு கடலோடப் புறப்பட்டுவிட்டது கிழக்கிந்தியக் 'கும்பினிக்' கப்பலொன்று...ஏற்றியிருந்த சுமையோ விலைமதிப்பற்ற சாக்குக்கள்; மகத்தான வேலைப்பாடிழைந்த துகில்கள், ஏலம், மிளகு வகை வரு, நுண்ணிய நெசவும், கோல வனப்பும் அமைந்த பருத்தித் துணிகள்.

பாரதநாட்டு வாணிப வரலாற்றிலேயே பரபரப்பு மிகுந்த பருவம்...பேர வணிகப் பேரேடும், போர் வாளும் நாட்டாண்மை செலுத்திய காலம், கடல்நெடுக, 'கும்பினிக்' கப்பல்களின் ஆனந்த நடனம்; புயல், கண்ணற்ற கடற்பாதை, வழிப்பறி, கொள்ளை, போட்டி வாணிபப் போர்ப் படையின் இடையீடு... எல்லாவற்றையும் ஏற்றவண்ணம் தீரமுடன் அக்கப்பல்கள் இந்தியப் பருத்தித் துணிகளைச் சுமந்து சென்றன, அத்துணிகளை மெச்சிப் போற்றிய மேனாட்டு விற்பனைத் தலங்களுக்கு.

இன்றும் சரி, இந்தியப் பருத்தித் துணிகள் வையகமெங்கும் செல்லாத இடம் இல்லை. அக்காலக் 'கும்பினிக்' கப்பல்கள் இன்று வெறும் நினைவுச் சின்னங்களாகவும், பண்டையக்கால நெசவு முறைகள் விசைத் தறிகளாகவும் மாறிவிட்டபோதிலும், பரம்பரை பரம்பரையாக வந்த பற்றும், ஒப்பற்ற கலைத் திறனும் அசையாது நிலைபெற்றுள்ளன. எம்முடைய ஆலைகளில் நாள் தோறும் நெசவிடப்படும் 80,000 கஜத் துணிகளில் ஒவ்வொரு சாணும் இதற்குச் சான்று கூறும்.

# சாயாஜீ மில்ஸ் நம்பர் 2

**பெர்குஸன் ரோடு, பம்பாய்–13**



**இது ஒரு ரோஹித் க்ருப் ஸ்தாபனம்.**

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆல்மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையைவிட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண தன்மையை அடைகிறது. ஈறுகள் உறுதிபெறவும் ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது. உண்மையான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகின் மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!




CCA-C-10 TAM.

# வாழும் வர்ணனைகள்

-புதுமைப்பித்தன்

### சிற்றூர்

கோபாலபுரம் ஒரு சிற்றூர்.

சிறிது இடிந்த சிவன் கோயிலின் கோபுரம், ஊரின் கீழ்ப்புறத்திலிருக்கும் மாந்தோப்பின் மீது ரஸ்தாவின் திருப்பத்திலிருந்து பார்த்தால் தெரியும். சாயங்காலத்தில் அதாவது அஸ்தமிக்கும் செங்கோளமான சூரியனின் கிரணங்கள் மொட்டைக் கோபுரத்தின் மீதும், மாந்தோப்பின் மீதும் விழுந்து பளபளக்கும் சமயத்தில் நான் ஏன் சைத்ரீகனாகப் பிறந்திருக்கக் கூடாது என்று படும். ஊருக்கும் அந்த ரஸ்தாவுக்கும் ஏறக்குறைய அரை மைல் தூரமிருக்கும். கோபுரத்தைத் தவிர அங்கு மனித வாழ்வின் சின்னங்களைக் காண்பதே அருமை. தூரத்து மைதானத்தில் இரண்டு மூன்று எருமையோ, ஆட்டுக்குட்டியோ மேய்வதைப் பார்ப்பதும் மாட்டுக்காரனின் குரல் கேட்பதும், விதிவிலக்கு.

### சிற்றூர்வாசிகள்

கிராமவாசிகள் உயிர் வாழ்தலைப் பொறுத்தவரை வெளியூருக்குச் செல்ல வேண்டிய அவசியம் கிடையாது. செல்வதுமில்லை. வேண்டியதெல்லாம் சாப்பாட்டிற்கும், துணிக்கும்தானே? உடையைப் பொறுத்தவரை கும்பினியான் துணி வியாபாரத்தில் அதிக நம்பிக்கை. கிராமவாசிகளுக்கு உலகம் எந்தத்திக்கில செல்கிறது என்று அறிவும் கிடையாது. அறிய ஆவலும் இல்லை. சனிக்கிழமைச் சந்தைக்கு இலை காய்கறிகளைத் திருநெல்வேலிக்குக் கொண்டு, சென்று, விற்று முதல் செய்துவிட்டு அன்று 12 மணி நேரத்தில் அரைகுறையாகக் கேட்டதை மறு சனிக்கிழமை வரை பேசிக் கொண்டிருப்பதில் திருப்தியடைந்து விடுவார்கள் அந்த மகாஜனங்கள்.

### கல்லூரி மாணவன்

பலமுறை பரீட்சை மண்டபத்தில் புத்தி சாலித்தனத்தைச் சூது விளையாடிப் பார்த்தும், 'சலியாத தனியாண்மைத் தறுகண் வீரன்.' Mofussil Graduate மோஸ்தர். ஆயிரக்கால் மண்டபம் அமைக்க ஆரம்பித்து இரண்டு தூண்களை நிறுத்தியபின் காரியத்தையே மறந்துபோனது போல் கன்னத்துக்கு ஒரு தூண் கட்டிய கோரா. தண்ணீர் விட்டுத் தளதளப்பாகவளர்க் காதது போன்ற கனத்த மயிரை அரும்பு மீசையாக்கும் முயற்சி. வர்ணம் பூசிய வெள்ளைக்காரச்சி உதடு போலச் சிவப்பேறிய உதடு. நீளக் கிராப்பு.—சிவாமல் பேனுமல் இருந்தால் அகில இந்திய பேன் காங்கிரஸ் கூடுவதற்கேற்ற இடவசதி. கழுத்திலே மனத்தின் 'பெட்டைத் தனத்தை'க் காட்டும் மெல்லிய தங்கச் சங்கிலி. இங்கிலீஷ் ட்வில் ஷர்ட்; கழுதை பொதி சுமந்த மாதிரி 'பாத்' டவல் அலங்காரம். இடையில் நிர்வாணமில்லை என்பதை உய்விக்க வேஷ்டி. காலில் பெட்டை மாறி ஸ்லிப்பர். (Second rate cinema actor cum saloon-barber appearance) இப்படியான அலங்காரங்களுடன் 'ரோந்து' வந்து கொண்டிருக்கும் வாலிபன் கண்கள், சட்டைக்காரச்சியைக் கண்டால் பயத்தில் கண்களைத் திருப்பிக் கொள்வதும், தமிழச்சியைக் கண்டால் 'Field glass lens' மாதிரிக் கண்களைத் திறப்பதுமாகக் காலங் கழிக்கிறான்.

### கார்ப்பொரேஷன் விளக்கு

முருகதாசரின் ஆஸ்தான அறையில் ஒரு விசித்திரம் என்னவென்றால், சென்னையில் 'லைட்டிங் டைம்' அட்டவணையைக் கூட மதிக்காமல் அது இருண்டு விடும். இம்மாதிரி மண்ணெண்ணெய் நெருக்கடி ஏற்படாத காலங்களில் அந்த அறைக்குத்தான் முதலில் இராத்திரி. ஆனால்எண்ணெய் நெருக்கடிக் காலங்களில் சிவபிரானின் ஒற்றைக் கண் போன்ற அந்த அறையின் சன்னல் எதிர்ப்பக்கம் நிற்கும் மின்சார விளக்குக் கம்பத்திலிருந்து கார்ப்பரேஷன் வெளிச்சத்தைப் பிச்சைவாங்கும்.கார்ப்பரேஷன் தயவு வரும் வரை, ஸ்ரீ முருகதாசருக்கு வேறு வழியில்லை.






'தேவன்' எழுதிய நாவல்கள் நாடகத்துக்காக எழுதப்பட்டவையல்ல; படித்து இன்புறவே எழுதப்பட்டவை. ஒவ்வொன்றிலும் ஏகப்பட்ட பாத்திரங்கள் — எவர்சில்வர், சுபம், பித்தளை, இரும்பு இத்தியாதி; காட்சிக்குக் காட்சி நடிகர்கள் கொஞ்சநேரமாவது நடுத்தெருவில் நிற்க வேண்டும். இவ்வளவு இன்னல்களிருந்தும் இவை நாடகமாக்கப்பட்டபின் சம்பாஷணை அழகினாலும், உயர்ந்த நகைச்சுவையினாலும் வெற்றிகரமாகவே இருந்திருக்கின்றன.

புதுதில்லி ஸௌத் இண்டியன் தியேட்டர்ஸ் சென்ற மாதம் அளித்த 'மிஸ் ஜானகி' இந்த ரகத்தைச் சேர்ந்ததுதான்.

நாடக நேரத்தை வெகுவாகக் குறைத்து மூன்றே மணி நேரத்தில் காட்சிகளைச் சுருக்கி வெகு கச்சிதமாய் நடித்துக் காட்டியதைக் குறிப்பிட வேண்டும்.

சென்னையிலே நாடகங்கள் போடுவது வெகு எளிது. மேடை வசதி, ஆடை வசதி, அலங்கார வசதி அவ்வளவும் சென்னையில் உண்டு. டில்லி ஸௌத் இண்டியன் தியேட்டர்ஸ் கலைஞர்களுக்கு இந்த வசதிகளெல்லாம் இல்லாவிட்டாலும், அவர்களுக்கிடையே சிறந்த சித்திரக் கலைஞர்களும், ஒப்பனை நிபுணர்களும், காட்சி ஜோடனைக்காரர்களும் இருப்பதால் சிரமம் இருந்தும் அவை தெரியவில்லை.

நாடகத்தில் திருச்செந்தூர் முருகன்கோயில் காட்சி பிரமாதம். ஆங்கிலத்தில் 'ஸைக்ளோரமா' என்று சொல்லப்படும் வானவீதி ஜாலங்கள் கோவிலுக்குப் பின்னால் காட்சியளித்தன; மையத்தில் துவஜ ஸ்தம்பம். வானளாவிய கோபுரம். காவிச்சுவர். அற்புதம் போங்கள்! ஆச்சரியம் என்னவெனில், தக்க வேலை முதற்கொண்டு அங்கத்தினர்களே செய்ததுதான். திரை மறைவில் நின்று அரிய பணியாற்றும் அவர்களுடைய பெயர்களையெல்லாம் குறிக்காமல் விடலாமோ? திருவாளர்கள் ராம், ராஜகோபாலன், ஈசுவரன், ஜனார்த்தனன் — இவர்கள் அனைவரும் நமது பாராட்டுக்குரியவர்கள்.

நடிப்பு சம்பந்தப் பட்டவரை, டில்லிப் பத்திரிகைகள் ஒருமுகமாய்க் கூறியது போல, ஒருவரும் சோடை போகவில்லை; ''இன்னிக்கி ஏகாதசியாம், ப்ரொபஸர் அப்பளாச்சாரி வெங்காய வடையும், பேப்பர் ரோஸ் மஸாலாவும் வாங்கி வரச் சொன்னார்'' என்று முதற் காட்சியில் ஹாஸ்ய வெடி விட்ட அட்டெண்டர் பொன்னுரங்கம் முதல், அசட்டுத்தனத்தை வாரி வாரியாக வாரிக் கொட்டிய மாப்பிள்ளை ஜகநீசன் வரை எல்லோரும் கச்சிதமாக நடித்தனர். நடிகைகள் நால்வர்; எல்லோரும் குடும்பப் பொறுப்புள்ள பெண்மணிகள். இல்லத்தில் உள்ள எத்தனையோ இன்னல்களுக்கிடையே, அவற்றையெல்லாம் மறந்துவிட்டு, கலையார்வத்துடன் வந்து சிறிதும் ரசக் குறைவு இன்றி ரம்மியமாய் அவரவர் பாத்திரத்தை நடித்துக் காட்டினார்கள். டைரக்டருக்கு ஜே! உமா மேடைக்கென்றே பிறந்தவள்; 'கொசுவம்' புடவை பாந்தமாகக் கட்டிக்கொண்டு அவள் நறுக்குத் தெறித்தாற்போல் உதிர்த்த சம்பாஷணையைத் தில்லிவாசிகள் ஒருபோதும் மறக்க மாட்டார்கள்.

இந்த நாடகத்திலே பங்கெடுத்துக்கொண்டவர்கள் தொழில் நடிகர்களையும் மிஞ்சக்கூடிய விதத்தில் நடித்துச் சபையோரின் பாராட்டுதலைப் பெற்றனர்.

நாடகம் நடத்தியவர்களுக்கு லாபம் சம்பாதிக்கும் நோக்கமில்லை. அங்ஙனமிருக்க, பழம் பாதையிலேயே சென்று, பொழுது போக்கு நாடகங்களை போடுவதில் இந்தக் குழுவினர் தமது திறமையை வீணாக்குவானேன்? 'மிஸ் ஜானகி'யைப் பார்த்தோம், சிரித்தோம்; ஆனால் உள்ளத்தில் நிலைக்கும்படியான ஒரு துளி கூட அதில் இல்லை. நாடகத்தில் மையக் கருத்து என்பது ஒன்றுதான் இருக்க வேண்டும். சம்பாஷணைகளைச் சிதற அடித்துச் சபையோரைப் பதற விடக்கூடாது.

புதிய பாதையில் கவனத்தைச் செலுத்துவது ஸௌத் இண்டியன் தியேட்டர்ஸ் குழுவினருக்குக் கடினமான காரியமல்ல. பிறமொழிக் கலைஞர்கள் தில்லியில் பல அற்புத உத்திகளையெல்லாம் கையாண்டு ஓரளவு வெற்றியும் கண்டிருக்கிறார்கள். அந்தப் பாதையில் சென்று நாடகக் கலைக்கு மெருகு ஏற்றுவது ஸௌத் இண்டியன் தியேட்டர்ஸ் குழுவினர்களது முக்கியமான பொறுப்பாகும்.

—ஆர். கலோசஜு

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

அந்தப் பெருங்கூட்டத்தின் இடையே அப்படி ஒரு சூழ்நிலையில் இளங்குமரனிடமிருந்து சுரமஞ்சரி இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. நேற்று மாலை இதே நாளங்காடியில் தன்னைக் கண்டு, 'சுரமஞ்சரியா'- என்று கேட்டபோது 'நான் சுரமஞ்சரி இல்லை. அவள் சகோதரி வானவல்லி'- என்று தான் கூறியிருந்த பொய் அவன் மனத்தில் சிறிதும் சந்தேகத்தை உண்டாக்கியிராது என்றே அவள் எண்ணியிருந்தாள். ஆனால் அவன் ஒன்றை மெய்யென்று உணர்வதால் ஏற்படுகிற மகிழ்ச்சியையோ பொய்யென்று உணர்வதால் ஏற்படுகிற காழ்ப்பையோ முகத்தில் தெரிய விடுகிற சாமானிய இளைஞனாக இப்போது இல்லை என்பதை நினைத்த போது நேற்று அவனை ஏமாற்றி விட்டதாக நினைத்துக் கொண்டு தானே ஏமாந்து போயிருப்பது அவளுக்கு இன்று விளங்கியது.

கேள்வியைக் கேட்டவன் பதறாமல் கேட்டு விட்டுச் சலனமின்றி நின்று கொண்டிருந்தாலும் கேட்கப் பட்டவளால் அப்படிப் பதறாமல் நிற்க முடியவில்லை. சந்தனக் கல்லில் அரைத்த சந்தனம் சரிவு சரிவாய் இழைந்து மடிந்தாற் போல் அவள் முகம் சுருங்கியது. வாட்டமும் கண்டது. ஆனால் அந்த வாட்டமும் பதற்றமும் தன்னிடம் நீடிக்க விடவில்லை அவள். எதிரே படிப்பினாலும் தவத்தினாலும் இளைத்து வெளுத்துத் தூய்மையால் செழித்து அவன் நிற்கும் தோற்றம் என்ன மறுமொழி கூறுவதென்ற திகைப்பை அவளுக்கு உண்டாக்கினாலும் மெல்லிய குரலில் அவள் பேசினாள்:-

''மன்னிக்க வேண்டும். நேற்றிருந்த சூழ்நிலையில் நான் எதை எப்படி மாற்றிக் கூறியிருந்தாலும் அதை இன்று மறந்து விடுங்கள். நேற்று நிகழ்ந்ததைப் பற்றி இன்று பேச்சு எதற்கு? நேற்றைக்கு நானும் வசந்த மாலையும் இங்கு வந்திருந்த சூழ்நிலை வேறு. இன்றைக்கு தாங்கள் எல்லோரும் இங்கு வந்திருக்கிற சூழ்நிலை வேறு. இப்போது இந்த இடத்தில் அந்த வேறுபாட்டை விளக்கிக் கூற முடியாமல் இருப்பதற்காக அருள் கூர்ந்து எங்களைப் பொறுத்தருள வேண்டும்'' என்று அவள் கனி இதழ்களில் இருந்து வார்த்தைகள் பிறந்த போது இளங்குமரனுடைய இதழ்களில் நிர்விகாரமான புன்னகை ஒன்று அரும்பியது:

''நேற்று நிகழ்ந்ததை இன்று பேசக் கூடாது ஆனால் 'என்னைத் தெரியவில்லையா?' என்று நீங்கள் பேச்சைத் தொடங்கியதே தவறாயிற்றே அம்மணி? 'தெரியவில்லையா?' என்று நீங்கள் கேட்டதனால் தான், 'உங்களை எப்படித் தெரிந்து கொள்வது? நேற்றுத் தெரிந்தது போலவா, இன்று தெரிவது போலவா?' என நானும் கேட்க நேர்ந்தது.''

''நீங்கள் கேட்க நேர்ந்ததைப் பற்றி மகிழ்ச்சி. இன்று தெரிவது போலவே என்றும் நான் உங்களுக்குத் தெரிய வேண்டும் என்பது தான் என் விருப்பம். யாருக்கு எப்படித் தோன்றினாலும் உங்களுக்கு நான் சுரமஞ்சரியாகவே தெரிய வேண்டுமென்றுதான் விரும்புகிறேன்..''

''உங்கள் விருப்பம் அப்படி இருக்கலாம். ஆனால் இந்த உலகத்தில் சித்திரங்களிலும், சிலைகளிலும், மகாகவிகளின் காப்பியங்களிலும் தான் இன்றுள்ளது போன்ற குணத்தை என்றும் காண முடிந்த வகையைச் சேர்ந்த உத்தம மனிதர்களைப் பார்க்க முடிகிறது. வாழ்வில் கண்முன் காண்கிற மனிதர்களின் குணம் என்னவோ மாறிக் கொண்டே தான் இருக்கிறது. தீ சுடும் இயல்பை உடையது. நீர் குளிர்ந்தே இருப்பது என இயற்கைப் பொருள்களின் பொதுக் குணத்தை உறுதிப் படுத்திச் சொல்ல முடிந்தாற் போல மனிதர்களுடைய குணத்தை எப்படி உறுதிப்படுத்திச் சொல்ல முடியும்? அந்தந்த விநாடிகளின் நினைவுகளை அந்தந்த விநாடிகளுக்குரிய குணங்களாகவும் சத்தியங்களாகவும் கொண்டு

எந்த விநாடியில் இருந்தது சொந்தக் குணமென்று தெரியாமல், எந்த விநாடியில் எண்ணியது எல்லா விநாடிகளுக்கும் சத்தியம் என்றும் தெரியாமல் வாழ்கிறவர்களுக்கு நிலையான குணம் இது என்று எதைச் சொல்வது?''

''இப்பொழுது சொன்ன வார்த்தைகள் யாருக்காகவோ?''

''தனியாக யாருக்கென்று சொல்வது? உனக்காக—உங்களுக்காக, எனக்காக, எல்லாருக்காகவும்தான். ஓடுகின்ற ஆற்று நீர்போல் சென்ற கணத்தில் இங்கு நின்றது அடுத்த கணத்தில் எங்கு நிற்பதெனத் தெரியாததாய் எங்கும் நில்லாமல் ஓடிக் கொண்டே எல்லா இடத்திலும் நிற்பது போல் தெரிவதனால் குணம் ஓர் இயக்கம். இயக்கமில்லாத நிலையான சத்துவ குணத்தை அருட்கவிகளின் தெய்விகமான காப்பியங்களில் வரும் உத்தமமான பாத்திரங்களிடம் தான் காண முடியும். மனம் சத்துவ குணமே நிரம்பியதாகும் போது உலகம் சுக ரூபமாகவும், இராசத குணமே நிரம்பியதாகும் போது அதே உலகமே துக்க ரூபமாகவும், தாமத குணமே நிரம்பியதாகும்போது மோக ரூபமாகவும் தெரிகிறது. ஒரு சமயம் சுகமாய்த் தோன்றியது மற்றொரு சமயம் துக்கமாகவும், துக்கமாகத் தோன்றியது சுகமாகவும், மனத்துக்கும் அங்கு நிற்கும் குண நிலைக்கும் ஏற்ப மாறித் தோன்றுவதை எப்படி வரையறுக்க முடியும்?''

''வரையறைகளையும் இலக்கணங்களையும் பற்றி நீங்கள் என்னிடம் பேசுவதைப் பார்த்தால் என்னையும் உங்களோடு வாதிட வந்தவளாக நினைத்துக் கொண்டு விட்டதாகத் தெரிகிறது. நானும், என்னோடு வந்திருப்பவர்களும் உங்களை வாதுக்கு அழைக்க வரவில்லை. வணங்கிச் செல்வதற்கே வந்தோம்.''

''அப்படியா? மற்றவர்கள் என்னை வணங்குவதையும் சேர்த்து என்னும் வணங்கப்படுகிறவர்களுக்குப் பாவனையால் அனுப்பி விடுகிறவன் நான். இப்படி வணக்கங்களையும் கூட ஏற்று மகிழ முடியாதவனைத் தேடி வந்து வணங்குவதில் உங்களுக்கு என்னதான் சுகம் கிடைக்கப் போகிறது?''

''உலகத்தில் சுகம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தே எல்லாக் காரியங்களையும் செய்ய முடியுமோ? தொடர்ந்து துக்கமும், வெறுப்பும், அலட்சியமும் கிடைக்கிற இடத்தில்வந்துநிற்கும்போது அங்கே சுகம் கிடைக்காதென்று உணர்ந்திருந்தும் மனம் அந்த அவநம்பிக்கையிலேதான் சுகம் ஒளிந்திருப்பது போல் துரத்திக் கொண்டு வந்து நிறுத்துகிறதே...?''

சுரமஞ்சரி இந்தச் சொற்களைச் சொல்லும் போது அவள் விழிகளில் நீர் சுழன்று ஈரம் மின்னுவதை இளங்குமரன் கண்டும் அமைதியாகவே நின்றான். நன்றாக நிமிர்ந்து அதுவரை இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தைத் தானும் பார்த்தான் அவன். சுரமஞ்சரி நெகிழ்ந்த குரலில் மேலும் கூறலானாள்:-

''இன்று நாங்களாக வரவில்லை. எங்கள் தந்தையாருடைய வேண்டுகோளின்படி இங்கே உங்களைத் தேடி வந்தோம்.''

''உங்கள் தந்தையார் என்ன வேண்டுகோள் விடுத்தார்?''

''நாளங்காடியில் யாரோ ஓர் இளைஞர் காண்போர் வியந்து வணங்கும்படி அழகாக வாதிடுகிறார். அவரை இந்த நகரத்து அறிவுடைப் பெருமக்கள் எல்லாரும் போற்றுகிறார்கள். புண்ணிய சீலராகிய அந்த இளைஞரை வணங்கி வாழ்த்துப் பெறுவது பெரும்பேறு எனக் கருதுகிறார்கள். 'நீங்களும் இன்று போய் அவர் பாதங்களில் பூக்களைக் குவித்து வணங்கி வாழ்த்துப் பெற்று வாருங்கள்' என்று எங்கள் தந்தையார் எங்களிடம் கூறியனுப்பினார்.''

''உங்கள் தந்தையார் பிறரை வணங்கவும் விரும்புவது உண்டு போலும். மற்றவர்களை வணக்குவித்து மகிழ்கிறவர்களால் வணங்கிமகிழவும் முடியுமோ, அம்மணி?''

இளங்குமரனின் இந்தக் கேள்வி தனக்குக் கொடுக்கப்பட்ட சூடு என்பதைச் சுரமஞ்சரி உணர்ந்தாலும் இதற்குப் பதில் கூறாமல், பின்புறம் சற்றே விலகி நின்ற யவனப் பணியாளனிடமிருந்து பூக்கூடையை வாங்குவதற்காகத் தன் பூங் கரங்களை வளைகள் குலுங்க நீட்டினாள். கூடியிருந்தவர்கள் அந்தப் பெரிய பூக்கூடையைப் பார்த்து வியப்பில் மூழ்கினார்கள். அடடா! எவ்வளவு பெரிய பூக்கூடை இது!

'இவ்வளவு பெரிய கூடை நிறையப் பூக்களைக் கொண்டு வந்திருக்கிறவர்களுக்கு இந்த இளைஞர் மேல் எவ்வளவு மதிப்பு இருக்க வேண்டும்!' என்று கூட்டத்தில் யாரோ வியந்த குரல் இளங்குமரனுடைய செவிகளில் இலேசாக ஒலித்தது. பக்தியின் அளவைப் பூக்களின் அளவால் கணக்கிடும் பேதைமையையெண்ணி மனத்துக்குள் சிரிக்கும் உணர்வு பிறந்தது அவனுக்கு. பட்டினப்பாக்கத்துப் பெருமாளிகைச் செல்வர் தன்னை நேற்று நாளங்காடி வழியில் தேரிலிருந்தபடியே சந்தித்ததையும் தான் போக வழியில்லாமல் மறித்ததையும் நினைத்து இன்று அவரே தன்னை

வணங்கி வருமாறு கூறிப் பெண்களைப் பூக் கூடையுடன் அனுப்பியிருப்பதைத் தான் எப்படி நம்புவது என்றும் நினைத்துச் சில கணங்கள் சிந்தனையில் சந்தேகங்கள் பட இருந்தான் இளங்குமரன். 'உலகம் முழுவதும் சத்தியமும் நம்பிக்கையுமே நிறைந்திருப்பதாகப் பாவித்த ஞானம்' நினைவில் மேல் நின்ற காரணத்தால் நீரில் எழுதினவை போல் அந்தக் கீழான சந்தேகங்கள் மிக விரைவில் அவன் மனத்திலிருந்து அகன்று பழக்கப்பட்டு இருந்த சத்துவ குணமே விஞ்சி நின்றது. அதனால் மகா கவிகளின் காவியங்களில் பிறந்த உத்தம குணமே நிறைந்த உன்னதமான கதாபாத்திரங்கள் என்று அவன் சற்றுமுன் கரமஞ்சரியிடம் கூறியிருந்தாற் போலத் தானே ஓர் உத்தம கதாபாத்திரமாகி நின்றான். அவனுடைய கைகளும், பூக்களும் குவிந்து வணங்கப் போவதை எதிர்பார்த்தும் அந்த மென்மையான வணக்கத்தில் விருப்போ வெறுப்போ இல்லாமல் உதாசீனனாகிக் கண்களை மூடித் தன் ஆசிரியரை நினைத்து தியானத்தில் மூழ்கினான்.

ஆனால் பூக்கூடைக்குக் கைகளை நீட்டிய கரமஞ்சரியிடம் பணியாளன் கூடையைத் தர மறுத்தான்:-

''நீங்கள் விலகி இருங்களம்மா! இவ்வளவு பெரிய கூடையைத் தூக்கித் திறந்து பூக்களைக் கொட்டுவதற்கு உங்களால் முடியுமா? நானே கூடையைத் திறந்து பூக்களை இவர் பாதங்களில் படைக்கிறேன்'' என்று பணிவான குரலில் கூறி விட்டுத் தானே கூடையோடு முன்வந்து இளங்குமரனை நெருங்கினான் பணியாளன்.

''நீ பூக்கூடையைக் கொடு! நான் தான் இவர் பாதங்களில் பூக்களைப் படைக்கவேண்டும். புண்ணியத்தையெல்லாம் நீ பெற்றுக் கொள்ளலாம் என்று பார்க்கிறாயா? அது முடியாது'' என்று வேடிக்கையாகவும் பிடிவாதமாகவும் கூறிப் பணியாளனை மறித்துக் கரமஞ்சரி கூடையைப் பிடித்தாள். அவன் உடனே சற்றுப் பயந்து பதறினாற் போன்ற குரலில், ''வேண்டாம் அம்மா! விட்டு விடுங்கள்'' என்று சொல்லிக் கூடையை இறுகப் பற்றிக் கொண்டான். அவள் அவன் கூறியபடி கேட்காமல் கூடையைத் தன் பக்கமே இழுத்தாள்.

உயரமும் அகலமுமான அந்தப் பெரிய பூக்குடலையை இருவரும் மாறி மாறித் தம் பக்கம் இழுத்ததனால் குடலையே இருவருக்கும் பொதுவில் கீழே விழுந்து சரிந்தது. பூக்கள் சிதறின. அவ்வளவில் யாரும் எதிர்பாராத குடர் நடுக்கும் காட்சியொன்றைக் கூடியிருந்தவர்கள் கண்டார்கள்.

ஆ! இதென்ன? சரிந்த பூக்களோடு குடலைக்குள்ளிருந்து கருநாகம் ஒன்று சீறிக் கொண்டு வருகிறதே! கரி பூசிய அரசிலை போல அதன் படம் இளங்குமரனின் பாதங்களுக்கு மேலே உயர்கிறதே! ஐயோ!

கூட்டம் நிலைகெட்டு ஓடியது. கரமஞ்சரி ஒன்றும் புரியாமல் 'வீலெ'ன்று அலறிப் பின்வாங்கினாள். பூக்களின் அடியிலிருந்து முடிவற்ற நீளமாய்க் கருமை பெருகி வரச் சர்ப்பம் தன் முழு உருவமும் தெரிய வெளியேறிப் பொன் மெருகிட்டாற் போன்ற அவன் பாதங்களில் நெளிந்து படத்தைத் தூக்கிக் கொண்டு நின்றது. கரமஞ்சரி பயங்கரமாக அலறி விட்டு மூர்ச்சையாகித் தான் நின்ற இடத்திலேயே மயங்கிச் சுருண்டு விழுந்தாள்.

இந்த உலக நினைவே இல்லாதவனாகி இளங்குமரன் சிலையாய் நின்றான். அவனுடைய கண்கள் மூடிய நிலை மாறாமல் அப்படியே யிருந்தன. பிளந்த நுனி நாக்குகள் இரண்டும் அக்கினிக் கொழுந்தாய் நெளிய, 'என் நஞ்சை யெல்லாம் இந்த அழகிய பாதங்களில் அர்ப்பணம் செய்து விட்டு நான் தூய்மையடைந்து விடட்டுமா?' என்பது போல் படந்தூக்கி நின்றது நாகம். யாருடைய பாதங்களில் அந்தப் படம் நின்றதோ, அவன் மனத்தில் வேறொரு படம் - அதாவது அவனை இப்படி ஆக்கிய ஞான குருவின் படம் நின்றது.

## 11 - உத்தம நாயகன்

நெஞ்சுக்குள்ளேயே கிடைத்த குரு தரிசனத்தை முடித்துக் கொண்டு அவன் கண்களைத் திறந்தபோது அங்கே அவனெதிரில் நீலநாக மறவர் நின்று கொண்டிருந்தார். அவர் கைகளில் ஒரு கருநாகம் படத்தோடு சேர்த்து இறுக்கிப் பிடிக்கப்பட்டிருந்தது. கீழே கரமஞ்சரி மயங்கி விழுந்து கிடந்தாள். சுற்றிலும் கூட்டத்தினர் மிரண்ட கண்களோடு பார்த்துக் கொண்டிருந்தனர். எல்லாரும் பார்த்துக் கொண்டிருந்த போதே அந்தச் சர்ப்பத்தைக் கீழே எறிந்து படத்தை மிதித்துக் கொண்டு நின்றார் நீலநாக மறவர்.

# உங்கள் வீட்டில் வலியின் தொல்லை இல்லாமல் செய்ய

# ஸாரிடான்

## உபயோகியுங்கள்

















தலைவலி, உடம்புவலி, பல்வலி, ஜுரம் போன்ற உணர்ச்சி, தேக அசௌக்கியம் முதலானவைகளால் உங்கள் குடும்பத்தினர் வருந்தினால் அவர்களுக்கு ஸாரிடான் கொடுங்கள். விரைவில் சிறிதும் அபாயமின்றி நிச்சயமாக நிவாரணமளிக்கும். அத்துடன் ஸாரிடான் தெம்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும்! பெரியவர்களுக்கு ஒரு ஸாரிடான் வில்லை பூர்த்தியான டோஸ்; குழந்தைகளுக்கு ¼ முதல் ½ வில்லை வரை போதுமானது.




**ஒரே வில்லை போதும்**

ஒரு வில்லை *13* நயா பைசா

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிட்.

'தொழுத கையுள்ளும் படையொடுங்கும்' என்று நேற்று நான் கூறியிருந்ததை இவ்வளவு விரைவில் நீ மறந்துவிடுவாயென்று நான் நினைக்கவில்லை, இளங்குமரா! இந்தச் சமயத்தில் நான் இங்கு வந்து சேர்ந்திருக்கவில்லையானால் இதற்குள் நீ பாம்பு கடித்து இறந்து போயிருப்பாய்'' என்று சினத்தோடு அவனைக் கடிந்துகொண்டார் நீலநாகர். இதற்குள் வானவல்லியும், வசந்தமாலையும் ஓடி வந்து சுரமஞ்சரியின் மயக்கத்தைத் தெளிவித்திருந்தார்கள். அவர்களோடு வந்திருந்த யவனப் பணியாளனை மட்டும் காணவில்லை. அவன் எங்கோ ஓடிப் போயிருந்தான். கூடியிருந்த கூட்டத்தினரும், நீலநாகரும் அந்தப் பெண்களைச் சுட்டெரித்து விடுவது போலப் பார்த்தார்கள்; முணுமுணுத்தார்கள். 'இவள் பெரிய வஞ்சகப் பெண் பேய்! இல்லா விட்டால் இவர் மேல் பெரும் பக்தியுள்ளவளைப் போல நடித்துப் பூக்குடலைக்குள் பாம்பை மறைத்துக் கொண்டு வந்து இவரைக் கொலை செய்ய முயலுவாளா? என்ன அநியாயம்? பூம்புகார் நகரம் எவ்வளவோ கெட்டுப் போய் விட்டது ஐயா! ஒரு பாவமுமறியாத இந்த இளைஞரைக் கொன்று இவளுக்கு என்னதான் ஆகப் போகிறதோ?'' என்று கூட்டத்திலிருந்து தன்னைப் பற்றிப் பலவிதமாக எழுந்த குரல்களைக் கேட்டுச் சுரமஞ்சரி நெஞ்சில் நெருப்பைக் கொட்டினாற் போல் துடித்தான். இளங்குமரனோ புன்முறுவல் மாறாத முகத்துடன் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''எனக்கு ஒரு பாவமும் தெரியாது, ஐயா! எங்கள் தந்தை கூறியபடி மலரிட்டு வணங்க வந்தேன்...'' என்று தொடங்கி உணர்ச்சிகரமாக நெகிழ்ந்து வாய்விட்டு அழுது கொண்டே ஏதோ சொல்ல வந்த சுரமஞ்சரியை நோக்கி இடிமுழக்கக் குரலில் தூற்றிப் பழித்து விட்டு வெறும் பழிப்பால் மட்டும் அடங்க முடியாத சினத்தில் என்ன செய்கிறோம் என்ற உணர்வே இன்றிக் கீழே கிடந்த கல் ஒன்றை எடுத்து அவள் மேல் எறியப் பாய்ந்தார் நீலநாக மறவர். அவ்வளவுதான்! அந்தப் பெரிய கூட்டத்துக்கு உணர்ச்சித் தீயை மூட்டி விட்டாற் போல ஆயிற்று, அவர் செயல். எல்லாரும் அவரவர்களுக்குத் தோன்றியபடி கல்லையும், கட்டையையும் எடுத்து எறியத் துணிந்து விட்டார்கள். தாங்கள் உயிர் பிழைத்துப் பட்டினப்பாக்கத்துக்குத் திரும்பப் போவதில்லை என்று அந்த மூன்று பெண்களும் உணர்வு செத்து உயிர் மட்டும் சாகாமல் மருண்டு நின்றபோது ஒரு வித்தை நிகழ்ந்ததைக் கண்டார்கள். யாரும் எதிர்பாராதவிதமாக ''எல்லாவற்றையும் இந்த உடம்பின் எறியுங்கள்!'' என்று இளங்குமரன் அவர்களுக்கு அருகில் வந்து முன்புறம் நின்றுகொண்டான். அவர்களை நோக்கி எறியப் பெற்றுப் பாய்ந்து வந்த சில கற்கள் அவன் மேல் விழுந்தன. அடுத்த கணம் கூட்டத்தினரும், நீலநாகரும் ஒன்றுமேசெய்யத் தோன்றாமல் திகைத்து நின்றார்கள். கற்கள் அவர்கள் கைகளிலிருந்து நழுவின.

''வேறு பூக்களை நம்பாமல் என்னையே உயிர்ப் பூவாக உங்கள் பாதங்களில் சமர்ப்பணம் செய்கிறேன்'' என்று கண்ணீர் மல்க இளங்குமரன் பாதங்களில் வீழ்ந்தாள் சுரமஞ்சரி. நீலநாகர் புயலாக மாறினார்; இடியாக இடித்தார்: ''விலகிப் போ, உனக்கு அந்தப் பாதங்களை வணங்குவதற்கு என்ன தகுதி இருக்கிறது? குடலைக்குள் நாகப் பாம்பைக் கொணர்ந்தது போல உன் இதயத்தில் நீ என்னென்ன நச்சு எண்ணங்களை அடைத்துக் கொண்டு வந்திருக்கிறாயோ?'' என்று இரைந்து கத்திக் கொண்டே ஓடி வந்து அவளை அவன் பாதங்களிலிருந்து அவர் விலக்க முயன்ற போது அவள் தானாகவே விலகுவதற்காக நிமிர்ந்தான். அப்படி அவள் விலக நிமிர்ந்தபோது கல்லெறிபட்டு இளங்குமரன் நெற்றியில் காயமாகியிருந்த இடத்திலிருந்து இரத்தத் துளி ஒன்று சிவப்பு இரத்தின மணி போல் உருண்டு சரிந்து நழுவி, அவளுடைய நெற்றியில் திலகமிட்டால் என உதிர்ந்தது. அவனுடைய அந்த நெற்றிக் காயத்தைத் தன் கைகளால் தானே துடைக்க வேண்டுமென்று சுரமஞ்சரியின் இதயம் தவித்தது.

''உத்தம குணமே நிறைந்து சத்திய தரிசனம் தரும் உன்னதமான மனிதர்களைக் காவியங்களில் தான் காண முடியும் என்று நீங்கள் கூறியது தவறு. இதோ வாழ்விலேயே என் கண் முன் உங்களை அப்படி உத்தமராக நான் காண்கிறேனே!'' என்று அவனிடம் சொல்வதற்கு அவள் நாவு துடித்தது. ஆனால் சொல்லுவதற்கு வேண்டிய வார்த்தைகள் வரவில்லையே. அவள் தவித்தாள்.

''இதென்ன அநியாயமடி, வசந்தமாலை? பூக் கூடையில் பாம்பு எப்படி வந்தது?'' என்று பேயறைந்தாற்போல் அரண்டு போய் நின்று கொண்டிருந்த வானவல்லி வசந்தமாலையின் காதருகே மெல்லக் கேட்டான்.

''ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது அம்மா. யார் செய்ததென்று தான் சொல்ல முடியவில்லை. நான் இதை அப்



வைத்து அடைத்துக் கொண்டு, புன்னகை குன்றாத மலர்ச்சி முகமெங்கும் முன் போலவே இலங்க இளங்குமரன் சுரமஞ்சரியைப் பார்த்தான். மெல்ல வலது கையை உயர்த்திச் செந்தாமரைப் பூவின் உள்இதழ் போன்ற அகங்கையை அசைத்து, 'நீங்கள் போகலாமே' என்ற குறிப்பைப் புலப்படுத்தினான். அவள் அதைப் புரிந்து கொண்டாலும் தயங்கி நின்றாள். கண்களிலும் இதழ்களிலும் எதையோ பேச வேண்டுமென்ற உணர்வும் தயங்கி நின்றது.

''நான்...நான்....ஒரு பாவமும் அறியாதவள்... இப்படி யாரோ சூது செய்திருக்கிறார்கள்..என்னை மறுபடியும் மன்னிக்க வேண்டும்''—அவள் சொற்களைக் குழறினாள். தண்ணீரில் நனைந்த புதிய பட்டுப் போல் முழுமை தோயாமல் சொற்களைப் பேசியது அவள் சோகம். அவன் நன்றாக வாய்விட்டுச் சிரித்தான். நீண்ட நாட்களுக்குப் பின் இன்றுதான் முதல் முறையாக இப்படிச் சிரிக்கிறான் அவன்.

''நான் இதைக் குற்றமாக எடுத்துக் கொண்டு வேதனைப் பட்டால் தானே உங்களை மன்னிக்கலாம். நான் இதை அப்படி எடுத்துக் கொள்ளவில்லையே?''

''நீங்கள் மகா கவிகளுக்கு உத்தம நாயகனாகக் காவியங்களில் வாழ



போதே நினைத்தேன். ஒரு நாளும் இல்லாத திருநாளாய் உங்கள் தந்தையார் இங்கே போய் வருமாறு நம்மை அனுப்பியபோதே இதில் ஏதோ சூது இருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது'' என்று மெல்லிய குரலில் அவள் செவியருகே முணுமுணுத்தாள் வசந்தமாலை.

இடது கையை நெற்றிக் காயத்தின் மேல்

வேண்டிய பேராண்மையாளர். அதனால் எதையும் பிறர் குற்றமாக எடுத்துக் கொள்வதில்லை. ஆனால் நான் சாதாரணப் பெண். நான் செய்தது குற்றமென்று என் மனமே உறுத்துகிறது.''

இதற்கு அவனிடமிருந்து பதிலே இல்லை. மௌனம் தான் நிலவியது. சிரித்துக் கொண்டே பழையபடி அவளை நோக்கிக் கையை அசைத்தான் அவன்.

கரமஞ்சரி, கூட்டத்தினரின் வசை மொழிகளைச் செவிகளில் நிரப்பிக் கொண்டு பல்லக்குத் தூக்கிகள் காத்துக் கொண்டிருந்த இடத்துக்கு நடைப்பிணமாகச் சென்றாள். வசந்தமாலையும் வானவல்லியும் பின் தொடர்ந்தனர். கூட்டத்தில் சிலர் அவர்களைக் கண்டு வெறுப்புடனே வேறுபுறமாக முகத்தைத் திருப்பிக் கொண்டு காறியுமிழ்ந்தனர். கைகளைச் சொடுக்கி முறித்தனர்.

''இப்படிக் கெட்ட 'குணம் படைத்த பெண்களை ஏழு செங்கல் தலையிட்டுக் கழுதை மேலேற்றிப் பூம்புகார்த் துறைமுகத்துக்கு எதிரேயுள்ள வெள்ளிடை மன்றத்தைச் சுற்றிவரச் செய்ய வேண்டும்'' என்று அந்த ஊர் வழக்கமான தண்டனையை அவர்களும் கேட்கும்படி இரைந்து கத்தினான் கூட்டத்தில் ஒருவன். கலகலப்பிலிருந்து விலகிப் பல்லக்கின் அருகில் வந்ததும் கரமஞ்சரி சூறாவளியானாள்.

''அடி வானவல்லி! இந்தப் பல்லக்கு, பரிவாரம், எடுபிடி யாட்கள், பொன்னும் மணியுமாக மின்னும் அணிகலன்கள் எல்லாவற்றையும் இடித்து நொறுக்கிக் கொண்டு போய் நேர் கிழக்கே கடலில் கொட்டுங்கள்! என்னை விட்டு விடுங்கள். இந்தப் பல்லக்கு நரகத்துக்குப் போகும் வாகனம். நான் இதில் ஏறி வர மாட்டேன். இந்தா! எப்போதோ செய்த பாவங்களைப் போல் என் உடம்பைப் பற்றிக் கொண்டிருக்கும் இந்தப் பொன்னரி மாலை, மின்னிடை ஒட்டியாணம், முன் கை வளைகள், எல்லாவற்றையும் கொண்டு போய் என் தந்தையாகிய கொடும்பாவியிடம் கொடு''- என்று வெறியோடு அறைகூவியவளாய்த் தன் உடம்பில் அங்கங்கே இருந்த அணிகலன்களைத் தாறுமாறாகக் கழற்றிப் பல்லக்கில் எறியலானாள் கரமஞ்சரி.

''அம்மா! அம்மா! இதென்ன காரியம்? பொது இடத்தில் எல்லாரும் காண இப்படி...'' என்று தன்னைத் தடுக்க முன் வந்த வசந்தமாலையைப் பிடித்துத் தள்ளினாள் அவள். (தொடரும்)



# நீங்களும் இவ்வணங்கின் அழகிய கேசத்தைப் பெற விரும்புவீர்கள்!

ஓர் திருப்பம், ஓர் பார்வை—அவளுடைய அழகிய கேசம் உங்கள் மனதில் அழியாத இடம் பெறுகிறது. பிறகு, "இவ்வழகிய கேசம் எனக்கிருந்தால்", என்று நினைக்கிறீர்கள். மிகச் சிறந்த மூலதாரப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட 'கேஷ' அபரிமிதமான அழகிய கேசத்தை உங்களுக்கு அளிப்பதுடன், உங்கள் கேசத்திற்கு முற்றிலும் புதிய அழகிய வனப்பை அளிக்கிறது—நீங்கள் விரும்பும் அழகு உங்களை நாடுகிறது. கேஷாவின் மென்மையான நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

உங்கள் கேச
பாதுகாப்பு
திட்டத்திற்கு

## கேஷா



லேமா தயாரிப்பாளரின்
இன்னும் ஒரு
சிறந்த தயாரிப்பு



TAM

பூரண ஏஜென்டுகள்:
**எம். எம். கம்பாத்வாலா**
அஹமதாபாத்-1

ஏஜென்டுகள்:
**ஸி. நரோத்தம் & கோ.,**
பம்பாய்—2

சென்னை ஏஜன்டுகள் ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜன்டுகள் [illegible] & கோ., 41, 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

"சொல்கிறதைச் சீக்கிரமாகச் சொல்லி முடியுங்கள். எனக்குக் கைக் காரியம் நிறைய இருக்கிறது. எல்லாம் போட்டது போட்டபடியே இருக்கிறது. உங்கள் சாப்பாட்டுக் கடையை ஆரம்பிக்கவே இல்லை. அதைமுடித்து விட்டு நான் மத்தியானப் பூஜைக்கு வேறு எல்லாம் செய்தாக வேண்டும்."

"அதுதான் நானும் சொல்கிறேன். என்ன பண்ணப் போகிறாய்? ரவையா, சேமியாவா? என்ன கேசரி பண்ணப் போகிறாய்? நெய், முந்திரிப் பருப்பு, எல்லாமெல்லாம் இருக்கின்றனவா?" என்று இழுத்தார் நீளமாக.

"நீங்கள் வேறென்னவோ கேட்க வந்தீர்கள். இப்போது ஒன்று கிடக்க ஒன்று ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் சொல்ல வந்தது வேறென்னவோ? ஏன் நம்மைச் சோதிக்கிறீர்கள்? சொல்லுங்களேன் தைரியமாக."

கல்யாணிக்குக் கணவன் என்று ஒருவன் கிடைக்கிற வரை ரங்கையாவுக்குத் தலைச் சொறியல் இருந்து கொண்டுதான் இருக்கப் போகிறது! அவர் முகம் அசடு தட்டியது.

"இதோ, பார்! சங்கரி. போன தரம் வந்த வரன் என்ன சொல்லி விட்டுப் போனான் தன் சிநேகிதன்கிட்டே என்பதை நினைத்துப் பார். அந்த மாதிரி ஆகிவிடக் கூடாது, இன்றைக்கு."

பக்கத்து அங்கணத்திலிருந்து வந்த இருமல் சத்தத்தைக் கேட்டு அவர் பேச்சை நிறுத்தினார். நல்ல வேளை, இருமியது கல்யாணியல்ல என்ற திருப்தியோடு தொடர்ந்தார். "இன்றைக்கு வரப் போகிறவர்கள் எவ்வளவோ நல்லவர்களாகப் படுகிறது எனக்கு. பையனைப் பெற்றவர் நமக்குப் பணம் காசு எதுவும் பெரிதில்லை என்று எழுதியிருக்கிறார். நீதான் படித்தாயே அவர் கடிதத்தை. குழந்தை பார்க்கிறதற்கு இலட்சணமாய், வியாதி--வெக்கை ஒன்றும் இல்லாமல் இருந்தால் பாட்டும் படிப்புங்கூட அப்புறம்தான் என்று சொல்லியிருக்கிறார்."

அவர் சொல்ல வருவது என்ன என்பது இன்னும் சங்கரியம்மாளுக்கு மர்மமாகத்தான் இருந்தது. எதற்கு இவ்வளவு சுற்றி வளைத்து நெடு நீளப் பீடிகை? போன தடவை வந்து பெண் பார்த்து விட்டுச் சென்ற பையன், "அந்த வீடு, என்னப்பா, ஒரு ஆஸ்பத்திரி மாதிரியல்லவா இருக்கிறது? பெண் இருமுகிறாள், ஒரு பாட்டுப் பாடுகிறதற்குள் நாலு தடவை. அம்மாக்காரி வேறே லொக்கு லொக்கென்று இருமிக் கொண்டிருந்தாள். இதைத்தவிர வயதான குரல் ஒன்று, விடாமல் இருமிக் கொண்டே இருந்தது. பாட்டியோ, என்னவோ? எப்போதடா, இந்த ஆஸ்பத்திரியை விட்டு வெளியே கிளம்புவோம் என்று ஆகிவிட்டது அரை மணிக்குள்" என்று குறிப்பிட்டது ரங்கையா காது வரையில் எட்டி விட்டது. அதை யெல்லாம் இப்போது நினைவு கூர்வானேன்? தினந்தோறும் கல்யாணிக்கு இராப் பகலாய்த்தான் சித்தரத்தைக் கஷாயம், மிளகு தட்டிப் போட்ட பால், அதிமதுரம்-திப்பிலி சொரசம் என்று வைத்தியம் நடந்தாகிறதே? இன்னும் என்ன செய்ய வேண்டுமாம்?

சங்கரியம்மாளின் மனத்தில் இவ்வெண்ணம் தோன்றிய போது, வாயிலே ஓர் இருமல் புகைந்து கொண்டு வெளிக்கிளம்பியது. இத்தனை நேரம் வரை இருமாமல் இருந்ததே பெரிய சங்கதி.

ரங்கையா, "என்னடி, நீயும் அதெல்லாம் சாப்பிட்டு வரப்படாதோ?" என்றார்.

"ஆமாம். அந்தப் பிள்ளையாண்டான் என்னைத்தானே பெண் பார்க்க வருகிறான்? என் கூடப் பிறந்த இருமல் தீர வேண்டியதுதானே இப்போது முக்கியம்?"

"இப்படி வீட்டிலே நாலு பேர்கள் லொக்கு லொக்கென்று இருமிக் கொண்டிருக்கலாம். வந்தவர்கள் மட்டும் ஆஸ்பத்திரி மாதிரி இருக்கிறது என்று சொல்லப்படாதாக்கும்." சற்று துணிந்தே பேசிற்று அவர் வாய்.

"ஏன் நீங்களும் சேர்ந்துகொண்டு சொல்லுங்களேன் அவர்களோடு. ஒரு காலத்தில் எல்லாம், நீங்களும் சொன்னவர்கள்தானே? ஓகைக் குடும்பத்து இருமல் என்று உங்கள் அப்பாவும் அம்மாவும் கொஞ்சமாகவா சொல்லிக் காட்டினார்கள் அந்த நாளிலே?"

"அடேயப்பா. பிறந்தகத்து உணர்ச்சி பொத்துக் கொண்டு வந்து விட்டதோ? கேட்கிறேன். 'உங்கம்மா' இருமுகிறாள் இராப் பகல் ஓயாமல். நீயும் இப்போதுதான் நிறுத்தியிருக்கிறாய் அதிசயமாய். உன் பெண்ணும் இருமித் தள்ளுகிறாள். ஓகையார் வீட்டு இருமல் என்று சொன்னால் மட்டும் குறைந்து போய் விடுமோ?"

"நானும் எங்கம்மாவும் இருமினால், எங்களுடைய ஊர் ஓகையை இழுப்பானேன்? ஓகையிலே ஊர் முழுவதும் எல்லாரும் இருமிக் கொண்டுதான் இருக்கிறார்களா? உங்கள் பெண்ணுக்கு எங்கள் வம்ச பரம்பரையான இருமல் வருவானேன்? அவளாவது உங்களைக் கொண்டிருக்கட்டுமே. நாங்களா வேண்டாம் என்று சொன்னோம்? உங்கள் ஊர் களப்பாள் ஆயிற்றே. இந்த இருமலுக்கு மட்டும் கல்யாணி எங்கள் வம்சம் ஆகிவிட்டாளா?"

இந்தப் பேச்சையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த கல்யாணிக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவளுக்கு உண்மையில் களப்பாள் என்ற ஊரோ, ஓகை என்ற கிராமமோ எங்கே இருக்கின்றன என்பதே தெரியாது. தன் தாய் தந்தையருள் எப்போது என்ன சச்சரவு எழுந்தாலும், எப்படியோ இந்த இரண்டு ஊர்ப் பெயர்கள் மட்டும் வந்துவிடும் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும்.

ரங்கையா பணிந்து பேசினார்: "சங்கரி! நான் சொல்வதைக் கொஞ்சம் கேள். உனக்கு ரொம்பப் புண்ணியம் உண்டு."

"சொல்லுங்களேன். இத்தனை வருஷத்திலே நீங்கள் எது சொல்லி, நான் கேட்காமல் இருந்திருக்கிறேன்?"

"நான் இப்படிச் சொல்கிறேனே என்று நினைக்காதே."

"ஒரு வீட்டிலே பாட்டி, அம்மாக்காரி, பெண்-மூன்று பேரும் லொக்கு லொக்கென்று இருமினால், யாரும் தயங்கத்தான் செய்வார்கள், சம்பந்தம் செய்து கொள்ள. நீயே சொல்லு."

"என்னத்தைச் சொல்கிறது?"

"நான் சொல்வது சரிதானே?"

## ஆரோக்யமுடன்
## கூடிய
## ஆனந்த சிரிப்பு










ஆம், ஏனெனில் குடும்பத்திலுள்ள அனைவருமே ரெமி டூத் பேஸ்ட் உபயோகிக்கின்றனர். அதனின் நுரை பற்களையும், ஈறுகளையும் திடம் பெற செய்வதுமன்றி அதனுள் கமழும் நறுமணம் உபயோகித்த பின்னும் வாயினில் நீண்ட நேரம் தங்கி ஓர் உற்சாக உணர்ச்சியை ஊட்டுகின்றது.

# ரெமி
## டூத் பேஸ்ட்

(அஸாலின் கலந்தது)

பவுடராகவும் டின்களில் கிடைக்கும்

இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் ரெமி தயாரிப்புகள் RP 958

இலங்கையில் கிடைக்குமிடம்: A V R A Ltd., Colombo
ரேடியோ சிலோன் 41.72 மீட்டரில் "ரெமி நாடக விருந்து"
வெள்ளிக்கிழமை தோறும் மாலை 6-30 விருந்து 6-45 வரை

செப்டெம்பர் 22ம் முதல்

சென்னை
கெயிட்டி
மகாராணி
மற்றும் தென்னாடெங்கும்...







நீலா புரொடக்ஷன்ஸ்

# யார் மணமகன்?

(தமிழ்)



டைரக்ஷன் பி. சுப்ரமணியம்

இசை
பிரதர் லக்ஷ்மண்

ஸ்டுடியோ
மெரிலாண்ட்
*
வசனம்
இளங்கோவன்



விநியோகஸ்தர்கள்: சென்னை நகரம், கேரள ராஜ்யத்துக்கு: மெஸர்ஸ் குமாரஸ்வாமி & கம்பெனி, திருவனந்தபுரம் ○ வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் ஏவி. எம். லிமிடெட், சென்னை ○ திருச்சி & தஞ்சை ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் நாராயணன் & கம்பெனி பிரைவேட் லிமிடெட், சென்னை ○ மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி மற்றும் மைசூர் ராஜ்யத்துக்கு: மெஸர்ஸ் ராயல் டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், மதுரை ○ சேலம், கோயமுத்தூர் மற்றும் நீலகிரி ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் கரூர் ஜெய் ஹிந்த் பிக்சர்ஸ், கோயமுத்தூர் ○ சிங்கப்பூர்: ஷா பிரதர்ஸ், சிங்கப்பூர்.

"நீங்கள் என்னைப் பண்ணிக் கொண்டு என்ன குறைந்துபோய் விட்டீர்கள்? அந்த நாளிலே நானும்தான் கல்யாணி மாதிரி இருமிக் கொண்டிருந்தேன். பார்க்கப் போனால் கல்யாணி தேவலாம். நான் இருந்த இருப்புக்கு."

ரங்கையாவைச் சரியான இடத்தில் மாட்ட வைத்தாள்.

"வருகிறவர்களுக்கல்லவா அந்த மாதிரித் தோன்ற வேண்டும்? நான் சொல்லி என்ன பிரயோசனம்?" கவலையாகத் தப்பினார் ரங்கையா தம் இந்தப் பதிலினால்.

அவரது பேச்சையெல்லாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தாள் அவருடைய மாமியார். இது தெரிந்துதான் அவரும் அவ்வளவு தணிந்த குரலில் பேசினார்.

"சங்கரி! பெண் பார்க்க அவர்கள் வருகிற பொழுது நீ எப்படியும் இருக்கத்தானே ஆக வேண்டும்? உன் இருமலைக் கொஞ்சம் இந்த ஒரு நாள் சாயந்திரத்துக்காவது குறைத்துக் கொள்ளப்படாதா என்று தான் கேட்கிறேன். நீ என்னடாவென்றால் அதற்குள் சண்டைக்கு வருகிறாய்!"

"வேண்டுமென்றுதான் நாங்கள் எல்லாரும் இருமுகிறோம். ஏன் என்றால், உடனே நீங்கள் சோடா, கலர் வரவழைத்துத் தருவீர்களோ, இல்லையோ?" — சம்பந்தமில்லாத இடத்தில் சரியான ஹாஸ்யம்!

ரங்கையா சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். பொழுது போய்க் கொண்டிருந்தது. சங்கரியைக் கூப்பிட்டுப் பேச ஆரம்பித்து அரை மணி ஆகிறது. வாக்குவாதமும், தர்க்க-குதர்க்கமும் தான் வளர்ந்தன. இன்னும் அவர் விஷயத்தைச் சொன்ன பாடில்லை. சொன்னால், சங்கரி என்ன சொல்வாளோ? என்ன சொன்னால் என்ன, சொல்லித்தான் ஆகவேண்டும். அதுவும், எப்போது அந்த மனிதர் பெண் நோய்-நொடியில்லாமல் நல்லபடியாக இருந்தால் சரி என்று எழுதியிருக்கிறாரோ, ஒரு வழியாய்ச் சொல்லிவிட வேண்டியதுதான்.

தீர்மானத்தோடு, இதோ பேசினார் ரங்கையா. "சங்கரி! இரண்டு மணிப் போது தான். அவர்கள் அதற்குள் கிளம்பிப் போய் விடுவார்கள். நான் சொல்கிறேனே என்று நினைக்காதே. 'உங்கம்'மாளை அந்த இரண்டு மணி நாழிகைக்கு எங்கேயாவது அனுப்பி விடேன்......"

பெரியவர் சங்கரியம்மாளின் முகத்தைக் கூர்ந்து நோக்கினார். நோக்கியவர் தொடர்ந்து பேசலானார்: "உங்கம்மாவுக்கு மாப்பிள்ளைப் பையனைப் பார்க்க வேண்டும் என்று எவ்வளவோ துடிப்பாயிருக்கும். நான் ஒத்துக் கொள்கிறேன். பேத்திக்கு வரப் போகிற புருஷனை இன்றைக்கே பார்த்தால்தானா?"

சங்கரியம்மாள் விருட்டென்று நடந்தாள்.

"அவ்வளவுதானே? அம்மாளை யார் வீட்டுக்காவது அனுப்பி விடேன் என்கிறீர்கள். ரொம்ப நல்லது. நானும் வேண்டுமானால் எங்கேயாவது போய், ஒளிந்து கொள்கிறேன். நீங்களும் கல்யாணியுமாய் வருகிறவர்களைச் சமாளித்துக் கட்டினால் சரி!"

"அப்படிச் சொல்லவில்லையடி நான்."

"என்ன வேண்டுமானாலும் சொல்லுங்களேன். எங்கம்மா இருக்க வேண்டாம். இருமித் தீர்க்கவும் வேண்டாம் என்கிறீர்கள். அவளுக்கெல்லாம் அவளுடைய குணத்துக்கும் முகவெட்டுக்கும் இந்த வைர மூக்க இரண்டு மணி என்ன ஆயுசுக்கு எங்கேயாவது இருக்கவென்று கூப்பிட்டு வைத்துக் கொள்வார்கள் அவளைத் தெரிந்தவர்கள். வருகிறதுகளுக்கு அவள் மதிப்புத் தெரியாவிட்டால்......"

மேலே என்ன சொன்னாளோ, ரங்கையாவின் காதில் விழவில்லை.

சற்று நேரம் கழித்துச் சங்கரியம்மாள் வந்தாள். "திருப்திதானே? அம்மா சேஷன் வீட்டுக்குப் போய் விட்டாள். நான்கூடச் சொன்னேன் இந்தத் தெருவிலே இருக்காதே, உன் மாப்பிள்ளை மனம் குளிரட்டும் என்று. எங்கம்மா அசடு. பேத்திக்கு வரப் போகிறவனை அவர்கள் வீட்டு ஜன்னல் வழியே பார்க்க வேண்டுமாம். சேஷன் வீடுதான் இதற்குச் சௌகரியமென்று சொல்லிக் கொண்டு அவள் கிளம்பிவிட்டாள்."

ரங்கையாவுக்கு உண்மையில் ஒரு பெரிய தடங்கல் நீங்கியதாகத்தான் எண்ணம். தம் மன நிறைவைக் காட்டிக் கொள்ளாமல் தலை குனிந்து நின்றார். சங்கரியம்மாளுக்கா தெரியாது அவர் மனம்? விடவில்லை அவள்.

"உங்களுக்கு இந்த யோசனை இரண்டு நாட்கள் முன்னாலேயே தோன்றியிருந்தால் உருப்படியாக ஒரு காரியமாவது செய்திருப்பேன். அம்மா பத்ரி, ஹரித்வார் மெல்லாம் போகவேண்டும் போகவேண்டுமென்று ஜபம் பண்ணிக் கொண்டிருந்தாள். போன வருஷம் காசி, பிரயாகை மட்டும் போய் விட்டுக் குளிருக்குப் பயந்து கொண்டு பாதியில் வந்து விட்டதில் ரொம்பக் குறை. நீங்கள் முன்னாலேயே ஜாடையாய்ச் சொல்லியிருந்தால், குப்புசாமி அம்மாளோடேயாவது சேர்த்து விட்டிருப்பேன். இப்பொழுது வந்து திடுதிப்பென்று அம்மாளை வீட்டை விட்டுப் போகச் சொல்லு என்று பொட்டைக் 'கார்வார்' பண்ணினால்?"

"ஆமாமாம், அங்கெல்லாம் போய் விட்டு இருமலை இன்னும் அதிகப்படுத்திக் கொண்டு வரச் சொல்லு. போன வருஷம் காசிக்குப் போய்த்தான் அவள் இருமலை வளர்த்துக் கொண்டு வந்தாள். வடக்கத்திய குளிர் ஒத்துக் கொள்ளவில்லையென்று. அதற்கு முன்னால் இருமல் இவ்வளவு மோசமில்லை...."

"ஆமாம். மாமியார் உடம்பின் மேலே ரொம்பக் கரிசனம்!"

சங்கரி சமையற்கட்டுக்குச் சென்றாள்.

ரங்கையா சோர்ந்துபோய் உட்கார்ந்தார். சங்கரியம்மாள் கேசரி, பஜ்ஜித் தட்டுக்கள், காப்பித் தம்ளர், டபராக்களை ஹாலுக்கு எடுத்துச் சென்றாள். கல்யாணி கதர் 'ஸில்க்' புடவையைக் களைந்து கொசுவிக் கொடியில் போட்டுக் கொண்டிருந்தாள். இரண்டு மூன்று மணி நேரமாக அங்கு குடி கொண்டிருந்த பரபரப்பு, துடிதுடிப்பு எல்லாம் எங்கோ போய்விட்டன. சாப்பாடு ஆகி விட்டது. எச்சில் இலைகள் எடுக்க வேண்டிய கட்டம். அதைப் போன்ற வெறுஞ் சூழ்நிலை.

ரங்கையாவுக்குப் பெரிய ஏமாற்றம்.

வீணில் வந்தவர்களைக் குறை கூறக்கூடாது. நல்லவர்களாகத்தான் தோன்றினர். தம் பெண்ணுக்கு அதிர்ஷ்டம் இல்லை போலும்!

கல்யாணி பலகாரத் தட்டைக் கொண்டு வந்து வைத்துவிட்டு நமஸ்கரிக்கக் குனிந்தாள். அப்போது, கும்மல் கூடத் தேவலே, பாழும் இருமல் ஒன்று வெளி வந்து கூடத்து நிறைய எதிரொலித்தது. பெண்ணைப் பெற்றவருக்கு வயிற்றைக் கலக்கியது.

"பாட்டுத் தெரியும் என்று சொன்னீர்களல்லவா?" என்று பையனைப் பெற்றவர் விசாரித்தார்.

"ஆமாம்."

"ஒரு பாட்டுப் பாடம்மா கேட்கலாம்." வந்தவரே சொன்னார்.

கல்யாணி தொண்டையை மெதுவாகக் கனைத்துக் கொண்டு "சித்தி விநாயகம்" என்று ஷண்முகப்பிரியாவில் எடுத்தாள். பாட்டு தங்கமானதுதான். பாடியதும் நன்றாகத்தான் இருந்தது — பாடியவரை — அதாவது எடுப்பு முடிய.

'சித்தயட்ச கின்னராதி சேவிதம்' இது அநுபல்லவி. கல்யாணியின் தொண்டை கரகரத்தது. மறு விநாடி பாட்டு நின்றது. இருமல் ஒன்று வீடே தகர்கிறாற் போல் ஒலித்தது. ரங்கையாவின் கை விரல்கள் பிசைந்துகொண்டன. பையனின் தாயார் "தண்ணீர் வேண்டுமானால் குடித்துவிட்டுப் பாடம்மா" என்றாள். சங்கரியம்மாள் தண்ணீர் எடுத்து வந்து தந்தாள். கல்யாணியின் இருமல் நின்றது. தண்ணீர் அருந்த வழி விடவே யில்லை. கல்யாணி பார்க்கத் தாமரைப் பூ நிறமாக இருப்பவள், இப்போது இடையறாத இருமலில் விழிகள் கலங்கி முகம் சிவந்து போகத் திணறி விட்டாள். அந்த ஒரு நிமிஷம்.

பாட்டாவது கூத்தாவது!
எல்லாம் அவ்வளவுதான்!

அப்புறம் வந்தவர்கள் சில நிமிஷ நேரங்கள் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்பினர். ரங்கையாவுக்கு முடிவு உடனே தெள்ளத் தெரிந்தது. ஊர் போய் எழுதுவதாகச் சொல்லிப் போகும் அக் கடிதம் வந்து தான் முடிவு தெரியவேண்டு மென்பதில்லை, பரீட்சை அடியோடு தகர்ந்து விட்டபோது.

உதட்டைக் கடித்துக் கொண்டே அவர்கள் எல்லோரும் போய் விட்டார்களா என்பது போலப் பார்க்க வந்த ரங்கையாவின் கண்கள் அப்படியே குத்திட்டு நின்றன. "சங்கரி, சங்கரி" என்று கூவினார்.

குழாயடியிலிருந்த சங்கரியம்மாளுக்குக் கோபம் குமுறி வந்தது.

"வந்து பார்ப்பதற்கு என்ன வைத்திருக்கிறீர்கள் அப்படி அதிசயமாய்?"

"முதலில் நீ இங்கே வந்து பாரேன். அது யாரென்று பார். 'உங்கம்மா' தானே?"

ரங்கையா சங்கரியம்மாளை உள்ளே வந்து இழுக்காத குறையாகக் கூப்பிட்டுக்கொண்டு சென்றார். அவளாலும் தன் கண்களை நம்ப முடிய வில்லை.

"உங்கம்மா' தானே அது?"

"ஆமாம். அதுதான் நானும் பார்க்கிறேன். சற்று முன்னே பெண் பார்த்து விட்டுப் போனவர்கள் அவள்கூட வருகிறாற் போல் இருக்கிறதே. ஒன்றுமே புரிய வில்லையே."

"சரி சரி, சட்டென்று உள்ளேபோ. தம்ளரெல்லாம் அப்புறம் தேய்த்துக் கொள்ளலாம். அவர்களெல்லோரும் இங்கேதான் வருகிறாற் போல் இருக்கிறது."

கல்யாணி அவசரம் அவசரமாய்ச் சீப்பெடுத்துக் கூந்தலைச் சீர்ப்படுத்திக் கொண்டாள்.

லொங்கு லொங்கென்ற இருமலுடன் தன் தாயார் உள்ளே முதலில் நுழைவதை இரண்டாம் கட்டில் நிலைகுலைந்தவளாய் நின்றபடி சங்கரியம்மாள் கவனித்தாள். உடன் சற்று முன் வந்து சென்றவர்கள் — பையனும் பெற்றவர்களும் — திமுதிமுவென்று படியேறினர். ரங்கையா சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டார். 'வாருங்கள்' என்று வாய் திறந்து சொல்லக்கூட அவரால் முடியவில்லை.

வந்தவர் பேசினார்: "சார்! நாம் ரொம்ப வேண்டியவர்களாகி விட்டோம், ஒரே நிமிஷத்திலே. இந்த இடம் என்று தெரிந்திருந்தால், பெண் பார்க்க என்று ஒரு நடை வந்திருக்கவே வேண்டாம்."

ரங்கையாவுக்கு வாயெல்லாம் பல். தான் அப்போது இருப்பது எங்கே என்று மட்டும் அவருக்கு விளங்க வில்லை. கடவுளுக்காகத் தவம் இருந்த பக்தன் தன் இஷ்ட தெய்வம் பிரசன்னமானதும் எப்படி ஆனந்தப்படுவானோ, அந்நிலையில் இருந்தார் ரங்கையா. உள்ளே விருந்து கவனித்த சங்கரியம்மாள் "ஏன்தான் இந்த மனிதர் இப்போதுகூடத் தலையைச் சொறிகிறாரோ? சந்தோஷமாக இருக்க வேண்டிய இடத்துக்கும் இவருக்கு இதுதான் முத்திரையா?" என்று மனத்துக்குள் கடிந்து கொண்டே "வாருங்கள்' வாருங்கள்' என்று வாய் நிறையக் கூறிப் பையனின் தாயாரை வரவேற்றாள்.

அந்த அம்மாள் பேசினாள்: "நீங்கள்தான் எங்களுக்குப் புதியவர்கள். உங்கம்மா எங்களுக் கெல்லாம் ரொம்ப வேண்டியவா! உட்காருங்கள் முதலில். எல்லாம் ஆரம்பத்திலிருந்து சொன்னால்தான் உங்களுக்குப் புரியும். 'உங்கம்மாவை' நாங்கள் போன வருஷம் பிரயாகை, காசி யெல்லாம் போனபோது பார்த்தோம். எங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவராகவே ஆகி விட்டார் என்று சொல்ல வேண்டும். பிரயாகையிலே அன்றைக்குத் திரிவேணி ஸ்நானத்திலே எங்கள் பிள்ளைக்குக் குளிர் காய்ச்சல் மாதிரி வந்து நாங்கள் தவித்துக் கொண்டிருந்தபோது தெய்வம்தான் அந்தச் சத்திரத்திலே 'உங்கம்மா'வைக் கொண்டு வந்து சேர்த்தது. இரண்டே நாட்கள்தான்! என்னவோ கஷாயம் வடித்துக் கொடுத்தார். என் பிள்ளையாண்டான் இன்னும்சொல்வான். அந்தப் பிரயாகைப் பாட்டி தன்னோடே அந்த இருநாளுக்கு நடுவே எனக்குக் கஷாயம் எல்லாம் பண்ணிக் கொடுத்து உயிரூட்டியதற்கு நாம் பாட்டியினுடைய விலாசம் கூடக் கேட்டுக் கொள்ள வில்லையே என்பான். நல்லதாய்ப் போயிற்று. என்னடியம்மா, கல்யாணி.! உனக்கும் சம்மதம்தானே அவனைப் பண்ணிக் கொள்ள?"

சங்கரியம்மாள் 'இவர்கள் கிளம்பிப் போகட்டும். அதற்கு அப்புறம் அவரை வம்புக்கிழுக்கிறேன்' என்று முணுமுணுத்துக் கொண்டே, பெருமையுடன் தாயை நோக்கினாள். அவள் பாட்டுக்குச் சந்தோஷமாக இருமிக் கொண்டிருந்தாள்!

# குடும்பத்தினர் அனைவரும் பரிபூர்ண ஆரோக்கியத்துடனிருக்க



# வாக்குலாக்ஸ்

ட்ரேட் மார்க்

## இனிக்கும் மலமிளக்கி - பேதி மருந்து




நீங்கள் மலச்சிக்கலினால் அவதிப்படுகிறீர்களா? கல்லீரல் உபாதைகள், பித்தம் முதலானவைகளிலிருந்து வருந்துகிறீர்களா? நீங்கள் உற்சாகமற்று இருக்கிறீர்களா? உங்கள் ஜீரண உறுப்புக்களுக்கு கெடுதிபோன்றும் விளைவிக்காமல்—பரிபூர்ணமாக, விரைவில் அபாயமின்றி நிவாரணமளிக்கும் வாக்குலாக்ஸை சாப்பிடுங்கள். இனிய ருசியுள்ள வாக்குலாக்ஸ் இதமாகவும், நன்றாகவும் வேலை செய்யக்கூடியது. குடும்பத்திலுள்ள அனைவரும் வாக்குலாக்ஸை சாப்பிடலாம். பரிபூர்ண ஆரோக்கியத்தை புதிய முறையில் திரும்பப் பெறுங்கள். வாக்குலாக்ஸ் உங்களுக்கு உற்சாகமும், புத்துணர்ச்சியும் அளிக்கிறது. ஞாபகமிருக்கட்டும், வியாதிகளில் 70 சதவிகிதத்திற்கு மலச்சிக்கலே மூலகாரணம். வாக்குலாக்ஸ் உங்கள் வயிற்றை நன்கு சுத்தப்படுத்துகிறது, இரத்தத்தை பரிசுத்தமாக்குகிறது. கொப்புளங்கள், சொறிகள் மற்றும் முகப்பருக்கள் வராமல் தடுக்கிறது.

வாக்குலாக்ஸ் புதிய முறையில் ஆரோக்கியத்துடனிருக்க உதவுகிறது.

(இப்பொழுதுதான் முதன் முதலாக கிடைக்கிறது)

N ஒரு நிக்கொலஸ் தயாரிப்பு

VG-1 TAM.

# நவபாரதத்தின் அபிவிர்த்தியில் உங்களுக்கும் பங்கு உண்டு



**எங்களிடம்**
**பிக்ஸட் டெபாஸிட்டில் முதலீடு செய்து கணிசமான லாபம் பெறுங்கள்.**

எங்கள் பிக்ஸட் டிபாஸிட்டுகளின் "அசல் மற்றும் வட்டிக்கு" சர்க்கார் எவ்வித நிபந்தனையுமின்றி உத்திரவாதம் அளித்துள்ளனர். நாங்கள் அளிக்கும் வட்டி விவரம்:

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு | ... ... | 4¼ % |
| 2 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு | ... ... | 4½ % |
| 3 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு | ... ... | 4¾ % |
| 4 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு | ... ... | 5 % |
| 5 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு | ... ... | 5¼ % |

மற்ற விவரங்களுக்கு எழுதவும் — எஸ். ராஜரத்தினம், காரியதரிசி

## தி மதராஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிட்.

38, ஒயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14

## நாட்டின் வளமை
## தாயின் வளமையைப் பொறுத்திருக்கிறது



கர்ப்பிணி நிலையிலிருந்தாலும் அல்லது குழந்தைக்குப் பாலூட்டும் நிலையிலிருந்தாலும் சரி, ஒரு தாயாரின் ஆரோக்யமான போஷாக்கிற்கு வினோ - மால்ட் பெரிதும் உதவி செய்கிறது. அவசியமான போஷாக்குப் பொருட்சத்திகள் நிரம்பி யிருப்பதால், தாய்மைக் காலத்திலுள்ள பெண்மணிகளின் ஆரோக்ய வளர்ச்சிக்கு இன்றியமையாத உணவுப் பொருளாக விளங்குகிறது.

# VINO-MALT



பெங்கால் இம்யூனிட்டி கம்பெனி லிமிடெட்
இம்யூனிட்டி ஹவுஸ், கல்கத்தா-13



# தேவநாதன் திருத்தலம்

டி. எஸ். கோதண்டராமன்

**இம்மாதம் 21ந் தேதி வியாழக்கிழமை யன்று வடகலை வைணவ சமயாச்சாரியாரில் மூத்தவரான ஸ்ரீ வேதாந்த தேசிகரின் ஜன்ம நக்ஷத்திரம். இந்நன்னாளில் அவர் தம் திருவடிபட்டுப் புனிதமான திருவயிந்திரையைப் பற்றித் தெரிந்து மகிழ்வோமே!**

சமய வேறுபாடுகள் நிறைந்த நம் தமிழ் நாட்டில் பிரம்மா, விஷ்ணு, சிவன், உடையவர், தேசிகர், சரஸ்வதி, லட்சுமி யாவரையும் ஒரே சமயத்தில் ஒரே கோயிலில் தரிசனம் செய்ய வேண்டுமா? வில்வ தளத்தினால் அர்ச்சனை செய்யப்படுகிற விஷ்ணு கோவிலைக் காண வேண்டுமா?

ஊமையும் வாய் திறந்து பேசும் அருள் நல்கும் தெய்வத்தைத் தரிசனம் செய்ய வேணுமா? ஆகா! அமோகமாகத் தரிசனம் செய்யலாம். உடனே புறப்படுங்கள். தேவநாதனைப் போய் வணங்கலாம். அது யார் தேவநாதன் என்கிறீர்களா? வேறு யாருமில்லை. திருவஹீந்திரபுரத்தில் கோயில் கொண்டிருக்கும் சாட்சாத் தேவநாதப் பெருமானைத்தான் சொல்லுறேன் சுவாமி! உடனே புறப்படுங்கள் திருவஹீந்திரபுரத்துக்கு. தேவநாதப் பெருமானுடைய விமானத்திலேயே பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரையும் சேர்த்துப் பார்த்துவிடலாம். ஆனால் பாவம்! இப்படித்தம் விமானத்திலேயே பேதமில்லாமல் எல்லாக் கடவுளுக்கும் இடமளித்திருக்கும் தேவநாதப் பெருமானும் ஒரு காலத்தில் பேதத்துக்கு ஆளாகிக் கஷ்டப் பட்டவர்தான். அதைப் பற்றிப் பின்னால் சொல்கிறேன். இப்போது தேவநாதப் பெருமானைத் தரிசனம் செய்யப் போகலாம், வாருங்கள்.

விழுப்புரம், மாயூரம், இருப்புப் பாதைப் பிரிவில், திருப்பாதிரிப்புலியூர் புகை வண்டி நிலையத்துக்கு மேற்கே மூன்று கல் தொலைவில் இருக்கிறது திருவஹீந்திரபுரம். அரசாங்கத்து அகராதியிலோ இதற்குத் திருவந்திபுர மென்று பெயர். இருபுறமும் மரங்கள் அடர்ந்த நல்ல சாலையும் இந்த ஊருக்கு உண்டு. எப்போதோ செல்லும் பஸ்ஸை நம்பாமல் எப்போதும் செல்லக்கூடிய ஜட்காவிலேயே இத்தத் திருப்பதிக்குப் போகலாம். நீண்ட நடையைப் பொருட்படுத்தாதவர்கள் காலாற நடந்தே செல்லலாம். களைப்பே தோன்றாது.



திருவஹீந்திரபுரம் திருமலையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ஹயக்ரீவப் பெருமான்

அப்படிச் சிறிது களைப்புத் தோன்றினாலும் புதிதாகச் சிமெண்டுப் பூச்சுப் பூசப்பெற்ற கோவில் கோபுரத்தைக் கண்டதுமே களைப்புப் பறந்துவிடும். ஆறும் மலையும் சூழ, இயற்கை எழிலும் அமைதியும் நிரம்பிய திருக்கோவிலை நெருங்கியதும் உள்ளம் பெருவகை அடையும்.

கிழக்குத் தொடர்ச்சி மலையோடு சம்பந்தமுடைய ஒரு சிறு குன்று. ஔஷதகிரி என்றுபெயர். எதிரே, கெடில நதி என்று நாயன்மார்களாலும் கருட நதி என்று ஆழ்வார்களாலும் போற்றப்படும் ஆறு. இடையே



**ஸ்ரீ தேவநாதப் பெருமான்
மூலவரும் உத்ஸவரும்**

பல்வேறு திருநாமங்களோடு கூடிய தேவநாதன், 'ஹேமாப்ஜவல்லி, பார்க்கவி, அம்புருஹவாஸினி' என்ற திருநாமங்களையுடைய செங்கமலத் தாயாருடன் எழுந்தருளியிருக்கிறார். தாயாருக்குத் 'தரங்கமுக நந்தினி' என்ற பெயரும் உண்டு. இதை 'அலைவாய் உகந்த மகள்' என்று அந்தக் காலத்திலேயே தமிழாக்கிக் கல்லிலும் பொறித்திருக்கிறார்கள்.

திரிபுவன சக்கரவர்த்தியாகிய விக்கிரம சோழ மன்னன் மகா சிவ பக்தன். நாட்டிலுள்ள விஷ்ணு ஆலயங்களை யெல்லாம் வரிசையாக அழித்துக் கொண்டு திருவஹீந்திரபுரத்துக்கும் வந்து செங்கமலத் தாயாருடன் கூடிய தேவநாதனாக விளங்கும் பெருமானைக் கண்டான். 'தகர்த்தெறியுங்கள்' என்று உத்தரவு பிறப்பித்தான். உத்தரவு பிறந்த மறுகணமே சங்க, சக்ர, கதாதாரியாக நின்ற தேவநாதன் திருவுரு, நெற்றிக் கண்ணைக் காட்டிக் கொண்டு சிவனுருவமாக மாறியது. மன்னன் மயங்கினான்; 'இது பரமசிவனின் உருவமா? அல்லது விஷ்ணுவின் உருவமா?' என்பது புரியாமல்! அவன் மயக்கம் தீருமுன்பே இன்னொர் அதிசயமும் நிகழ்ந்தது. நெற்றிக் கண்ணுடன் காட்சி தந்த பெருமான், வலக்கரத்தில் செங்கமலத்தைத் தாங்கிக் கொண்டு பிரம்மாவாக மாறினார்! சோழ அரசனுக்குக் கோபம் பறந்தது. ஞானம் பிறந்தது. மூன்று தெய்வங்களும் ஒரே பொருளின் வெவ்வேறு தோற்றங்களே, அவற்றுள் பேதம் இல்லை என்பதை உணர்ந்தான். 'மூவராகிய மூர்த்தி'யை வணங்கிக் கோவிலுக்கு அநேக நிபந்தங்களும் விட்டுச் சென்றான். தம் கோவிலைக் காப்பாற்றிக் கொண்டதோடு எல்லா விஷ்ணு கோவில்களையும் தேவநாதப் பெருமான் காப்பாற்றி விட்டார்.

நடுநாட்டுத் திவ்ய தேசங்கள் இரண்டு என்பது வைணவர் நம்பிக்கை. ஒன்று, திருக்கோவிலூர். மற்றது, திருவஹீந்திரபுரம். முதல் திருப்பதியில் மிருகண்டு முனிவர், நாராயணனை ஆராதித்து மகிழ்ந்தார் என்றால் இரண்டாவது தலத்தில் அவருடைய குமாரர் மார்க்கண்டேயர், தேவநாதனை ஆராதித்துக் கர்ப்பக்கிருகத்துக்குள்ளேயே இடமும் பிடித்துக் கொண்டிருக்கிறார்.

காஞ்சிபுரத்தில் அவதரித்த ஸ்ரீ நிகமாந்த மகா தேசிகர் இந்தத் திருப்பதியில் கால் நூற்றாண்டுக்கும் மேலாகத் தங்கியிருந்தார் என்பது இதன் பெருமைகளில் ஒன்று. ஆறும் மலையும் உள்ள தலம் தவம் செய்வதற்குச் சாலவும் சிறந்தது. ஔஷதகிரியில், ஓர் அரச மரத்தின் கீழ் அமர்ந்து, கருட பகவானை நோக்கித் தவம் புரிந்தார், வேதாந்த தேசிகர். கருடன் நேரில் தோன்றி, ஸ்ரீ ஹயக்ரீவ மந்திரத்தை உபதேசித்ததுடன், அழகான ஹயக்ரீவ அர்ச்சாவதார மூர்த்தியையும் தந்தருளினார். ஸ்ரீ வேதாந்த தேசிகர் வழிபாடு செய்த அந்த ஹயக்ரீவர், சுமார் முக்கால் அடி உயரமுள்ள செப்புச் சிலை வடிவில், தேவநாதனுக்கு அருகே இன்றும் காட்சியளித்துக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ ஹயக்ரீவ மந்திரத்தின் மகிமையால் தேசிகர் எல்லாக் கலைகளிலும் பாரங்கதர் ஆனார். ஹயக்ரீவ மூர்த்தியுடன் அவர் தம் ஊருக்குப் புறப்பட்டதாகவும், தேவநாதன் அவரைத் திருவஹீந்திரபுரத்துக்கே திரும்பி வந்து தங்கும்படி அழைத்ததாகவும் சொல்லப்படுகிறது. 'மாதவி சண்பக முயங்கிய முல்லையங் கொடியாடச் செய்ய தாமரை செழும்பணை திகழ்தரு திருவஹீந்திரபுர'த்துக்கு மீண்டும் வந்து தெய்வ நாயகனின் விருப்பத்தின் வண்ணம், வெகு காலம் தங்கினார் தேசிகர். வேதாந்த தேசிகர் வெட்டிய கிணறு அவருடைய தோப்பு முதலியன இன்றும் இங்கு இருக்கின்றன. அவர் வாழ்ந்த இடம், 'திருமாளிகை மண்டபம்' என்ற பெயருடன் விளங்குகிறது.

'சர்வதந்திர ஸ்வதந்திரர்' என்ற சிறப்புப் பெயர் பெற்றவர் தேசிகர். இந்தப் பட்டத்தைப் பெறுவதற்கு முன் சிற்பி ஒருவன் இவரைப் பரீட்சிக்க விரும்பினான். தான் அமைக்கும் பீடத்தில் பொருந்தும்படியாக ஸ்ரீ தேசிகர், தம் சிலையை வடிக்க வேண்டும் என்று கோரினான். தெய்வத்தின் அருளால் சிற்பி விரும்பியபடியே செய்து முடித்தார், தேசிகர். அந்தச் சிலையின் ஒரு கன்னத்தைச் சீர்திருத்துவதற்காகச் சிற்பி ஓர் இரும்புத் தடியால் அடிக்கப் போக அச்சிலையில் செந்நீர் வடிந்ததாம். காயம்பட்ட வடு செப்புச்சிலையில் இன்றளவும் காணப்படுகிறது!

வேதாந்த தேசிகர் இராமானுஜருக்குப் பின் தோன்றிய வைஷ்ணவ ஆசாரியர்களில் மிகப் பெரியவர். (கி. பி. 1268 முதல் 1369 வரை) ஸ்ரீ ராமானுஜ சித்தாந்தங்களை விளக்கியும் அநுசரித்தும் அநேக கிரந்தங்கள் இயற்றியிருக்கிறார். இதனால் வடமொழியில் நான்கு காவியங்கள், ஒரு நாடகம், பதினான்கு வேதாந்த விளக்கங்கள், எட்டு விரிவுரைகள், முப்பத்திரண்டு 'ரகஸ்ய'ங்களும் தமிழில் இருபத்துநான்கு

பிரபந்தங்களும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. தமிழில், மும்மணிக் கோவை, நவரத்தினமாலை, பந்து, கழங்கு, அம்மானை, ஊசல், ஏசல் என்று பல வகைகளில் தேவநாதனைப் பாடிப் பரவியிருக்கிறார். தம்மை நாயகியாகவும், தேவநாதனை நாயகனாகவும் பாவித்து, வடமொழி நாடக லட்சணத்துக்கு ஒப்ப, பிராகிருத மொழியில் 'அச்யுத சதகம்' பாடியிருக்கிறார். புரட்டாசி மாதம் திருவோண நட்சத்திரத்தை யொட்டி நடைபெறும் பத்து நாள் தேசிகர் உற்சவத்தில் ஐந்தாம் திருநாளன்று மோகினி அலங்காரம் செய்விக்கப் பெறுகிறார் தேசிகர். பெருமான் எதிரே மோகினியை எழுந்தருளச் செய்து 'அச்யுத சதகம்' ஓதப்படுகிறது.



ஸ்ரீ கோதண்டராமப் பெருமான்

தேவநாதனின் ஆலயம் ஔஷதகிரி அடிவாரத்தில் கிழக்கு நோக்கி யிருக்கிறது. நுழைந்ததும், இடது புறத்தில் 'சேஷதீர்த்தம்' (கிணறு) இருக்கிறது. இந்தத் தீர்த்தம் உண்டானதற்கும் ஒரு கதை உண்டு. ஒரு முறை, அச்சுதனுக்குத் தாகவிடாய் உண்டாயிற்றாம். கருடாழ்வார் நீர் கொண்டு வரச் சென்றார். அருகிலுள்ள மலையில் தவம் செய்து கொண்டிருந்த முனிவர் ஒருவரது கமண்டலுவை உடைக்க நீர் பெருகி ஓடியது. அதற்குள் ஆதிசேடன் தரையைப் பிளந்து மிக அருகிலேயே நீரைக் கொண்டு வந்து விட்டார். தேவநாதன் அதை அருந்தி விடாய் தீர்ந்ததும் கருடன் வந்தார். இறைவன் எதிரே கைகட்டித் தலை குனிந்து நீர் கொண்டு வருவதில் தாமதம் ஆகிவிட்டதே என்று பயத்துடன் நின்றார். அந்தத் திருக்கோலத்திலேயே அவரை இன்றும் காணலாம். பக்தர்கள் சேஷ தீர்த்தத்தில், மிளகு, பால், உப்பு, வெல்லம் முதலியவற்றைக் காணிக்கையாகச் செலுத்துகிறார்கள். இதே நீரைக் கொண்டுதான் தினசரி நிவேதனங்கள் தயாரிக்கப்படுகின்றன.

கருடனால் கொண்டு வரப்பட்ட நீர் கருட நதியாகக் கோவிலின் மேற்கே ஓடுகிறது. வற்றாத நதி இது. இதைத் தவிர இங்கு பாயும் பிரம்ம தீர்த்தம் (கேப்பர் குவாரி சிறைக்கு அருகே இருக்கிறது) வைத்தியத்தைத் தெளிவிக்கும் தன்மையுடையது.

கைகட்டி நிற்கும் கருடாழ்வாரைத் தரிசித்துக் கொண்டு உள்ளே செல்லலாம். நின்ற திருக்கோலத்தில் தேவநாதனாக எழுந்தருளியிருக்கிறார் எம்பிரான் நாராயணன். மூலவராகிய மூர்த்தி என்ற நாமத்துக்கேற்ப, நெற்றிக் கண், பின் சடை, சங்க-சக்ர-கதை, செங்கமலம் ஆகியவற்றோடு காட்சி தரும் எழில் தோற்றம்.

இந்தத் தேவநாதன், திருப்பதி வேங்கடாசலபதிக்கு மூத்தவர் என்று சொல்லப்படுகிறார். ஆனால் வருமானத்தில் மட்டும் திருப்பதிப் பெருமான்தான் இவரைவிட இன்னும் பெரியவராகவே இருந்து கொண்டிருக்கிறார். திருப்பதிப் பிரார்த்தனையை இங்கேயேகூடச் செலுத்தலாமாம். வேங்கடாசலபதி அஷ்டோத்திரம்தான் இந்தச் சந்நிதியிலும் சொல்லப்படுகிறது. ஸ்ரீ வேதாந்த தேசிகர், வேங்கடமுடையானுடைய திருமணியின் அவதாரம் என்பது ஐதிகமாதலால், திருப்பதியைப் போல், இங்கும் கைமணி உபயோகப்படுத்தப்படுவதில்லை. திருப்பதி ஸ்ரீநிவாசப் பெருமான் கோவிலைப் போல், இந்தக் கோவிலின் விமானத்திலுடைய நான்கு மூலைகளிலும் சிங்க உருவமே இருக்கிறது. இந்தக் கோவிலின் விமானத்துக்குப் பெயர் சுத்த சத்வ விமானம்.

வெளிப்பிராகாரத்துக்கு வந்தால் தாயாரைச் சேவிக்கலாம். மூல ஸ்தானமும் உற்சவ மூர்த்தியும் அழகாகவே இருக்கின்றன. தேசிகர் மங்களாசாஸனம் செய்தபடி தாயார், 'காதள வோடிய கண்க'ளோடு கருணைபொழிந்த வண்ணம் அமர்ந்திருக்கிறார். தொடர்ந்து, வடக்குப்புறம் வந்தால், ஸ்ரீ ஆண்டாள், அமர்ந்த கோலத்தில் அஹீந்திரபுர நாதன், பள்ளிகொண்ட நிலையில் ரங்கநாதன், ஸ்ரீ வேதாந்த தேசிகர் திருச் சந்நிதிகளில் சேவை முடித்துக் கொள்ளுகிறோம். சற்றுத் தள்ளி வந்தால், ஸ்ரீ சீதாலக்ஷ்மண ஹனுமத் சமேத கோதண்டராமரைத் தரிசிக்கலாம். நாட்டிய சாஸ்திர இலக்கணப்படி செய்யப்பட்ட வார்ப்பாகிய ராமனின் திருவுருவம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது.

மேற்குப்புறத்தில் நூற்றுக்கால் மண்டபத்தைக் கொண்டுள்ள இந்தக் கோவிலுக்கு,



ஸ்ரீமங்கிகமாந்த மஹாதேசிகர்
உத்ஸவர்

மாறவர்மன், சுந்தரபாண்டியத் தேவன் என்னும் பாண்டிய அரசர்களும், ராஜ ராஜ தேவன், குலோத்துங்கசோழதேவன், விக்கிரம சோழன் ஆகிய சோழ மன்னர்களும் நிபந்தங்கள் விட்டிருக்கிறார்கள். ஸ்ரீ ஆண்டாள் சந்நிதிக்கு எதிரே மதிலிலுள்ள கல்வெட்டுக்கள் இவ் விவரங்களைத் தெரிவிக்கின்றன.

கோவிலுக்கு மேற்குப் புறத்திலும் ஒரு வாயில் உண்டு. சித்திரை மாதம் நடைபெறும் பத்து நாள் பிரம்மோற்சவத்தின் போது தேவநாதன் இந்த வாசல் வழியே, கருட நதிக் கரைக்கு எழுந்தருளுகிறார்.

இந்தத் திருப்பதியின் தல விருட்சம் வில்வ மரம். மார்கழி மாதத்திலும் நவராத்திரியிலும் தாயாருக்கு வில்வ தளத்தால் அர்ச்சனை நடைபெறுகிறது.

திருக்கோவிலூருக்குப் பின், திருமங்கை ஆழ்வார், இந்த ஊருக்கு வந்து,

மூவராகிய வொருவனை
    மூவுலகுண் டுமிழ்ந் தளந்தானை

தேவர் தானவர் சென்று சென்(று)
    இறைஞ்சத்தண் திருவயிந் திரபுரத்து

மேவு சோதியை வேல் வல
    வன் கலி கன்றிவிரித் துரைத்த

பாவு தண்டமிழ்ப் பத்திவை
    பாடிடப் பாவங்கள் பயிலாவே.

---

என்று மங்களாசாஸனம் அருளியிருக்கிறார்.

மேற்கு வாசல் வழியாக வெளியே வந்து திருமதிலை வலம் வந்தால் கிழக்குத் திசையில் ஔஷதகிரியைக் காண்கிறோம். வைஷ்ணவ ஸிம்மாஸனாதிபதிகள் எழுபத்து நான்கு பேர்களைக் குறிப்பிடும் வகையில், மலை ஏறுவதற்கு எழுபத்து நான்கு படிக்கட்டுகள் இருக்கின்றன. சிதிலமாகிக் கிடந்த இந்தப் படிகளை 'விப்கோ' ஸ்தாபனத்தார் சமீபத்தில் செப்பனிட்டிருக்கிறார்கள்.

மலையுச்சி, மைதானம் போல் இருக்கிறது: நடுவில், ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவர் கோவில். புதுப்பித்துக் கட்டப்பட்ட இந்தக் கோவிலுக்குச் சென்ற 24-8-61ல் கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. கல்கத்தா வர்த்தகர் ஸ்ரீ கோவிந்தலால் பங்கூர், சுமார் முப்பத்தையாயிரம் ரூபாய் செலவில் இந்தத் திருப்பணியைத் தாமே செய்திருக்கிறார்.

❦ ❦ ❦

முன்பொருகால், மது, கைடபன் என்ற இரண்டு கொடிய அசுரர்கள் மிகமிக பலம் வாய்ந்தவர்களாக இருந்ததால் மக்களையும் தேவர்களையும் புழுவென எண்ணி அலட்சியம் செய்து வந்தனர். அவர்கள் சர்வலோக பிதாவான பிரம்மாவையே எதிர்த்து அநாதியான வேதங்களைத் தங்களுக்கு உரியதாக்கிக் கொண்டு அதனால் தாங்களே படைப்புக் கடவுளாகிப் பிரம்மாவை அழித்து விடலாம் என்றும் எண்ணினார்கள்.

இந்தத் திட்டப்படி வேதங்களை அபகரித்துத் தம் அசுர மாயையினால் அவைகளை ஒரு பெண் குதிரை வடிவமாக்கிப் பாதாளத்தில் ஓர் இடத்தில் ஒளித்து வைத்தனர். வேதங்களை இழந்த பிரம்மா அவைகளை மீட்கும் வகையறியாமல் கருணைக் கடலான நாராயணன் திருவடிகளில் சரணடைந்தார். எம்பெருமானும் தமக்கே உரித்தான கிருபையினால், மது, கைடபர்களைத் தேடிப் பிடித்து அழித்தார். பிறகு அசுர மாயையால் பெண் குதிரையாக்கப்பட்ட வேதங்களை யெல்லாம் மீட்க எம்பெருமான் ஸ்ரீ ஹயக்ரீவனாகத் திருவடிவங்கொண்டு வேதங்களை மீட்டுக் கொண்டு வந்தார்.

அசுரர் கைப்பட்டுத் தம் பெருமை குன்றி விட்டதாகக் கருதிய வேதங்கள், தம்மைப் புனிதமாக்குமாறு பரந்தாமனை வேண்டி நின்றன. குதிரையின் முகமும் வாயும் மிகப்புனிதமானவை என்றும் அங்கே ஸ்ரீ மகாலக்ஷ்மியே வாசம் செய்வதாகவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே பாற்கடற் பள்ளியான், பால்வண்ணச் சங்கமும், பைம்பொற்கடராழியும் ஏந்திப் பண்ணும் மறை மற்றோர் கையில் தரித்து, ஞான முத்திரை வலக்கரம் வகித்து பங்கயச் செல்வியை அணைந்த கோலத்துடன், பிரம்மாவுக்கு வேதங்களை மறுபடியும் உபதேசித்தருளினதாகப் புராணம் கூறுகிறது.

ஹயக்ரீவர் கோவில் கொண்டுள்ள க்ஷேத்திரங்களில் மிகச் சிறப்புடையவை இரண்டே. அவை மைசூரிலுள்ள பரகால மடமும், திருவஹீந்திரபுரமும் ஆகும். ஔஷதகிரியில், ஸ்ரீ லக்ஷ்மீ ஹயக்ரீவர், ஞான முத்திரையோடு விளங்குகிறார். எல்லாக் கலைகளுக்கும் அதிபதி ஸ்ரீ ஹயக்ரீவனே. சரஸ்வதியே இவரை வழிபட்டதால்தான் வாக்தேவதையாக விளங்குகிறாள் என்பது புராண வரலாறு. இச் சந்நிதியில் ஊமையும் வாய் திறந்து பேசும் போது வாய் படைத்த நாம், ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்தோத்திரத்தைப் பாடித் துதித்து, ஆனந்தம் அடைவோமே.

# நிச்சய தாம்பூலம்

மாம்பழக் கன்னங்களிலே நாணம் படர, மான் விழிகளிலே மகிழ்வு சுடர் விடுகின்றது. நிச்சய தாம்பூலமானது. பேச்சு வார்த்தைகள் முடிந்தன. பேரின்பத் திருமணத்திற்கு அஸ்திவாரம் போட்டாயிற்று. புன்னகை பூத்து நிற்கின்ற அவளுக்காகப் புதியதோர் உலகம் காத்து இருக்கின்றது.

அவளுடைய பெற்றோர், அருமையான திட்டம் வகுத்து இருந்தனர், திருமணத்திற்காக! மணத்திற்கான பணத்திற்கு வழி செய்தது, ஒரு திருமண என்டௌமென்ட் பாலிசி!

ஆயுள் இன்சூரன்சு வருங்காலத்திற்காக - உங்களுக்கும், உங்கள் குடும்பத்திற்கும்! குடும்பப் பாதுகாப்பிற்கு, குறைவற்ற அடித்தளம் அதுவே! வருங்காலம் பற்றிய கவலைகளை அகற்ற வழி அமைக்க உதவுகிறது அது. ஒரு திட்டத்திற்கு, உற்ற நண்பர்போல் உதவ முன் நிற்கும் ஒரு ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) நாடுவீர்.



## ஆயுள் இன்சூரன்சு

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை

DJ/LIC/U/25




ஆழ்கிணறு பம்பிங் எங்கள் விசேஷ அம்சம்

வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் ப்ரை. லிட்.,

330, தம்பு செட்டித் தெரு, சென்னை—1



அட்டைப் படக் கதை

# குறை அறியாத நெஞ்சம்

கு. வேங்கடரமணி

மணிக் கூண்டையும் பெரிய தபாலாபீசையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருந்த பகமையை நோக்கி மகா மகக் குளத்தை ஒட்டிய சாலையில் வேகமாக நடந்து கொண்டிருந்தேன். கொளுத்தும் வெய்யிலில் மனம் போன படியெல்லாம் சுற்றியலைந்த களைப்பு என்னை விரட்டியடித்தது. கொஞ்ச நேரமாவது நிழலடியில் ஒதுங்கி நிற்க மனம் தவித்தது. கடைசியில் ஒரு வழியாய்த் தபாலாபீசை நெருங்கி விட்டேன். சாலையின் எதிர் வரிசையில் என்னை அழைத்த அந்தப் பச்சை மரங்களின் அடைக்கலத்தை நான் இன்னும் சில அடிகளில் அடைந்திருப்பேன். ஆனால் அதற்குள் ஒற்றை மாட்டு வண்டியொன்று குறுக்கே ஓடி வந்தது. நான் முன்னால் வைக்கப் போன காலைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு அப்படியே நின்று விட்டேன்.

கொஞ்ச நேரத்தில் எனக்கு வழி விட்டு அந்த வண்டி நகர்ந்து விடும் என்று எதிர் பார்த்த நான் ஏமாந்தேன். வண்டி நின்றது. நான் ஒதுங்கி அதன் பின்புறமாகச் சுற்றிக் கொண்டு நடந்தேன்.

''மணி!''

என்னை அழைத்த குரலைக் கேட்டுத் திரும்பியவன், வண்டிக்குள்ளிருந்து எட்டிப் பார்த்த, தெரிந்த முகத்தைக் கண்டு அயர்ந்து போனேன். ஆறு மாதங்களுக்குப் பிறகு இன்றைக்கு மீண்டும் கும்பகோணம் வந்திருப்பவனுக்கு இது எதிர்பாராத சந்திப்புத்தான்.

மீனாட்சி மாமியின் முகம் வயதின் காரணத்தை மட்டும் காட்டாமல், கவலையின் படிவையும் சேர்த்துக் கொண்டு சுருங்கித் தோன்றுவதைக் கண்டேன்.

''மாமி!''

நிலைத்துவிட்ட உடலைக் கலைத்துக் கொண்டு கலைந்துபோன எண்ணங்களில் தடுமாறிய மனத்தை நிலைக்கச் செய்து வண்டியின் அருகில் சென்றேன். அந்த அவசரத்தில் எனது வலது தோளிலிருந்து மேல் துண்டு நழுவியது; பழக்கப்பட்ட எனது கைகள் தாமதிக்காமல் அதை எடுத்துச் சரி செய்தன.

மீனாட்சி மாமி என்னையே இமையாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். எனக்கும் உடனே பேச்சு வரவில்லை. ஆனால் வண்டிக்குள் பார்வை ஒரு கணம் தாவிவிட்டு மீண்டது; அங்கே அவள் — மாலதி — அமர்ந்திருந்தாள்!

''எங்காவது காரியமாகப் போகிறாயா மணி?'' என்று கேட்டாள் மீனாட்சி மாமி.

''ஊஹூம்! ஒரு வேலையும் இல்லை. இத்தனை நாட்கள் கழித்து ஏதோ ஒரு எண்ணம்—கும்பகோணத்துக்கு வர வேண்டுமென்று தோன்றியது. புறப்பட்டு வந்தேன். ஊரைச் சுற்றி விட்டு பண்ணைக்குப் போகலாமென்று வந்து கொண்டிருந்தேன்....''

''அவசரம் இல்லையே? அப்படியானால் வண்டியில் ஏறிக் கொள்ளேன். எங்களுக்கும் கொஞ்சநேரம் ஒரு துணையாச்சு.''

''அதற்கென்ன? உடனே ஊருக்குப் போய் என்ன செய்துவிடப் போகிறேன்? மெதுவாகப் போய்க் கொள்கிறேன்.''

வலது தோளிலிருந்து மேல்துண்டு நழுவி விடாமல் எச்சரிக்கையோடு நானும் வண்டிக்குள் ஏறி அமர்ந்து கொள்கிறேன். ஒற்றை மாட்டு வண்டிகளின் சுபாவத்துக்கு மாறுபடாமல் அந்த வண்டியும் புறப்பட்டு ஆடி அசைந்து கொண்டே தொடர்ந்து நகர்கிறது. 'இதோ இந்த வண்டிக்குள்தான் மிக அருகில் மாலதியும் இருக்கிறாள்' என்று மனக் குரல் ஓயாமல் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. ஆனால் அதைக் கேட்டும் கேட்காதவன்போல நான் இருந்துவிட முயற்சி செய்கிறேன். ஆனால் மனம் ஓயவில்லை.

ஆறு மாதங்களுக்குப் பிறகு நிகழும் இந்தச் சந்திப்பில் யார் முதலில் பேசுவது? நானா, மாலதியா? மீனாட்சி மாமி கூட என்னை அழைத்து வண்டியில் உட்காரச் சொன்ன

பிறகு வாயை மூடிக் கொண்டுதான் உட்கார்ந்திருந்தாள்:

வண்டி ஊர்ந்து கொண்டிருந்தது:

''மணி! சௌக்கியமாய் இருக்கிறீர்களா?'' கடைசியில் மாலதியே பேசி விட்டாள். நான் திரும்பித் தலையை அசைத்தேன்.

''சுகமாய்த்தான் இருக்கிறேன். மாசம் ஒரு நடை டாக்டர் வந்து சோதித்துப் பார்த்து விட்டுப் போகிறார். உடம்பு சரியாக இருக்கிறதாகத்தான் சொல்கிறார்.''

இவ்வளவு தூரமும் பேசி விட்டு நான் நாக்கைக் கடித்துக் கொண்டேன். இந்த வார்த்தைகளோடு என் ஏக்கத்தையும் அவள் முன்னால் கொட்டி விட்டேன்.

நான் மறுபடியும் மாலதியின் பக்கம் திரும்பியபோது அவள் என்மீது பதிந்திருந்த கண்களைப் பிரித்து மேலாடையின் முனையில் ஒற்றிக்கொள்வதைக் கவனித்தேன்.

இதே போல் நான் இவளை எதிர்பாராது சந்தித்திருக்கிறேன். அதே போல வேறொரு சமயம் எங்கள் கண்கள் ஒன்றையொன்று சந்தித்தபோது அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்கிறாள். ஆனால் அந் நிகழ்ச்சிகளும் இதுவும் ஒன்றாகுமோ? வாழ்வில் ஒரு நாளைப் போலவா மற்றொரு நாளும் இருக்கிறது?

'மாலதி!' நான் எனக்குள் அவளை அழைத்தேன். ஆறு மாதங்களுக்கு முந்திய — நினைவில் அழியாத பதிவாக நிற்கும்—நாட்கள் வந்தன. மாலதியும் என் முன் வந்து நின்றாள்.

**ப**ரீட்சை முடிந்து ஊர் திரும்பிய பிறகு, கிராமத்தில் போகாத பொழுதைக் கழிக்க நான் வழி தேட வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. கும்பகோணத்தின் சுறுசுறுப்பான வாழ்க்கை என்னை அழைத்தது. நான் ஒரு சைக்கிள் வாங்குவது என்று முடிவு பண்ணி அம்மாவின் ஆயிரம் தடைகளுக்குச் சமாதானங்கள் சொல்லி அதை நிறைவேற்றியும் கொண்டேன். தினம் மாலை நான்கு மணிக்குக் 'கணகண' வென்று இனிய மணியோசையை எழுப்பிக் கொண்டு சைக்கிளில் ஏறி உட்கார்ந்து விடுவேன். உமையாள்புரத்துக்கும் கும்பகோணத்துக்கும் நடுவில் வளைந்து வளைந்து செல்லும் ஏழுமைல் நீளச் சாலையை இருபதே நிமிஷங்களில் கடந்து விடுவேன். மடத்துத் தெரு தேரோட்டனில் சிற்றுண்டி. பெரிய தெருவையும் கடைத் தெருவையும் ஒரு சுற்று. சுற்றிப் புதுப்பாலத்தைக் கடந்து மேலக் காவேரியையும் தாண்டித் திருவையாற்றுச் சாலையிலே என்னுடைய சைக்கிள் பறந்து கொண்டிருக்கும்.

மூன்று நாட்கள் இதே போலக் கழித்த பிறகு, நான்காவது நாள் நான் சைக்கிளை வெளித் தாழ்வாரத்திலிருந்து தெருவில் இறக்கி வைத்த நேரம் மீனாட்சி மாமி கையில் சின்னப் பையோடு அவசரமாக வந்து, ''மணி! கும்பகோணத்துக்குத்தானே போகிறே? எனக்கு ஒரு உபகாரம் செய்ய முடியுமா?'' என்று கேட்டாள்.

''தாராளமாய்ச் செய்கிறேன்: சொல்லுங்கள், என்ன செய்ய வேண்டும்?''

''கடலங்குடித் தெருவில் என் பேத்தி இருக்கிறாள். அவள்கிட்டே இந்தப் பையைக் கொடுத்து விடணும்.''

''உங்க பேத்தியை நான் பார்த்ததே கிடையாதே! அவள் பேர்கூடத் தெரியாது.''

''சொல்ல மறந்து விட்டேனே! மாலதி என்று பெயர். இந்த வருஷம் பத்தாவது பரீட்சை எழுதி யிருக்கிறாள்.''

கூடவே வீட்டு எண்ணையும் அடையாளத்தையும் சொன்னாள் மீனாட்சி மாமி. மாலதியின் தந்தை ரயிலில் பரிசோதகராக வேலை பார்ப்பதையும், அவளுடைய அழகையும் சமர்த்தையும் பற்றிக்கூட மாமி தெரிவித்தாள். அந்தப் பேத்திக்கு ஒரு வாரமாய் இருமுகிறதாம். கும்பகோணத்தில் நல்லதாக நெய் கிடைக்கவில்லையென்று வெண்ணெய் வாங்கிக் காய்ச்சிக் கொடுத்தனுப்புகிறாள் பாட்டி.

அந்தத் தெருவை அடைந்து மாலதியின் வீட்டுக் கதவைத் தட்டுகிற வரை இது ஒரு சாதாரண நிகழ்ச்சி யென்றே நான் எண்ணியிருந்தேன். ஆனால் திறந்த கதவின் இடைவெளி வழியே தெரிந்த முகமும், அந்த முகத்தில் 'யார் நீங்கள்' என்று கேட்கும் கேள்வியும் ஓர் அசாதாரணமான நிகழ்ச்சி இது என்று சொல்லிக் கொண்டே யிருந்தன. பின்னால் பின்னலில் மறைந்திருந்த மல்லிகைச் சரத்தின் மணம் முன் வந்து கமழ, தாழம்பூ மடலின் வண்ணத்தின் நடுவில் சுடரிட்ட கருமணிகளில் அற்புத ஒளியொன்று பிறந்து என் மேலெல்லாம் சிந்தியது.



''மீனாட்சி மாமி கொடுத்து அனுப்பினாள்'' என்று பையை நீட்டினேன்.

''பாட்டியா கொடுத்தாள்?'' என்று கேட்டுக்கொண்டே பெற்றுக் கொண்டாள் அவள்.

இவள்தான் மாலதி! — மீனாட்சி மாமியின் அழகும் சமர்த்தும் நிறைந்த பேத்தி.

''உள்ளே வாருங்களேன்.''

''வேண்டாம். நான் போகிறேன். மாமிக்கு ஏதாவது சேதி சொல்லணுமா?''

''போகலாம் வாருங்கள். உங்களை இப்படியே வாசற்படியோடு திருப்பி அனுப்பிவிட்டேன் என்று தெரிந்தால் பாட்டி சண்டைக்கு வந்து விடுவாள்.''

என்னை ஊஞ்சலில் உட்காரச் சொல்லிவிட்டு மாலதி சமையலறைக்குள் சென்றாள். அவள் அப்பா இன்னும் வேலையிலிருந்து திரும்பவில்லையாம். அம்மா கோவிலுக்குப் போயிருக்கிறாளாம். 'இதோ வந்துவிடுவாள்' என்ற மாலதியின் வார்த்தைகளை ஆதாரமாகக் கொண்டு அமர்ந்திருந்தேன்.

காப்பிப் பாத்திரத்தைக் கொண்டு வந்து எதிரில் வைத்து விட்டு மாலதி தாத்தாவையும் பாட்டியையும் பற்றி விசாரித்தாள். எல்லாவற்றுக்கும் தலையசைத்துக் கொண்டு நான் எத்தனை நேரம் வாய்மூடி உட்கார்ந்திருப்பது?

''இருமல் இப்பொழுது எப்படி இருக்கிறது?'' என்று கேட்டு வைத்தேன்.

''இருமலா, யாருக்கு?''

''உனக்குத்தான். மீனாட்சி மாமி சொன்னதாக ஞாபகம். அதற்குத்தானே என்கிட்ட நெய் கொடுத்தனுப்பினாள்!''

மாலதி மெல்லிய, இனிமையான குரலில் சிரித்தாள். அப்புறம் தொண்டையைச் சற்றே கனைத்துவிட்டு இருமினாள். அதுகூட அற்புதமாய், செவியால் உள்ளத்தில் பாயும் அமுதமாக இருக்கக் கண்டேன்.

''பாட்டிக்கு என் குரலில் அத்தனை அக்கறை. எங்கே என் பாட்டு கெட்டுப் போய் விடுமோ என்று கவலைப்பட்டு அனுப்பியிருக்கிறாள்.''

''உனக்குப் பாடத் தெரியுமா?''

மாலதி மூலையில் வைக்கப்பட்டிருந்த தம்பூரைக் கட்டிக் காட்டினாள்.

''எனக்குப் பாட்டென்றால் உயிர். என்றைக்கு உன் பாட்டைக் கேட்கச் சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறதோ?'' அவள் இதை எந்த அர்த்தத்தோடு ஏற்றுக்கொண்டாளோ, நாணத்தோடு முகம் கவிழ்ந்தாள்.

''நேரமாகிவிட்டது. நான் வருகிறேன்.''

''அடுத்த நடை கும்பகோணம் வரும்போது வாருங்கள். அப்பாவுக்குச் சங்கீத ரசிகர் என்றால் ரொம்பவும் பிடிக்கும்.''

''சரி. மீனாட்சி மாமி சொன்னாள், சாப்பிடும்போது தவறாமல் இரண்டு கரண்டி நெய் விட்டுக் கொள்ளணுமாம்.''

''அப்படியே செய்கிறேன் என்று ஞாபகமாகப் பாட்டியிடம் சொல்லுங்கள்.''

நான் தலையசைப்பால் விடை பெற்றுக் கொண்டேன். தெருவை அடைந்து சைக்கிளில் ஏறி அமர்ந்ததும் கதவுக்குப் பின்னால் தயங்கும் அந்த உருவை மீண்டும் 'கண் குளிர'க் கண்டேன்.

மீனாட்சி மாமி செல்லாமல் என் மூலம் பண்டங்களை அடிக்கடி கும்பகோணம் அனுப்பிக் கொண்டிருந்தாள். மாலதியும் பட்டிக்காட்டில் கிடைக்காத சாமான்களை வாங்கி அனுப்பினாள் பாட்டிக்கு. நானும் என் சைக்கிளும் சளைக்காமல் அவைகளை இடம் மாற்றும் பணியில் ஈடுபட்டோம். மாலதியின் பெற்றோர்களிடம் நான் அளவிலாத அன்பையும் மதிப்பையும் பெற்றேன்.

அன்றைக்கு நான் அவசரமாகக் கடலங்குடித் தெருவுக்குள் நுழைந்து மாலதியின் வீட்டு வாசலில் நின்று சைக்கிள் மணியைக் 'கண-கண'வென்று முழக்கினேன்.

மாலதி வேகமாகக் கதவைத் திறந்தாள்.

''மாலதி!''



"வாருங்கள். ஏது இன்றைக்குச் சீக்கிரமா வீட்டை விட்டுக் கிளம்பி விட்டீர்களோ?"

"ஆமாம். ஒரு நல்ல சேதி! எனக்கு முதல் வகுப்பில் பரீட்சை தேறி விட்டது."

"அப்படியா? வாருங்கள். நானும் உங்களுக்கு ஒரு சேதி சொல்லப் போறேன். ஆனால் அது உங்களுக்குப் பிடிக்குமோ, என்னவோ?"

எனக்கு ஒரு கண நேரம் கண்களில் பூச்சி பறந்தது. ஒருகால் அப்படியும் இருக்குமோ? ஆனால் பேத்திக்குக் கல்யாணமென்றால் மீனாட்சி மாமிக்குத் தெரியாமலா இருக்கும்? மாமி என்னிடம் சொல்லி யிருப்பாளே?

மாலதியின் தாயார் என்னைப் பார்த்ததும், "மணி! இத்தனை நாட்கள் எங்களுக்கு வெளியூரில் இருக்கிறதாகவே தோன்றவில்லை. நாங்களும் உமையாள்புரத்தில் இருக்கிறதாகவே நினைத்துக் கொண்டிருந்தோம். தினம் நீ வந்து ஊர்ச் சேதி சொல்லிக் கொண்டிருந்தாய்..." என்று எதையோ சொல்லவந்தாள்.

"அதற்குமேல் இப்போது சொல்லாதே, அம்மா!" என்று குறுக்கிட்டாள் மாலதி.

நான் விழித்தேன்.

"சேதி இதுதான். அப்பாவுக்கு இந்த ஊரைவிட்டு மாற்றலாகி விட்டது. அவர் நாளைக்குப் புறப்படுகிறார். நானும் அம்மாவும்கூட நாளைக்கு இங்கிருந்து புறப்படப் போகிறோம்."

"எந்த ஊருக்கு மாற்றல்?"

நான் நினைவழிந்து உள்ளத்தில் உறைக்காமலே இதைக் கேட்டேன். மாலதி ஏதோ ஓர் ஊரின் பெயரைச் சொல்லி யிருப்பாள். நான் அதைக் கேட்டு உணர்ந்து கொள்ளும் நிலையில் இல்லை.

அன்றைக்கு விடைபெற்றுக் கொண்டு திரும்பும்போது கும்பகோணமே எனக்கு இனிமேல் தினம் வந்து பார்க்க வேண்டிய இடமாகத் தோன்றவில்லை.

மறுநாள் பிற்பகலில் என் சைக்கிள் சோம்பிக் கிடந்தது. ஒரு மாதத்துக்கு மேல் தவறாமல் கடைப்பிடித்த வழக்கத்தை மறந்து உட்கார்ந்திருந்தேன் நான். 'கடைசியாக இன்றைக்கு மட்டும் போய் மாலதியைப் பார்த்து வந்து விடலாமா?' என்ற எண்ணம் நெஞ்சில் பிறந்ததுமே மறைந்து போயிற்று.

மாலதி அந்தச் செய்தியைச் சொல்லும் போது கொஞ்சங்கூட வருத்தப்பட்டதாகத் தெரியவில்லையே! என் எண்ணத்தின் பிரதிபலிப்பு கொஞ்சங்கூட அவளிடம் இருந்ததாகத் தெரியவில்லையே!

மீனாட்சி மாமியை வெளியிலேயே காணோம்.

மாலையில் குளத்தங்கரை மதகடியில் உட்கார்ந்திருந்தேன். பள்ளிக்கூட மணி யடித்ததும் மாணவர்களின் அலையடித்து ஓய்ந்தது. சாலையில் ஒவ்வொன்றாய் எத்தனையோ சைக்கிள்கள் கிழக்கேயும் மேற்கேயும் மாறி மாறிச் சென்று கொண்டிருந்தன. கும்பகோணத்திலிருந்து திருவையாற்றுக்குச் செல்லும் பஸ் ஒன்று வந்து நின்றது. நான் அலட்சியமாய்த் திரும்பினேன்.

முகத்தில் குமிழியிடும் சிரிப்போடு மாலதி இறங்கினாள். பின்னால் அவளுடைய அம்மாவும் சாமான்களுடன் இறங்கினாள். திகைப்பில் இருந்து விடுபட்டு நான் அவர்களுக்கு உதவி செய்யப் போனேன்.

"ஏமாந்து போனீர்களா?" என்று என் காதருகில் கேட்டாள் மாலதி.

"நீங்கள் அவசரப்பட்டுக்கொண்டு முழுதும் கேட்காமல் வந்து விட்டீர்கள். அப்பா புது ஊருக்குப் போய் விட்டார். நாங்களும் தனியாக இருப்பானேன் என்று இங்கே வந்து விட்டோம். இன்னும் ஒரு மாசமோ, இரண்டு மாசமோ புதிய இடத்தில் வீடு கிடைக்கிற வரையில் உமையாள்புரத்தில்தான் வாசம்."

இன்றைய சந்திப்புத்தான் எனக்கு இனித்தது. வரப்போகும் பிரிவை நான் மறந்தேன்.

"எனக்குப் பிடித்தமான சேதிதான், மாலதி!" என்று அவளுக்குமட்டும் கேட்கும் குரலில் சொன்னேன்.

வண்டி பெரிய தெருவுக்குள் நுழைந்து ஓடிக் கொண்டிருந்தது. திடீரென்று என் நினைவு நின்று மீளும்போது சூழ்ந்திருந்த மௌனத்தை உணர்ந்து திகைத்தேன்.

"மாமி, நீங்கள் எதுவுமே சொல்லவில்லையே?"

"மாலதிக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது. அதாவது இவளை வந்து பார்த்து விட்டுப் போனார்கள். பெண்ணைப் பிடித்திருக்கிறது என்று எழுதி விட்டார்கள். மேலே பேசிக் கல்யாணத்துக்கு நாள் நிச்சயம் பண்ண வேண்டும்."

"இதைச் சொல்லவா மாமி இத்தனை நேரம்? பையன் எந்த ஊர், என்ன வேலையில் இருக்கிறான்?"

"மணி உன்னைப் பார்த்ததும் உடனே கூப்பிட்டு எல்லாவற்றையும் சொல்லி விடணும் என்றுதான் நினைத்தேன். ஆனால் உன்னிடமே இதை எப்படிச் சொல்கிறது என்று புரியவில்லை. நான் எத்தனையோ ஆசைப்பட்டேன். ஆனால் நடக்கிறதுதானே நடக்கும்?"

ஆறு மாதங்களுக்கு முன்னால் மாலதியிடம் பேசிய வார்த்தைகள் இன்னமும் எனக்கு மறக்கவில்லை.

"மாலதி! எனக்காக-என் மன நிம்மதிக்காகத்தான் சொல்கிறேன். நீ என்னை மறந்து விடு. என்னைவிடச் சிறந்தவனாகத்தான் உனக்கு மாலையிடுகிறவன் இருக்கவேண்டும்."

அவளும் இதை மறந்திருக்க மாட்டாள். நான் திரும்பி அவளைப் பார்த்தேன். அவளோ வெளிப்புறக் காட்சிகளைப் பார்ப்பதுபோலப் பாவனை செய்து கொண்டிருந்தாள். அவள் மனத்தில் என்னென்ன எண்ணங்கள் ஓடிக் கொண்டிருக்கின்றனவோ?

என் மனம் சரியத் தொடங்கியதை நான் உணர்ந்தேன். மாலதியின் வாழ்வு குறைவில்லாததாய் இருக்க வேண்டும் என்று ஆறு மாதங்களுக்கு முன்னால் நான் கொண்ட உறுதியை நினைத்துக்கொண்டேன். எனக்கு அருகில் அழகின் உருவமாய் உட்கார்ந்திருக்கும் மாலதியைப் பற்றிய நினைப்பிலேயே, என் இதயத்தில் பிறக்கும் பெருமூச்சை அடக்கிக் கொண்டேன்.

'....மாலதி நன்றாய் இருக்க வேண்டும். இவள் வாழ்வு இன்பமாய் அமையவேண்டும்.' அந்த நினைப்போடு கேட்டேன்: "மாமி! அப்புறம் சொல்லுங்கள். மாலதிக்குப் பொருத்தமான வரன்தானே?"

மீனாட்சி மாமியோ தயங்கிவிட்டுத்தான் பதில் சொன்னாள். "நல்ல இடந்தான். பையனும் பார்க்க லட்சணமாய் இருக்கிறான். மாசம் இருநூறு ரூபாய் சம்பாதிக்கிறான். இத்தனை வசதியான இடம் கிடைக்கும் என்று நினைக்கவே இல்லே. ஆனால்......"

"ஏன் மாமி?"

"இந்தக் கல்யாணத்தை நடத்த வேண்டியவர் இல்லே. மாலதியின் அப்பாவைத்தான் சொல்லிறேன்."

"என்ன மாமி இது? எனக்குப் புரியலே இல்லையே!"

'ஆறு மாசத்துக்கு முன்னால் இவள் அப்பாவுக்கு மாற்றல் ஆச்சே ஞாபகம் இருக்கா? ஜாகை வைக்கிறதுக்காக நாங்கள் இவளையும் இவள் அம்மாவையும் அழைத்துப் போனோமே-அதுவரை உனக்குத் தெரியும். அப்புறம் உமையாள்புரத்துக்கே திரும்பி வரவில்லே....'

'ஆமாம், இன்னிக்குத் திடீரென்று உங்களைப் பார்த்ததுமே கேட்கணும் என்று நினைத்தேன். இப்போது எந்த ஊரில் இருக்கிறீர்கள்? ஏன் உமையாள்புரத்துக்குப் பிறகு வரவே யில்லே?"

"அதை உன்னிடம் எப்படிச் சொல்கிறது என்றே புரியவில்லே. நாங்கள் எல்லாரும் போய் முழுசாக ஒரு மாசம் இருந்திருக்க மாட்டோம். ஏதோ விஷ ஜுரமாம் நாலே நாட்களில் இவள் அப்பாவைக் கொண்டு போய்விட்டது..."

மேலே எதுவும் பேசத் தோன்றவில்லே. மூவரும் ஆளுக்கு ஒரு பக்கம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தோம். இந்த நிலே சகிக்க முடியாததாகப் போனபிறகு மீனாட்சி மாமியே மறுபடியும் பேச ஆரம்பித்தாள்.

"திரும்பி வந்தோம். ஆனால் உமையாள்புரத்துக்கு வர இவள் தாத்தாவுக்கு இஷ்டமே யில்லே. எல்லாருக்குமே அது கசப்பாக இருந்தது. திருவிடமருதூரில் இருக்கிறோம். எத்தனை பெரிய துக்கமாக இருந்தாலும் அதையே எத்தனை நாட்கள் நினைத்துக்கொண்டிருக்க முடியும்? நடந்ததை நினைத்து,நடக்க வேண்டியதை மறந்துவிட முடியுமா? மாலதியின் கல்யாணம் ஒரு பெரிய கவலையாகக் காத்துக் கொண்டிருக்கிறதே! இப்போது அதற்கு நல்ல வேளையாய் ஒரு வழி பிறந்தது. இவள் கல்யாணம் நிச்சயமானால் சுவாமி மலைக்கு வருகிறதாக வேண்டிக் கொண்டிருந்தேன். அதற்காகத்தான் இவளையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டேன். இங்கே கடைத் தெருவில் கொஞ்சம் வேலேயிருந்தது. இறங்கி வண்டி வைத்துக்கொண்டு வந்தோம்...."

வண்டி கடைத்தெரு முனை திரும்பியது.

"இங்கேயே இறங்கிக்கொள்ளலாம்பாட்டி. சுவாமிமலைக்குச் சக்கரப் படித்துறையில் பஸ் ஏறிக் கொள்ளலாம்" என்றாள் மாலதி.

எல்லாரும் இறங்கியதும் வண்டி நகர்ந்தது. மீனாட்சி மாமி ஒரு துணிக் கடைக்குள் நுழைந்தாள்.

"நீங்களும் வாருங்களேன்."

எனக்கு முன்னால் நடந்த மாலதி கடை வாசலிலேயே தயங்கிய என்னைப் பார்த்து விட்டு அழைத்தாள். நானும் கடைக்குள் அடியெடுத்து வைக்கப்போன சமயம். வலது

பக்கத் தோளில் இருந்து மேல் துண்டு நழுவியது. அவசரமாக அதைச் சரி செய்யும் நேரத்தில் என் மனம் பின்வாங்கி விட்டது.

''வேண்டாம் மாலதி. நான் வந்து என்ன செய்யப் போகிறேன்? கடைக்குள்ளே அடைபட்டுக் கிடக்கிற நேரத்தில் இப்படிக் கொஞ்ச தூரம் நடந்து விட்டு வருகிறேன்.''

திரும்பி ஒரு கணம் என்னையே இமைக்காமல் பார்த்து விட்டு, 'சரி'-என்று தலையசைத்தாள் அவள். நான் நகர்ந்தேன். உடனே என் சிந்தனை சற்றுப் பின்னோக்கி நகர்ந்தது. மாலதியை நான் அடைய முடியாமற் செய்துவிட்ட நிகழ்ச்சி மனக்கண் முன் வந்தது.

பல நாட்களுக்குப் பிறகு நான் மறுபடியும் கும்பகோணத்துக்குப் புறப்பட்டேன். முன்பு மாலதியைப் பார்க்கச் செல்லும் உற்சாகத்தோடு சென்றவன், அன்றைக்கு அவளுக்கு வேண்டிய சாமான்கள் சிலவற்றை வாங்கி வருவதற்காக மகிழ்வோடு சென்றேன். அந்த மனமோகன நினைப்போடு திரும்பிக்கொண்டிருந்த சமயம். ஊரின் எல்லையும் நெருங்கி விட்டது. அப்போது-

பின்னால் இருந்து ஒரு காரின் குழல் ஒலியும், முன்னால் சாலையோரத்துக்கு ஒதுங்க மறுத்த கட்டைமாட்டு வண்டியின் மாடுகளின் காட்சியும் ஒரே சமயத்தில் என்னைத் தாக்கின. நான் தவித்துத் தடுமாறிச் சமாளிக்க முயன்றேன். சைக்கிள் ஒரு பக்கம், நான் ஒரு பக்கமாகச் சாய்ந்தோம். அதோடு என் நினைவும் என்னை விட்டு விலகி ஓடியது.

பிறகு கும்பகோணத்தில் டாக்டர் வீட்டில் கண் விழித்தேன். ஆஸ்பத்திரியில் ஒரு மாதம் படுக்கையில் கிடந்தேன். மீண்டும் ஊர் திரும்பினேன்.

மாலதி என்னைக் காண வந்தபோது வீட்டில் நான் மட்டுந்தான் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். காலடி ஓசை கேட்டுத் திரும்பி அவளை இமையாது நோக்கினேன். அவளும் வாய் திறக்கவில்லை. கண்கள் கலங்கின.

''மாலதி!''

''உம்......''

''நீ ஏன் இப்படிக் கலங்குகிறாய்?''

''உங்கள் வலது - கை போய் விட்டதாமே!''

''அதற்காகவா?''

''அதைப்பற்றி நான் குறையாக நினைக்கவில்லை. நினைக்க என் மனம் இடந் தராது.''

''பின்னே?''

''நீங்களும் அதைக் குறையாக நினைக்கக் கூடாது. அது உங்களுக்குக் குறையாகத் தெரியக் கூடாது. அதற்காக நான் எதையும் செய்யத் தயாராய் இருக்கிறேன்.''

''மாலதி! என்ன சொல்கிறாய்?''

''உங்களுக்கும்எனக்கும் கல்யாணம் நடப்பதாகப் பெரியவர்களும் பேசினார்கள். நாமும் ஆசைப்பட்டோம். இப்போது இப்படி ஆகி விட்டதால் நான் மனம் மாறி விடுவேன் என்று நினைக்காதீர்கள். என்னிடம் பழைய அன்பில் துளிக்கூடக் குறைவுண்டாகவில்லை.''

''மாலதி! நான் வேறு விதமாக முடிவு செய்து விட்டேன். எனக்காக-என் மன நிம்மதிக்காகச் சொல்கிறேன்; நீ என்னை மறந்து விடு. என்னைவிடச் சிறந்தவனாகத்தான் உனக்கு மாலையிடுகிறவன் இருக்க வேண்டும்.''

''அவசரப்பட்டு எதுவும் முடிவு செய்யாதீர்கள். நான் காத்திருக்கிறேன்.....''

மாலதி போய் விட்டாள். எதையோ பெரிதாகச் சாதித்து விட்ட நினைப்பில் நான் உட்கார்ந்திருந்தேன். ஆயினும் ஒரு சமயம் என் தங்கை மாலதியை அழைத்து வந்து எனக்கு அறிமுகப்படுத்தியதும், மாலதி நாணத்தினால் முகம் கவிழ்ந்ததும் என் மனக் கண்ணெதிரே படமாக விரிந்தது.

கடைத் தெருவின் கோடிவரையில் நடந்து விட்டு நான் திரும்புவதற்கும் மீனாட்சி மாமியும் மாலதியும் கடை வாசலில் வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. மூவரும் கடைத் தெருவைக் கடந்து, பஸ் நிற்குமிடத்தை அடைந்தோம். நல்ல வேளையாக அதிக நேரம் சோதிக்காமல் பஸ் வந்தது. அதில் இடமும் கிடைத்து ஏறிக் கொண்டோம்.

படியேறிய களைப்பே மீனாட்சி மாமிக்கு மூச்சு வாங்கியது. முதல் சுற்று முடிவிலேயே மாமி உட்கார்ந்து விட்டாள். மாலதியும் நானும்மட்டுமே சுவாமிமலைக் கோவிலின்மேல் பிராகாரத்திலே நடந்தோம். எனக்கு முன்னால் சென்றுகொண்டிருந்த மாலதி நின்றாள்.

''மணி!''

''மாலதி!''

''என்னை - என்னுடைய அன்பை-நீங்கள் குறைவாகத்தானே நினைத்து விட்டீர்கள்? அப்படி நினைக்கலாமா நீங்கள்?''

''இல்லை மாலதி. அப்படி இல்லவே இல்லை.''

''அப்படியானால் அன்றைக்கு நினைத்தபடி தான்-நான் யாரையோ மணந்து சுகமாக வாழவேண்டுமென்று-இப்போதும் நினைக்கிறீர்களா? நினைக்க முடிகிறதா உங்களால்?''

''மாலதி.....''

''மனதிலேதான் எல்லாம் இருக்கிறது. உங்களைப்பற்றி ஒரு நாளும் என்னால் குறையாக நினைக்க முடியாது. இப்போ சொல்லுங்கள்.''

''என் மனசால் ஒரு சமயம் பெருமையோடு நினைத்துப் பேசினதே பிறகு மனக்குறையாகப் போனது நிஜந்தான் மாலதி!''

பேச்சற்று இருவரும் நின்றோம்.

காற்று சுழன்று அடித்தது. வலதுதோளில் இருந்து மேல் துண்டு நழுவிற்று. எனக்கு அதைப்பற்றிய உணர்வுகூட இல்லை. மாலதியே அதைச் சரி செய்தாள்.

''மாலதி உன் துணை யில்லாவிட்டால் என் மனமும் ஊனமாகத்தான் இருக்கும்.''

''வாருங்கள் போகலாம்!''

கோவிலை விட்டு வெளியே வரும்போது மீனாட்சி மாமியிடம் மாலதி சொன்னாள்:

''பாட்டி, அன்றைக்குப் பெண் பார்த்து விட்டுப் போனார்களே அவர்களிடம் மேலே எதுவும் பேச வேண்டாம்.''

''என்ன மாலதி?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள் மீனாட்சி மாமி.

''ஆமாம் பாட்டி! ஆறு மாசங்களுக்கு முன்னால் பேசி நின்று போச்சே என் கல்யாணம், அந்தக் கல்யாணத்தைத்தான் இப்போது நடத்த வேண்டும்.''

மீனாட்சி மாமி என்னையும் மாலதியையும் மாறி மாறிப் பார்த்தாள். நானோ மாலதியையே பார்த்தேன்.




## ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம்

"'இந்திய சுயராஜ்யம்', குழந்தையின் கையிலும் கொடுக்கக் கூடிய ஒரு புத்தகம் என்பதே என் கருத்து. இது, துவேஷத்துக்குப் பதிலாக அன்பு நெறியைப் புகட்டுகிறது; பலாத்காரத்துக்குப் பதிலாகத் தன்னலத் தியாகத்தை உணர்த்துகிறது; மிருக பலத்துக்கு எதிரே ஆன்ம பலத்தின் உயர்வை வலியுறுத்துகிறது." இவ்விதம் காந்திஜி நமது இந் நூலைக் குறித்து எழுதியுள்ளார். "இந்திய சுயராஜ்யம் என்ற உங்களது நூலை அதிக அக்கறையுடன் படித்தேன். ஏனெனில், அதில் விவாதிக்கப்பட்டுள்ள 'சாத்துவிக எதிர்ப்பு' இந்தியாவுக்கேயன்றி, மனித வர்க்கம் முழுமைக்குமே மிகவும் முக்கியமானதாகும்" என்று பேரறிஞர் டால்ஸ்டாய் காந்திஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார். இந்த அரிய நூல் மேனாட்டு அறிஞர்களின் சிந்தனைகளைக் கிளறிய வரலாறும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூல நூலின் சுவையும் வேகமும் குன்றாத விதத்தில் ஸ்ரீ ரா. வேங்கடராஜுலு இதை மொழி பெயர்த்திருக்கிறார்.

கிடைக்குமிடம்: தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, தல்லாகுளம், மதுரை. விலை: ரூ. 1—25.

## ஆரோக்கியத் திறவுகோல்

"இந்தப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ள ஆரோக்கிய விதிகளை அனுஷ்டிக்கக் கூடியவர்கள், ஆரோக்கிய வாசலின் கதவுகளைத் திறக்கும் உண்மையான ஒரு திறவுகோல் இதில் இருப்பதைக் கண்டு கொள்ளுவார்கள். அப்புறம் அவர்கள் அன்றாடம் டாக்டர்கள், வைத்தியர்கள் ஆகியவர்களின் வீட்டுக் கதவுகளைத் தட்டிக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் ஏற்படாது" என்று மகாத்மா காந்தி இந்த நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். மனிதன் உலகில் பிறந்ததற்குக் காரணம், காற்று, தண்ணீரின் ஜீவசக்திகள், மனிதனின் உடலையும் ஒழுக்கத்தையும் அறிவையும் பாழாக்கும் லாகிரி வஸ்துக்களின் தீமை, பிரம்மசரியத்தின் பெருமை, எளிய இயற்கை வைத்திய முறைகள் போன்ற ஆரோக்கிய வாழ்வுக்கு அவசியமான பல விஷயங்களையும் காந்திஜி பரிசீலனை செய்து, எவரும் ஆட்சேபிக்க முடியாதபடி தமது முடிவுகளைத் தெரிவித்துள்ளார். காந்திஜி ஆங்கிலத்தில் எழுதியுள்ள இந்த நூலைத் தமிழில் தெளிவாகவும் நளினமாகவும் ஸ்ரீ கு. அழகிரிசாமி மொழிபெயர்த்துள்ளார்.

கிடைக்குமிடம்: தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, மதுரை. விலை: 50 ந. பை.

## விஞ்ஞானமும் சமுதாயமும்

தத்துவ ஞானி பெர்ட்ராண்ட் ரஸ்ஸலின் நுண்ணறிவு உலகப் புகழ் பெற்றது. இந்த நூலில் விஞ்ஞான வளர்ச்சியினால் உலகம் எப்படிப் பாதிக்கப்படுகிறது என்பதைத் தமக்கே உரிய சாதுரியமான யுக்தி வாதங்களுடன் எடுத்துச் சொல்கிறார் அவர். விஞ்ஞானத்தை மக்களின் நன்மைக்கே பயன் செய்து கொள்ளலாம்; எனினும் நடைமுறையில் அது 'ஸ்தாபனங்களின் முக்கியத்துவத்தைப் பெருக்கி...தனி ஆளின் வாழ்க்கையைப் பாதிக்கிறது' என்கிறார்.

சோவியத்திலுள்ளது போன்ற சோஷலிஸ சர்வாதிகாரத்துக்கு விஞ்ஞானச் செயல்முறையே காரணம் என்று நிலைநாட்டுபவர், கீழ்க்கண்ட சிந்தனையைத் தூண்டும் சொற்களைக் கூறுகிறார்: "அதிகாரிகளின் ஆதிக்கத்தை ஒரு வரம்புக்குள் வைத்திருந்தால் ஒழிய அபேதவாதம் (சோஷலிஸம்) எனப்படுவது, ஒரு சில அலுவலாளர்களுக்குப் பதிலாக வேறு சில அலுவலாளரைக் கொள்வதே என்று ஆகிவிடும். முன்பு முதலாளிகளிடம் இருந்த அதிகாரம் அனைத்தும் அலுவலாளர்களைச் சேர்ந்து விடும்...பெயரளவில் முழு ஜனநாயகம் இருக்கும்போது கூட அலுவலாளர்களுக்கு எதிராகப் பொதுமக்கள் எதுவும் செய்ய முடியாது." "அறிவிலிகளின் வீண் கட்டுப்பாட்டிலிருந்து நமது ஆற்றலையும் முயற்சியையும் விடுவிப்பதற்கான வழிகளை நாம் கண்டு பிடிக்க வேண்டும்." நவீன விஞ்ஞான முன்னேற்றம் காரணமாகச் "சிறு வயது முதற் கொண்டே உணவு முறையினாலும், கருத்துகளைப் புகட்டுவதினாலும், அரசாங்க ஆணைகளினாலும், அதிகாரிகள் விரும்பும் இயல்புகளை மக்களிடத்தில் உண்டாகும்படி செய்துவிடலாம்" என்றும் "போலீஸைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் மட்டும் உங்களிடம் இருந்துவிட்டால் உண்மையையே உற்பத்தி செய்யும் ஆற்றலைக்கூட விஞ்ஞானம் அளிக்கிறது" என்றும் ரஸ்ஸல் கூறியிருப்பது தனிமனிதன் தனது சுதந்திரத்தை எவ்வளவு உன்னிப்புடன் கண்காணித்துக் கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவுறுத்துகிறது.

தமிழாக்கம்: அ. நடராசன்; விற்பனையாளர்கள்: வள்ளுவர் பண்ணை, 137, பிராட்வே, சென்னை—1; விலை: ரூ. 4.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

### பனித்துளியின் புதுமையையும், காலை ஸ்நானத்தின் சுகத்தையும் நாள் முழுவதும் அளிக்கும்!




புத்துணர்ச்சியும், இதமும் அளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உங்கள் உடம்பின் மேல் தூவிக்கொள்ளுங்கள். அது வியர்வையை சீக்கிரத்தில் உறிஞ்சி, மிக உஷ்ண காலத்திலும்கூட ஸ்நானத்திற்குப்பின் உண்டாகும் புத்துணர்ச்சியை நாள்முழுவதும் நிலைக்கச் செய்யும். எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் விளங்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்*

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். ஏ.வில் இணைக்கப்பெற்றது)

Registered No. M. 4332
Registered as a Newspaper in Ceylon